
என் பெயரிலே எங்க அப்பா நிறைய பணம் போட்டிருக்கா லக்ஷ்மி விலாஸ் பாங்கிலே


நான் லக்ஷ்மி விலாஸ் பாங்கில் சேமிக்கிறேன்.


எங்களது சுபிட்சமான எதிர்காலத்திற்கு லக்ஷ்மி விலாஸ் பாங்கில் சேமிக்கிறோம்.

# கல்கி – நற்பணி மன்றம்

## வாசகர் பரிசுத் திட்டம்

நற்பணி ஏதேனும் செய்யவேண்டும் என்ற அவா, நல்லெண்ணம் எல்லோரிடமும் இருக்கவே செய்கிறது. ஆனால் உடம்பு வணங்குவதில்லை, ஒத்திப் போடுகிறோம். நாட்கள் செல்கின்றன, வாய்ப்புக்கள் நழுவுகின்றன.

இதை அனுமதிக்கலாமா? கூடாதல்லவா?

இதோ, உங்களை ஊக்குவிக்கஒரு பரிசுத் திட்டம்!

ஏழை மாணவனொருவனுக்கு மலிவான விலையில் ஒரு பேனா வாங்கித் தரலாம்; ஒரு மணி நேரம் அதிகப்படி உழைத்துவிட்டு ஓவர் டைம் கோராமலேயே வீடு திரும்பலாம். ஒரு நண்பனுக்குக் குடும்பக் கட்டுப்பாட்டின் அவசியத்தை உணர்த்தி சஸ்திர சிகிச்சைக்கு அழைத்துப் போகலாம்; ரத்த தானம் செய்யலாம்; அந்தகனான ஒரு மாணவனுக்குப் பாடம் படித்து உதவலாம்; ஆஸ்பத்திரி நோயாளிகளுக்குப் பிரசாதம் விநியோகிக்கலாம்; சாலையைக் கடக்க ஒரு வயோதிகருக்கு உதவலாம்; எதிர் வீட்டு அம்பிப் பயலுக்குப் புரியாத கணக்குப் பாடத்தைச் சொல்லிக் கொடுக்கலாம் – இப்படிச் சிறிதும் பெரிதுமாய் எத்தனையோ நற்பணிகள் இல்லையா?

இது போன்று இந்த வாரம் நீங்கள், உங்கள் வசதி, தகுதிக்கு ஏற்பச் செய்த ஏதேனும் ஒரு நற்பணியைக் கீழே உள்ள கூப்பனில் சுருக்கமாக நாலு வரிகளில் எழுதுங்கள். கூப்பனை வெட்டி எடுத்து உறையிலிட்டு, **"கல்கி – நற்பணி மன்றம், தபால் பெட்டி எண் 3169, சென்னை-600032** என்ற விலாசம் எழுதி, போதிய தபால் தலை ஒட்டித் தபாலில் சேர்த்துவிடுங்கள்.

இவ்வாறு சேரும் உறைகளை மாதம் ஒரு முறை குவித்துக் கிளறிய பின் அதிர்ஷ்டசாலியான ஒருவரைப் பொறுக்கி எடுப்போம். அந்த ஒருவருக்கு உஷா தையல் மிஷின் பரிசாகக் கிடைக்கும். வேறு 50 அதிர்ஷ்டசாலிகளுக்குத் தலா ரூ. 10 பரிசு கிடைக்கும். இந்த 51 நபர்களின் பெயர்களும் விலாசங்களும் கூடுமானால் அவர்களது புகைப்படங்களும் அவர்கள் செய்த நற்பணிகளும் கல்கியில் பிரசுரமாகும்.

ஒவ்வொரு வாரமும் செய்த நற்பணி பற்றிய குறிப்பு அடங்கிய கூப்பன்களை மாத முடிவில் மொத்தமாக ஓர் உறையிலிட்டு அனுப்புவதைக் காட்டிலும் தனித் தனியே ஒவ்வொரு வாரமும் அனுப்புவதன் மூலம் நீங்கள் பரிசு பெறுவதற்குரிய வாய்ப்பு அதிகரிக்கிறது என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

உறையில் கூப்பனைத் தவிர வேறு எதுவும் வைக்கக் கூடாது.

ஆகஸ்டு மாதத்துக்கு முடிவு தேதி: செப்டம்பர் 22ந் தேதி.

**கல்கி நற்பணி மன்றம்**

இவ்வாரம் (ஆகஸ்டு 3–9)

நான் செய்த நற்பணி:

கையெழுத்து: தேதி: ______________________

பெயர்: ______________________

விலாசம்: ______________________

______________________

______________________



# Kalki Shopping Page

நாடெங்கும் புகழ் பெற்றவை

**பாலாஜி**

*அரவை மெஷின்கள்*



இரண்டு வருட
உத்திரவாதமுடையது

**அருணா & கோ**

479, T. H. ரோடு,
சென்னை-600 021
போன் : 552728

1, நரசிங்கபுரம் தெரு,
சென்னை-600 002
போன் : 844251

---

எழில்மிகு வண்ணங்களில்
அழகுப் பொருளாக ஆக்கப்பட்டு
ஆடிவரும் தென்றலையும்
தவழ்ந்துவரும் பூங்காற்றையும்
உங்களுக்கு அள்ளித்தரும்
ஒரே ஃபேன் வெஸ்டேர்லி

நான்குவித வண்ணங்களில் கிடைக்கிறது



# வெஸ்டெர்லி

ஃபேன்களில் சிறந்தது
தனித்தன்மை வாய்ந்த சோக்
ரெகுலேட்டர் உங்களுக்கு
30/ வரை மின்சாரச்செலவை
மிச்சப்படுத்துகிறது.

இன்றே

வெஸ்டேர்லி ஃபேன்களை வாங்கிடுவீர்!

---

நவசக்தி நிலையத்தாரின்
உன்னதத் தயாரிப்பு!



**திருஷ்டி நிவர்த்தி யந்திரம் - (ரூ. 42)**
**திருஷ்டி நிவர்த்தி டாலர் - (ரூ. 35)**

(மும்மூர்த்தி அம்சம் கொண்டது)
(பூஜையில் வைத்தது)

- லாரி, கார், ஸ்கூட்டர் ஆகிய வாகனங்களின் விபத்துக்களைத் தடுக்க —
- கறவைப் பசுக்கள் கறவை குறையாமல் பலன்தர —
- வீடு, தொழிற்சாலை, மற்றும் வியாபார ஸ்தலங்கள் செல்வமுடன் விருத்தியடைய —
- கண் திருஷ்டியால் ஏற்படும் உடல் உபாதைகள் வாராமலிருக்க —

உறுதுணையாக இருக்கும் சக்திமிக்க சாதனம்!
தபாலில் பெற 25% முன்பணமனுப்பி வி.பி.பி.யில் பெறலாம். விரிவான கேட்லாக்கு பெற 25பை தபால் தலையுடன் எழுதவும்.

**நவசக்தி நிலையம்**
153, லாயிட்ஸ் ரோடு, கோபாலபுரம்,
சென்னை-600 086. (போன் : 812013)

---

மல்லிகைபோல் மென்மையாகத்
துல்லியமாய் மாவரைக்க....

**"கணேஷ் & சௌபாக்யா"**
மாவரை இயந்திரங்கள்



- உத்திரவாத உழைப்பு
- கவர்ச்சிகர அமைப்பு

தயாரிப்பாளர் :

**ஸ்ரீ கணேஷ் இண்டஸ்டிரீஸ்**
119, சத்தி ரோடு, ஈரோடு-1.
(போன் : 73513)

இருபது கோடி ரூபாய் செலவில் ரோகிணி விண்வெளிக்கு அனுப்பப்பட்டு விட்டது என்று பத்திரிகையில் செய்தியைப் பார்த்த வசந்தி தன் வீட்டுக்கு அருகில் உள்ள பேராசிரியர் பலராமன் அவர்களிடம் ஓடிவந்து கேட்கிறாள்:

''புரொபசர் மாமா! நாம் ராக்கெட் விட்டிருக்கோமாமே மாமா! அப்படின்னு என்ன? அதைப் பற்றி விரிவாச் சொல்லுங்களேன்!''

''ஓ! சொல்றேனே'' என்கிறார் ஐ. ஐ. டி.யில் பணியாற்றும் விமானப் பொறியியல் பேராசிரியர் பலராமன்.



# விண்வெளியில் 'ரோஹிணி'

நேரம் காலை 8 மணி 3 நிமிடம் 45 செகண்ட். தேதி வெள்ளிக் கிழமை, ஜூலை 18, 1980. இடம்: ஸ்ரீஹரி கோட்டா.

இந்தச் சுப நேரத்தில் நம்முடைய செயற்கைக் கோள் ஏவும் கலம் அல்லது ராக்கெட் (Satellite Launch Vehicle-SLV-3) புது செயற்கைக் கோளான ரோஹிணியைச் சுமந்து கொண்டு விண்வெளியை நோக்கிச் சென்றது. இந்தச் செயற்கைக் கோளின் எடை 35 கிலோ கிராம். இதை விண்வெளிக்குச் சுமந்து சென்ற கலத்தின் எடை 17 டன். இந்தக் கலம் தூக்கிச் சென்ற எரிபொருளின் எடை 13 டன். இந்தக் கலத்தில் உள்ள ராக்கெட் நாலு பகுதிகளைக் கொண்டது. இந்த நான்கு பகுதிகளும் விண்வெளியில் பல உயரங்களில் பிரிந்து விடக் கடைசியாக விடுவிக்கப் பெற்ற செயற்கைக் கோள் ரோஹிணி பத்திரமாக பூமியைச் சுற்றி வந்து கொண்டிருக்கிறது. இது நம் விண்வெளி விஞ்ஞானிகளின் ஒரு மாபெரும் சாதனை.

இதனால் எல்லாம் நமக்கு என்ன உபயோகம்? ஏன் இந்தப் பிரயாசை? ஏன் இவ்வளவு பணச் செலவு என்று கேட்கலாம்.



செயற்கைக் கோளினால் பலவித உபயோகங்கள் உண்டு. உலகத்தில் செயற்கைக் கோள்களை அனுப்பிய நாடுகளில் நாம் 6வது இடத்தைப் பெற்று விட்டோம் என்ற பெருமை மாத்திரம் அல்ல. இவற்றைக் கொண்டு வானிலையை ஆராயலாம். மேகங்களின் சஞ்சாரம், பருவ மழை, புயல் — இவை பற்றி முன் கூட்டியே நாம் அறிய முடியும். விவசாயிகள், மீனவர்கள், கப்பல் தலைவர்கள், இவர்களுக்கு எல்லாம் முன்னெச்சரிக்கை தரலாம்.

இ/ண்டாம் வகை கோள்களால் பூமியில் உள்ள நீர், கனிஜ, தாவர வளங்களைக் கணிக்க முடியும். நம் நாட்டில் இதற்காக Remote Sensing Agency என்ற ஸ்தாபனம் நிறுவப்பட்டிருக்கிறது.

மூன்றாவது வகை செயற்கைக் கோள்களை நாம் ஒரு செய்தித் தொடர்புச் சாதனமாக உபயோகிக்கலாம். இந்த மாதிரி உதவும் கோள்களை ''COMSAT'' (Communication Satellite) என்று சொல்வார்கள். இவற்றின் உதவியால் சென்னையில் உள்ள ஒருவர் நியூயார்க்கில் உள்ள ஒருவரோடு தொலை பேசியில் உடனுக்குடன் தொடர்பு கொண்டு பக்கத்தில் இருந்து பேசுவது போல் பேச முடியும். அடுத்தபடியாக உலகின் எந்தப் பகுதியில் என்ன நிகழ்ச்சி நடந்தாலும் அதனை டி.வி. படம் பிடித்ததும் அலைகளைச் செயற்கை கோளுக்குச் செலுத்தி அங்கிருந்து உலகின் வேறு எந்த ஊரில் உள்ள டி. வி. நிலையமும் கிரகித்துக் கொண்டு ஒலிபரப்பலாம். விம்பிள்டன் டென்னிஸோ, மாஸ்கோ ஒலிம்பிக்ஸோ எது வானாலும் உடனுக்குடன் பார்க்கச் செயற்கைக் கோள்களே வழி செய்கின்றன.

செயற்கைக் கோள்களை துஷ்பிரயோகமும் செய்யலாம். உதாரணம், எதிரி நாட்டினை வேவு பார்க்கவும், எதிரி நாட்டை அல்லது எதிரியின் கோளை அழிக்கவும் பயன்படுத்தப் படும் கோள்கள்.

எல்லாம் சரிதான். ஆனால் ஏன் நாம் பிறருடைய செயற்கைக் கோள்களை உபயோகப்படுத்தக் கூடாது? இத்தனை செலவில் நாமே தயாரிக்கணுமா? என்றால், அந்தக் கோள்கள் அந்தக் குறிப்பிட்ட தேசத்தின் உபயோகத்துக்காகச் செலுத்தப்பட்டதாக இருக்கும். என்ன இருந்தாலும் நமக்கு ஏன்று சொந்த வீடு இருப்பது போல் ஆகுமா வாடகை வீடு? ஐ. நா.வின் ஆதரவிலும் சில கோள்கள் விடப்பட்டுள்ளன. நாம் அவற்றை உபயோகப்படுத்திக் கொண்டுதான் இருக்கிறோம். ஆயினும் நம்முடைய சொந்தக் கோளை விண்வெளியில் செலுத்தும் ஆற்றலை நாம் பெறுவது நல்லதே. அதில் ராணுவ ரீதியான முக்கியத்துவம் உள்ளது. செயற்கைக் கோளைச் செலுத்த சக்தி வாய்ந்த ராக்கெட் தேவை. ஆளில்லாத ராக்கெட்டை இங்கிருந்தபடியே நம் விருப்பப்படி திசை திருப்பிக் கொண்டு செல்லும் ஆற்றலையும் நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும். அதாவது செயற்கைக் கோளை விண்வெளிக்கு அனுப்பும் ஆற்றலை நாம் பெற்றுவிட்டோமென்றால் கண்டம் விட்டுக் கண்டம் பாயும் ஆளில்லாத ஏவுகணைகளைத் தயாரிக்கும் ஆற்றலையும் அவற்றைத் தொலைவிலிருந்தபடியே திசை திருப்பி வழி நடத்திச் செல்லும் திறமையையும் பெற்று விட்டோம் என்று அர்த்தம். இந்த ஏவுகணைகள் குண்டுகளைத் தாங்கிச் சென்று தாக்க முடியும். எதிரி நாட்டிலிருந்து வரும் ஏவு கணைகளை இடைமறித்துத் தாக்கி அழிக்கவும் முடியும்.

ராக்கெட் தயாரிப்பில் முக்கியமான விஷயம் இதில் உள்ள எரிபொருளின் தன்மை. இது திடப் பொருளாகவோ அல்லது திரவப் பொருளாகவோ இருக்கலாம். நம் SLV-3 ராக்கெட்டில் திடநிலையில் எரிபொருள்கள் உபயோகப்படுத்தப்படுகிறது.

**ஏன் இந்த ராக்கெட்டில் நாலு கட்டங்கள் உள்ளன?**

ராக்கெட்டை விண்வெளிக்கு அனுப்ப அசுர பலம் உபயோகப்படுத்தப் படுகிறது. இந்தப் பலம் பூமியின் ஈர்ப்புச் சக்தியை எதிர்ப்பதுடன் காற்றின் எதிர்ப்புச் சக்திக்கும் ஈடு கொடுக்க வேண்டும். இதை ஒரே ஒரு கட்ட ராக்கெட் மூலம் நிறைவேற்ற வேண்டுமானால் மிகவும் அதிகப்படியான எரிபொருளைத் தூக்கிச் செல்ல வேண்டும். அப்போது கலத்தின் எடை அதிகமாகும். இந்த அதிக எடையை விண்வெளிக்குக் கொண்டு செல்ல இன்னும் அதிக அசுர பலம் உள்ள ராக்கெட் தேவைப் படும். இதைத் தவிர்க்க இவற்றைப் பல கட்டங்களில் அமைக்கின்றனர். இதனால் கணிசமான அளவில் எரிபொருளின் எடையைக் குறைக்கலாம்.

SLV-3ல் முதல் கட்ட ராக்கெட் 18 கிலோ மீட்டர் உயரத்தில் கலத்திலிருந்து பிரிந்து எரிந்து விட்டது. இரண்டாவதும் மூன்றாவதும் முறையே 72 கி. மீ. 140 கி. மீ. உயரங்களில் பிரிந்து எரிந்துவிட்டன. 4வது கட்டம் ரோஹிணியை பூமியைச் சுற்றி வரும் பாதையில் 260 கி. மீ. உயரத்தில் விட்டு விட்டுத் தனியே பிரிந்து விட்டது. இப்போது ரோஹிணி உலகைச் சுற்றி வரும் வேகம் மணிக்கு 28000 கி. மீ. இது பூமியை ஒரு நீள் வட்டப் பாதையில் சுற்றி வருகிறது. இப்பாதை பூமியிலிருந்து அதிக தூரம் 600 கி. மீ. குறைந்த தூரம் 285 கி.மீ. ஒரு தடவை பூமியைச் சுற்ற 90 நிமிஷம் ஆகிறது.

இந்தச் செயற்கைக் கோளின் எடை ஆர்யபட்டா, பாஸ்கராவுடன் ஒப்பிடும்போது மிகக் குறைவு. நாம் தயாரித்த அந்த விண்கோள்களை ருஷ்ய ராக்கெட்டுகள் விண்வெளிக்கு எடுத்துச் சென்றன. ரோஹிணியை அனுப்புவதில் பெற்ற வெற்றி நாம் விண்கோள் விஞ்ஞானத்தில் மட்டுமல்ல, ராக்கெட் விஞ்ஞானத்திலும் முன்னேறியுள்ளோம் என்பதை உணர்த்துகிறது. பெரிய சாதனைகளுக்கு அடிக்கல் நாட்டியாயிற்று.

பேட்டி: **சலன்**

படம்: **பார்த்தி: —பி. ஐ. பி.**



# புதிய தலைமுறை



✕ திரு எஸ். ராஜாராம்



✕ திரு எஸ். ராதாகிருஷ்ணன்



✕ திரு சித்தார்த்த வி. பூச்

**திரு சித்தார்த்த வி. பூச்**
(வனவிலங்குப் புகைப்படக் கலை)

**ப**டத்தில் காணும் இவருடைய உடைக்கும் தொழிலுக்கும் சம்பந்தமே இடையாது. பல மணி நேரங்கள் கழுத்தளவு தண்ணீரில் அசையாமல் நின்று கொண்டோ மரங்களில் ஏறி அமர்ந்து கொண்டோ காத்துக் கிடந்தால் பறவைகளின், வன விலங்குகளின் அபூர்வமான படம் கிடைக்கும். பல நேரங்களில் முயற்சியெல்லாம் வீணாகலாம்.

மிகச் சின்ன வயதிலேயே ஏற்பட்ட இந்த ஆர்வம் பதினாறு வயதில் தீவிரமாயிற்று. விளைவு, கல்லூரிப் படிப்பில் நாட்டம் ஏற்படாது போயிற்று.

இந்தியா முழுமையிலும் உள்ள மலைகள், காடுகளில் அலைந்து திரிந்துள்ள திரு பூச் பாதுகாப்புக்காகத் துப்பாக்கி எடுத்துச் செல்வது கிடையாது. அமெரிக்காவின் தேசியப் பூங்காக்களைச் சுற்றிப் பார்த்திருக்கிறார். ''இந்திய வன விலங்குகள்'' பற்றி ஒரு நூல் உருவாகிக் கொண்டிருக்கிறது.

விஞ்ஞான முறைப்படி வன விலங்குகளை ஆதரித்து, அபூர்வமான இனங்களை அழிந்து போய்விடாமல் பாதுகாக்கும் அமெரிக்கர்களை வியக்கும் திரு பூச், சாஸ்திரியமான சங்கீதத்தில் மிகுந்த ஈடுபாடு உடையவர். சைகால், எஸ். ஜி. கிட்டப்பா பாடல்களில் மயங்குகிறவர்.

''சர்வதேச அளவிலே கூட நம்முடைய திரு எம். கிருஷ்ணனைவிட உயர்ந்தவராக இந்த வனவிலங்குப் புகைப்படக் கலையில் யாரையும் சொல்ல முடியாது'' என்று கூறும் திரு பூச் இந்துப் பத்திரிகைக்கும் சில வெளி நாட்டுப் பத்திரிகைகளுக்கும் கட்டுரைகள் எழுதுகிறார்; படங்களும் தருகிறார்.

**திரு எஸ். ராதாகிருஷ்ணன்**
(சமயச் சொற்பொழிவு)

**ம**ணலி ரசாயன உரத் தொழிற்சாலையில் பணியாற்றும் இந்த மெக்கானிகல் இஞ்சினீரிங் பட்டதாரி இளைஞரைச் சமயச் சொற்பொழிவுக்குத் தூண்டியவை ராஜாஜியின் வியாசர் விருந்தும், சக்கரவர்த்தி திருமகனும் தான்! பின்னர் புலவர் கீரனின் சொற்பொழிவுகளில் திளைத்து அவரையே மானசீக குருவாய்க் கொண்ட ஏகலைவன் இவர்.

''ஏன் என்னுடைய எதிரொலியாகவே நீ இருக்க வேண்டும்?'' என்று திரு கீரன் ஒருமுறை கேட்டதற்கு மதிப்பளித்துத் தமக்கென ஒருபாணியை அமைத்துக்கொண்டிருக்கிறார்.

சிறு வயது முதலே திவ்ய நாம பஜனைகளில் ஈடுபாடு கொண்ட திரு ராதாகிருஷ்ணன் ஹரிகதா மாங்குடி சிதம்பர பாகவதரின் மகன் வழிச் சந்ததி!

உபந்நியாசங்களில் கிடைக்கும் வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியை காமகோடி பீடத்தின் அறப் பணிகளுக்குக் காணிக்கையாக்கும் இவருக்குள்ள ஒரேயொரு மனக் குறை: எத்தனையோ மருத்துவ நிபுணர்கள் முயன்றும் இதுவரை தீர்க்க முடியாத ஓர் உடல் கோளாறு. வியர்வைச் சுரப்பிகள் வேலை செய்யாததால் எவ்வளவு கடும் வெப்பமானாலும் இவருக்கு வியர்வையே வெளிப்படாது. உடல் நிலையைச் சமனப்படுத்த அப்போது ஈரமான உடையை அணிந்துகொண்டு சமாளிக்கிறார்.

**திரு எஸ். ராஜாராம்** (சமூக சேவை)

**செ**ங்கல்பட்டு மாவட்டம் காட்டாங்குளத்தூர் – மங்களபுரியில் உள்ள சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமத்தின் நிருவாகியான இவர் பி. காம். பட்டம் பெற்றவர். தம்முடைய 22ம் வயதிலிருந்தே சேவாஸ்ரமம், இலவச மருத்துவமனை, ஆரம்ப, உயர்நிலைப் பள்ளிகளின் பொறுப்பை ஏற்று நடத்தும் இவருக்கு இப்போது 28 வயதாகிறது.

ஏழை மக்களுக்கு உதவக் கைத்தொழில் பயிற்சிப் பள்ளி போன்ற பல பிரிவுகளையும் தொடங்கியுள்ளார்.

பதினாறு ஏக்கர் நிலப்பரப்பில் ஒரு சின்னக் குடிசையில் மூன்றே குழந்தைகளுடன் திரு ராஜாராமின் பெற்றோர் நிறுவிய இந்தச் சேவாசிரமத்தை அவர்களுடைய மறைவுக்குப் பின் இவர் மேலும் விரிவுபடுத்தியுள்ளார். ''சகி மண்டலம்'' என்ற பெயரில் ஆசிரமக் குழந்தைகளுக்கான உணவு விடுதி ஒன்று கட்டப்பட்டுள்ளது.

வர்மா ஸ்கூல் டிரஸ்ட் வழங்கியுள்ள 25 தையல் யந்திரங்களும், காட்ரெஜ் நிறுவனம் வழங்கியுள்ள 20 தட்டெழுத்து இயந்திரங்களும் இங்குள்ள தொழிற்பயிற்சிப் பள்ளியில் பயன்படுத்தப்படுகின்றன.

— சுப்ரபாலன்

# 1980 அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி முடிவு

நடுவர் குழாம்
20–7–80 அன்று கூடியது

நடுவர்கள் :

1. **ராஜலட்சுமி ராமமூர்த்தி** (கோமகள்)
2. **எம். ஆர். எம். சுந்தரம்** (சுந்தா)
3. **வி. இராமமூர்த்தி** ஐ. ஏ. எஸ்.
4. **கோவி. மணிசேகரன்**
6. **ஆசிரியர் கல்கி**

இருதிப் பரிசீலனைக்கு வந்த கதைகளைப் படித்துப் பார்த்து பின்வரும் கதைகளை நடுவர்கள் பரிசுக்குரியனவென்று தேர்ந்தெடுத்தனர். இவர்கள் ஒவ்வொருவரும் ரூ. 500/- பரிசு பெறுகின்றனர்.

1. சமூகச் சிறுகதை :

**"ஒரு தவம் தொடர்கிறது"**

எழுதியவர்: பானுமதி ராஜகோபாலன் பிளாட் 40, வெங்கடேஷ் நகர் விருகம்பாக்கம், சென்னை-92

2. விஞ்ஞானச் சிறுகதை :

**"காதலியை வெறுக்கிறேன்"**

எழுதியவர்: ஆர். சேகர், கோவிந்தன்பாளையம், புதுச்சத்திரம் அஞ்சல் 637018 சேலம் மா. வ.

3. நகைச்சுவைச் சிறுகதை :

**"உலக மாமியார்களே, ஒன்று சேருங்கள்"**

எழுதியவர்: "சாருகேசி" (எஸ். விசுவநாதன்) பிளாட்: 3, 18, அபிராமபுரம் முதல் தெரு, சென்னை-600 018

4. சரித்திரச் சிறுகதை :

**"சுதந்திரப் பசி!"**

எழுதியவர்: கிருஷ்ண குரு, 78-ஏ, தேவாங்கப் பிள்ளையார் கோவில் தெரு, செவ்வாய்ப்பேட்டை, சேலம்-637 002

5. மர்மச் சிறுகதை :

**"மனைவியைக் காணவில்லை"**

எழுதியவர்: மூர்த்தி (ஏ. ராமமூர்த்தி) 71, நாராயணப் பிள்ளை தெரு, பொமனூர், சேலம்-636 007

பரிசு பெற்றவர்களுக்கு நடுவர் குழுவினரும், கல்கி ஸ்தாபனத்தினரும் வாசகர்களும் நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கின்றனர். பிரசுரத்துக்கு ஏற்கப்பட்ட இதர கதைகளின் விவரம் அடுத்த இதழில்.

படம் : பரிசுபெறும் நகைச்சுவைச் சிறுகதையின் ரசமான ஒருகட்டத்தை கோவி. மணிசேகரனும் சுந்தாவும் அலச மற்றவர்களுக்கு ஒரே சிரிப்பு! இடமிருந்து வலமாக: மணிசேகரன், கல்கி ஆசிரியர், வி. ராமமூர்த்தி, கோமகள், கல்கி உதவி ஆசிரியர் பி. எஸ். மணி, சுந்தா. **புகைப்படம்: உத்ரா**



# ஒரு தவம் தொடர்கிறது...

பானுமதி ராஜகோபாலன்

காரைக்காலை விட்டு பஸ் கிளம்பியது. இன்னும் சிறிது நேரத்தில் மங்களத்தைச் சந்திக்கப் போகிறோம் என்ற நினைவே பாஸ்கரின் உடலில் இன்பப் புல்லரிப்பாகப் பரவி இதயத்தில் தேனாக வழிந்தது. பார்த்த உடனேயே அடையாளம் கண்டு கொள்வாளா? இருபது நீண்ட வருடங்களாயிற்றே. பார்த்ததும் முதல் கேள்வி என்னவாக இருக்கும்? ''அப்பா சௌக்கியமா?''

ஆட்டுக் குட்டியின் மேல் மோதாமல் இருக்கச் சட்டெனக் குலுங்கலுடன் நின்று பின் கிளம்பிய பஸ் நீரவி சாலையில் திரும்பியது. பாஸ்கர் பரபரப்படைந்தான். ஆயிற்று. இன்னும் சில நிமிஷ நேரங்களே இருக்கின்றன மங்களத்தைச் சந்திக்க. திடீரென அவனுள் ஒரு கேள்வி: போகிற முயற்சி பலிக்குமா? தன்னைக் கண்டதும் சீறுவாளா? அல்லது வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக் கொள்வாளா?

இருபது வருடங்களுக்கு முன் வீட்டில் நடந்த ரகளை அவனுக்கு லேசாக நினைவிருந்தது. காரணம் புரியவில்லை. அப்பா இடித்த புளியாக அலட்சியமாக உட்கார்ந்திருக்கிறார். மங்களத்தின் அப்பா கோபத்துடன் ஏதோ கத்துகிறார். கையை வீசி வீசி இங்கும் அங்குமாக நடந்து கொண்டே அப்பாவைத் திட்டுகிறார். அம்மா பயத்துடன் சமையல் அறைக் கதவருகில் நிற்கிறாள். மங்களம், அவன் பெரியம்மா, அதாவது தந்தையின் முதல் மனைவி தூணில் சாய்ந்து கண்ணீர் வடிக்கிறார். இறுதியில் பெரியம்மாவின் தந்தை பெரியம்மாவின் கையைப் பிடித்துத் தரதரவென்று இழுத்துக் கொண்டு வெளியேறுகிறார். அந்தப் பதற்ற நிலையிலும் பெரியம்மா தன்னை ஒரு விநாடி பாசத்துடன் பார்த்து, அப்பா உட்கார்ந்திருந்த நாற்காலியோடு ஒட்டிக் கொண்டு இனம் புரியாத பயத்துடன் நின்று கொண்டிருந்த தன் கன்னத்தை வழித்து முத்தமிட்டுக் கொண்டு போனது மனத்தில் படமாக விரிந்தது. இதுவரை என்னை மடியில் போட்டுக்கொஞ்சி, ஓடிப் பிடித்து விளையாடி, சாதம் ஊட்டி, ஒரு கணமும் பிரியாமல் இருந்த பெரியம்மா இனி இந்த வீட்டுக்கு வரவே மாட்டாள் என்ற உண்மை மட்டும் அவன் மனத்தில் ஏக்கமாகப் படிந்தது.

இதுவரை அந்த ஏக்கம் எங்கோ ஒரு மூலையில் படிந்திருந்தது. இப்போது விசுவரூபமெடுத்துப் பெரியம்மாவைக் கையோடு


அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி
ரூ 500/- பரிசு பெறும் சமூகச் சிறுகதை

அழைத்து வந்துவிட வேண்டும் எனத் துடிப்பாக எழுந்து இதோ கொண்டு வந்துவிட்டது.

பஸ் நிரவி போலீஸ் ஸ்டேஷன் வாசலில் நின்றது. பாஸ்கர் இறங்கிக் கொண்டான். கையிலிருந்த சீட்டைப் பார்த்தான். 'மங்களம், தையல் டீச்சர், சிவன் கோவில் தெரு, நிரவி.'

''பாஸ்கர்! தொடர்பு விட்டுப்போய் எத்தனையோ வருஷமாச்சு! உன் பெரியம்மா மங்களம் இப்போ எங்கே இருக்கிறாளோ?'' நாலு வருஷங்களுக்கு முன்பு தற்செயலாகக் கிடைத்த விலாசத்தைக் கொடுக்கும்போதே சித்தப்பா சந்தேகத்துடன் எச்சரித்தார். ''பழைய விலாசம் இது! உன் முயற்சி பலிக்குமோ என்னமோ? தூங்கிக் கிடக்கிற எரிமலையை நீ உசுப்புவது விஷப்பரீட்சை தான்!.''

பாஸ்கர் சிரித்தான். ''இது விஷப் பரீட்சை இல்லே சித்தப்பா. விஷத்தை முறிக்கிற பரீட்சை. வீட்டை விட்டுப் போறப்போ பெரியம்மா வடிச்ச கண்ணீர் இன்னும் என் மனசை உறுத்திண்டே இருக்கு. அதைத் துடைக்க வேண்டியது என் கடமை இல்லேயா? அவ வயத்திலே நான் பிறக்காவிட்டாலும் அவ மடியிலே அஞ்சு வருஷம் வளர்ந்தேனே அதை மறக்கலாமா?''

''இத்தனை வருஷமும் இல்லாத பாசம் இப்ப எதுக்குடா திடீர்னு பொங்கித்து?''

''இதுதான் சரியான சந்தர்ப்பம், பெரியம்மாவை இங்கே கூட்டிண்டு வர. எனக்கு வேலை கிடைச்சுடுத்து. இனி நான் சொந்தக் காலிலே நிற்பேன். இப்போ உரிமையோட நான் பெரியம்மாவை கொண்டு வெச்சுக்கலாம் இல்லேயா? சித்தப்பா! அப்பா பெரியம்மாவுக்குத் தாலி கட்டினாரே தவிர வேறே எந்தச் சுகத்தையும் தரலே. இத்தனை நாளும் பெரியம்மா அப்பாவை விட்டுப் பிரிஞ்சே வாழும்படியாயிடுத்து. அப்பா பெரியம்மாவுக்குச் செஞ்ச பாவத்தை மகன் என்ற முறையிலே நான் துடைக்கலாமே?''

சித்தப்பாவுக்கு மனம் நெகிழ்ந்தது. ''உன்னைப் பாராட்டறேன் பாஸ்கர். உன் குணத்துக்கும் அண்ணா குணத்துக்கும் ரொம்ப தூரம். விஷ் யூ ஆல் தி பெஸ்ட்'' என்று தட்டிக் கொடுத்து அனுப்பினார்.

''என்ன சார் வேணும்?'' நீண்ட நேரம் போலீஸ் ஸ்டேஷன் வாசலிலேயே பாஸ்கர் நிற்பதைப் பார்த்துவிட்டு வந்து கேட்டார் ஒரு போலீஸ்காரர்.

''வந்து... மங்களம் டீச்சர்னு... இங்கே சிவன்கோவில் தெருவிலே...''

''அந்தம்மாவா சார்?'' என்று கேட்கும் போது அவர் குரலில் வழிந்த மரியாதையே மங்களத்துக்கு ஊரில் இருக்கும் மதிப்பைப் புலப்படுத்தியது. ''இதோ! இதுதான் சார் சிவன் கோவில் தெரு. இடது கைப் பக்கம் கடைசியிலே பச்சைத் தட்டி போட்ட வீடுதான் சார்.''



பாஸ்கர் நன்றி தெரிவித்து விட்டு நடந்தான். பச்சை தட்டிப் போட்ட வீடு. உள்ளே போகலாமா என்று யோசிக்கும்போது ஒரு சிறுமி கை நிறைய தைத்த துணிகளுடன் வெளிவந்தாள்.

''பாப்பா! மங்களம் டீச்சர் இருக்காங்களா?''

''ஓ! இருக்காங்களே!'' என்றவள், ''டீச்சர்! உங்களைத் தேடிண்டு யாரோ வந்திருக்கா'' என்று உட்புறம் திரும்பிக் குரல் கொடுத்து விட்டு அவனைக் கடந்து சென்றாள்.

தன்னைப் போல் காலத்தால் தேய்ந்து கடகடத்துக் கொண்டிருந்த தையல் மிஷினை நிறுத்திவிட்டு அவசரமாக எழுந்தாள் மங்களம்.

''யார்! உள்ளே வாங்கோ!'' பரபரப்புடன் துணிகளை ஒருப்புறமாகத் தள்ளிவிட்டு மர நாற்காலியைத் தூசு தட்டிப் போட்டாள்.

வாசலில் தயங்கிக் கொண்டிருந்த பாஸ்கர் மெதுவாக உள்ளே வந்தான்.

''அம்மா! என்னைத் தெரியலையா?''

மங்களம் மூக்குக் கண்ணாடி வழியாக அவனை ஊடுருவ முயன்று தோற்றாள்.

''நான்தாம்மா பாஸ்கர். நீங்க தூக்கி வளர்த்துக் கொஞ்சிய உங்கள் பிள்ளை அம்மா.'' 'உங்க'வில் அவன் கொடுத்த அழுத்தம் அவளைச் சிலிர்க்க வைத்தது. காலில் விழுந்த பாஸ்கரைத் தூக்கி நிறுத்தினாள். ஆனந்தக் கண்ணீர் பார்வையை மறைத்தது.

''உங்களை மறக்க முடியுமா அம்மா? வரக் கூடிய நேரம் இப்பத்தான் வந்தது.''

''ஊரிலே எல்லோரும் சௌக்கியம் தானே?''

அவன் முகத்தையே கண்கொட்டாமல் பார்த்தவாறு 'உம்' என்று முனகினான்.

''இப்படி வந்து உட்காருடா குழந்தை.'' தன்னருகில் அவனை அமர்த்திக் கொண்டு ஸ்டவ்வைப் பற்ற வைத்தாள். ''என்ன படிக்கிறே?''

''டாக்டர் படிச்சு முடிச்சாச்சு அம்மா. மெட்ராஸிலே ஆஸ்பத்திரியிலே டாக்டரா ஜாயின் பண்ணி ஒரு மாசமாச்சு.''

''உன்னை டாக்டர் படிப்பு படிக்க வைக்கணும்னுதான் உங்கப்பாவுக்கு ஆசை. சின்ன வயசிலே சர்க்குச்சியாலே ஊசி போடறேன்னு எல்லோரையும் குத்துவே. அப்பவே உன் அப்பா சொல்வார். பாஸ்கர் டாக்டர் ஆகப்போறான்னு.'' ஸ்டவ்வில் உருளியைப் போட்டு ரவாவை நெய்யில் வறுத்தாள். ''சிவந்துடுத்தா பார் பாஸ்கர். கண்ணே தெரியல்லே. வயசாயிடுத்து பார். உன் அம்மா ராதாவும் என்னை மாதிரி தலை நரைச்சுக் கண்ணாடி போட்டிண்டுதானே இருக்கா?''

பாஸ்கர் ''உம்'' என்று முனகினான் முந்திரிப் பருப்பைக் கிள்ளியபடி.

மங்களம் தளதளவென்று ரவா கேசரி கிளறினாள். ஏலமும் நெய்யுமாக வீடே மணத்தது. ''பாஸ்கர் உங்கப்பாவுக்கு ரவா

கேசரின்னு உயிர். அதுவும் நான்தான் கிளறணும். மங்களம் பண்ணி ரவா கேசரி சாப்பிடணும்னு வாய்க்கு வாய் சொல்லு வார். தித்திப்புன்னு ரொம்பப் பிடிக்கும். இப்பவும் அப்படித்தானு? அவர் சாப்பிட்டிருக்கிற தித்திப்புக்கு டயபடீஸ் வந்திருக்கும், இல்லையா?''

மங்களம் வாணலியில் எண்ணெய் ஊற்றினள். ''பாஸ்கர், உனக்குத் தெரியுமோ தெரியாதோ அவரோட வாட்ட சாட்டமான உடல் அமைப்பையும் பேச்சையும் பார்த்துத்தான் நான் மயங்கினேன். அச்சு அதே போலவே இருக்கே நீயும். கல்யாணம் ஆயிடுத்தோ உனக்கு?''

''இன்னும் இல்லே அம்மா.''

''நல்ல ஜாதகமாப் பார்த்துப் பண்ணச் சொல்லு. என்னை மாதிரி வேண்டாம்.'' எண்ணெயில் கொதித்த பஜ்ஜி அவள் மனத்தைப் பிரதிபலித்தது.

''உனக்குத் தெரிஞ்சிருக்க முடியாது. போனதும் அப்பாவைக் கேட்டுப்பார். எப்படி நடந்தது தெரியுமா எங்க கல்யாணம்? திருஷ்டி பட்ட மாதிரி ஒரே வருடத்தில் ஏதோ ஒரு ஜுரத்திலே எனக்குக் காலும் கையும் இழுத்துடுத்து. ராஜ வைத்தியம் பார்த்தார் என் அப்பா. வேலூர், மெட்ராஸ்னு போய் ஆயிரக் கணக்கிலே செலவழிச்ச என் உடம்பு பழையபடி ஆக நாலு வருஷம் ஆயிடுத்து. அப்புறம்தான் உன் அப்பா நினைப்பே வந்தது. ஆரம்பத்திலே வந்து பார்த்தவர் அப்புறம் வரவே இல்லே. நேரே போய் விசாரிச்சுண்டு வந்து சொன்னர் என் அப்பா. எனக்குத் தேவலையாகவே போகாதுன்னு முடிவு செஞ்சுண்டு உன் அம்மா ராதாவை இரண்டாம் கல்யாணம் பண்ணிண்டுட்டாராம் உன் அப்பா. இடி விழுந்த மாதிரி போயிடுத்து எனக்கு.''

''அப்புறம் என்னம்மா செஞ்சேள் கோபப் பட்டேளா?''

மங்களம் மௌனமாகத் தலையசைத்தாள். ''கோபப்பட்டு என்னடா பிரயோசனம்? இல்லற வாழ்க்கை கை நழுவிப் போயிடுத்து. கையிலிருந்த வடையைக் காக்கா தூக்கிண்டு போயிடுத்து. அவ்வளவுதான் அதிருஷ்டம்னு ஒதுங்கிக்கிறதா தீர்மானம் பண்ணிண்டேன். என் அப்பாதான் கேஸ் போடுவேன் அது இதுன்னு குதிச்சார். விஷயம் கேள்விப்பட்டு அவரே என்னைத் தேடி வந்தார். நாலு வருஷத் தனி வாழ்க்கை அவரைச் சபலத்துக்கு உள்ளாக்கிடுத்தாம். என்னை மன்னிச்சுடு. நீயும் வந்து அவகூட இரு. அவளுக்கும் சம்மதம்தான்' அப்படீன்னு கெஞ்சினர். நான் உடனே புறப்பட்டு வந்துட்டேன்.'' மங்களம் தட்டில் கேசரியையும் பஜ்ஜியையும் எடுத்து வைத்தாள். ''சாப்பிடுடா கண்ணு!''

பாஸ்கர் பேசாமல் அவள் முகத்தையே பார்த்தான்.

''ஊம்... அப்படியும் வாழ விட்டுதா விதி? என் அப்பா ரூபத்திலே வந்து பழி வாங்கிடுத்தே. நான் வரப்போ உன் அம்மா வயத்திலே மூணு மாசக் கருவா இருந்தே நீ. உன்னைப் பெத்ததுதான் அவளே





தவிர வளர்த்தது பூரா நான்தான். என் அப்பாவுக்கு இது பிடிக்கல்லே. உன்னைக் கரிச்சுக் கொட்டினர். பொறுத்துப் பொறுத்துப் பார்த்த உன் அப்பா கூடா என்னமோ கேட்டுட்டார். உடனே தரதரன்னு என்னை இழுத்துண்டு வெளியே வந்துட்டார் என் அப்பா. அப்போ ஆரம்பிச்சதுதான் இந்த தவ வாழ்க்கை.''

மங்களம் அவன் சாப்பிடுவதையே கவனித்தாள். ''பாஸ்கர்! உனக்கு நினைவிருக்கா? இன்னிக்கு ஆவணி மூலம். உன் அப்பாவுக்குப் பிறந்த நாள்.'' சாட்டையடி பட்டதுபோல் நிமிர்ந்தான் பாஸ்கர்.

''ஆமாண்டா. அவரோட ஒவ்வொரு பிறந்த நாள் அன்னிக்கும் ரவா கேசரிதான் பண்ணுவேன். இந்தத் தடவை நீயே வந்துட்டே. ரெட்டிப்புச் சந்தோஷம் எனக்கு.'' கைநிறைய அள்ளி வாயில் போட்டுச் சுவைத்தான் மங்களம்.

பாஸ்கர் கண்ணீரை மறைக்கச் சட்டென எழுந்து கை கழுவப் போனான்.

''ஏண்டா பாஸ்கர்! ரிடையர் ஆயிட்டார் இல்லையா? எப்படிடா சும்மா உட்கார்ந்திருக்கார்? ஒரு நிமிடம் வீட்டிலே கால் தங்காதே அவருக்கு? ஆச்சு இன்னும் நாலு வருஷத்திலே அறுபதாம் கல்யாணம் வரது இல்லையா?'' மங்களம் காப்பி கலந்துகொண்டு வந்தாள்.

பாஸ்கர் முள் மேல் நிற்பது போல் தவித்தான்.

சர முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டு சிமிழிலிருந்து குங்குமத்தை எடுத்து அப்பாவின் புகைப்படத்தைப் பார்த்துக்கொண்டே தன் நெற்றியில் பதித்துக் கொண்டாள்.

பாஸ்கர் ஆற்றாமையுடன் உதட்டைக் கடித்துக்கொண்டான்.

பாஸ்கருக்கு இனியும் அங்கு தாமதிக்க முடியாது என்று தோன்றியது. ''அம்மா! நான் வரட்டுமா?''

மங்களம் திடுக்கிட்டாள். ''என்னடா அதுக்குள்ளே?''

''லீவு இல்லேம்மா. உடனே போகணும்'' எழுந்து நின்றான்.

''சரிடா, அடிக்கடி வந்து பார் இந்த அம்மாவையும். நீ டாக்டர், உனக்கே புரியும். எனக்கு கேன்ஸர் ஆரம்பிச்சிருக்காண்டா.''

பாஸ்கர் சட்டென்று நிமிர்ந்தான். ''நிஜமாவாம்மா?''

''ஆமாண்டா பாஸ்கர். மிஞ்சிப் போனு இரண்டு வருஷம் உயிரோடு இருக்கலாமாம். அதுக்கு மேலே தாக்குப் பிடிக்காதாம். அதுக்குள்ளே.... அதுக்குள்ளே... உன் அப்பாவை ஒரு தடவை பார்த்துடணும்னு ஆசை.''

பாஸ்கர் அவள் கைகளில் முகத்தைப் புதைத்துக் கேவிக் கேவி அழுதான். மடை திறந்தது போல் கண்ணீர் பிரவகித்தது.

மங்களம் வறட்சியுடன் சிரித்தாள். "நான் வரமாட்டேண்டா பாஸ்கர். நான் அங்கே வரவே மாட்டேன். சந்தோஷமா இருக்கேன். எதுக்காக நான் அங்கே வந்து ஒரு துயரத்தை உருவாக்கணும்? எனக்கு உன் அப்பாவைப் பார்க்கணும்னு இல்லேடா. இருபது வருஷமா அவரை மனசாலே பார்த்துண்டே இருக்கேன். மழை பெஞ்சா அவருக்கு உடம்புக்கு வந்துடுமோன்னு கவலைப்படுவேன். தீபாவளின்னா நிறைய ஸ்வீட் பண்ணி அவர் திங்கற மாதிரி மகிழ்ந்து போவேன். இன்ன வயசிலே அவர் கிழவர் ஆயிருப்பார், அவரோட உடம்பு இந்த மாதிரி மாறியிருக்கும்னு கற்பனையிலேயே அவரோடவாழ்ந்துண்டுதாண்டா இருக்கேன். மிஞ்சி மிஞ்சிப் போனா ரெண்டே வருஷம். இத்தனை காலம் வாழ்ந்தவள் சொச்ச காலமும் இதே போலவே அவரோட வாழ்ந்துட முடியாதா என்ன?"

பாஸ்கர் அழுவதை மறந்து அவளையே வெறிக்கப் பார்த்தான். அவள் நெற்றிக் குங்குமம் தீயாக மாறி ஜொலித்தது.

ஒரு பொட்டலத்தை அவன் கையில் கொடுத்தாள்.

"ரவா கேசரிடா. உன் அப்பாவுக்கு."

"அம்மா!" என்று அலறினான் பாஸ்கர்.

"ஏண்டா கத்தறே? அதான் சொன்னேனே. அவர் என்னை ஒதுக்கிட்டாலும் அவர் என் கணவர் இல்லேன்னு ஆயிடுமா? நான் மானசீகமா அவரோட வாழ்ந்துண்டு தாண்டா இருக்கேன். இனியும் என் ஆயுள் முடிகிற வரையிலும் வாழ்ந்துட்டுச் சுமங்கலியாத்தாண்டா சாவேன்." மங்களத்தின் தழுதழுத்த குரல் கேவலாகத் தொடர்ந்தது.

பாஸ்கருக்குத் தாங்க முடியவில்லை. "அம்மா! நான் கிளம்பறேன் அம்மா!"

"உன்....உன் ...அப்பா கிட்டே சொல்லுடா. அவர் சஷ்டியப்த பூர்த்தி அன்னிக்கும் நான் உயிரோட இருந்தா — ரவா கேசரி பண்ணுவேன்னு சொல்லு... எனக்கு கேன்ஸர்னு சொல்லிடாதே.. வயசான உடம்பு. அதிர்ச்சியைத் தாங்க முடியாது."

பாஸ்கர் ஓட்டமும் நடையுமாக பஸ்ஸ்டாப்பை நோக்கி விரைந்தான்.

• • •

**வா**சலில் ஈசிச் சேரில் உட்கார்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்த சித்தப்பா, "பாஸ்கர்! என்னடா? மங்களம் மன்னி இருந்தாளா? அந்த விலாசம் தானா? பார்த்தியா?" என்றார்.

பேச்சுக்குரல் கேட்டு ராதா வெளியே வந்தாள். பாஸ்கர் தாயின் முகத்தைப் பார்த்தான். பெரியம்மா போலவே கண்ணாடி அணிந்த தோற்றம். ஆனால் ஒரு வித்தியாசம். பெரியம்மா நெற்றியில் பெரிதாகச் சுடர் விட்ட குங்குமம்; அம்மாவின் நெற்றியில் மெல்லிய விபூதிக் கீற்று. விபூதி மட்டுமே.

ஓவென்று கதறிக் கொண்டே அப்பாவின் புகைப்படத்தில் முகத்தைப் பதித்துக்கொண்டான் பாஸ்கர்.

"சித்தப்பா! அப்பா செஞ்ச பாவத்துக்குப் பிராயச்சித்தமா, அவர் காலம் ஆனதுக்குப் பிறகு நானாவது பெரியம்மாவை அழைத்து வந்து என்னோட சுகமா இருக்க வெச்சிக்கலாம்னு நெனைச்சேன் சித்தப்பா. ஆனால் அவ வாழ்ந்திண்டிருக்கிற தவ வாழ்க்கையைக் கலைக்க மனமில்லாமே திரும்பி வந்துட்டேன்."

"என்னடா சொல்றே நீ?" புரியாமல் கேட்டார் சித்தப்பா.

"அப்பா இறந்து போனதே பெரியம்மாவுக்குத் தெரியல்லே சித்தப்பா. சுமங்கலியாகவே வாழ்ந்திண்டிருக்கா."

சங்கடமாக நெளிந்தார்கள் சித்தப்பாவும் ராதாவும்.

"ரெண்டு வருஷத்துக்கு முன்னாலே அவளுக்கு லெட்டர் போட்டோமே. அது கிடைக்கல்லையா?" — ஈனகரத்தில் கேட்டாள் ராதா. "இப்பவும் நீ தெரிவிக்கல்லையா?"

"இல்லே அம்மா. தெரிவிக்கவே வேண்டாம்." உறுதியுடன் கூறினான் பாஸ்கர்.

"அதெப்படிடா?...." முடிக்க முடியாமல் திணறினார் சித்தப்பா.

"சித்தப்பா! வயசான காலத்திலே பெரியம்மாவை வசதியா வாழ வைக்கணும் என்கிறதுக்காகத்தான் நான் கிளம்பிப் போனேன். இங்கே வந்தா அவளுக்கு வெளி வாழ்க்கை வசதியாத்தான் இருக்கும். ஆனா அவ மனசு வறண்டுடும். பெரியம்மா மனசளவிலே அவரோட வாழ்ந்திண்டுதான் சித்தப்பா இருக்கா. வருங்காலக் கற்பனைகளையும் மனசிலே தேக்கி வெச்சிண்டிருக்கா. பெரியம்மாவைப் பொறுத்த மட்டிலே அது ஒரு தனி உலகம். அங்கே அவளும் அவளோட தவத்துக்குக் காரணமான அப்பாவும்தான் இருக்கா. நான் உண்மையைச் சொன்னா அவளோட மானசீக வாழ்க்கை சிதைஞ்சுடும். அப்பா புற வாழ்க்கையை அழிச்சார். மகன் வந்து அக வாழ்க்கையையும் அழிச்சுட்டான்னு பேர் வராமே இருக்க, பேசாமலே கிளம்பி வந்துட்டேன். பெரியம்மாவுக்குக் கான்ஸராம். அதிகமாப் போனா ரெண்டே வருஷம். இத்தனை நாள் மாதிரி அவ மானசீகமா வாழ்ந்துட்டு அவ விரும்பற மாதிரி சுமங்கலியாவே உயிர் விடட்டும். நாம வாழ்ந்தது நிஜ வாழ்க்கை. அதிலே அப்பாவோட உடம்புக்கு அழிவு வந்தது. அவ வாழறது மானசீக வாழ்க்கை. அந்த நினைவு உருவத்துக்கு என்னிக்குமே அழிவு கிடையாது சித்தப்பா."

மேலே பேசுவதற்கோ விவாதிப்பதற்கோ சந்தர்ப்பமே அளிக்காமல் மாடி ஏறிச் செல்லும் பாஸ்கரையே பார்த்துக்கொண்டு திகைத்துநின்றார்கள் ராதாவும் சித்தப்பாவும்!

---



தேள் 1: "அந்தத் திருடனைப் போய்க் கொட்டட்டுமா...?"
தேள் 2: "எதுக்கு?"
தேள் 1: "தேள் கொட்டிய திருடன் எப்படி முழிக்கிறான்னு பார்க்கணும்!"
-ஜொத்துக்கடவு ரவி

1980 ஆகஸ்டு 3
ரௌத்திரி ஆடி 19
மலர்: 39 இதழ்: 1



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# பிறந்த நாள்!

மூப்பத்தெட்டு ஆண்டுகளாக இந்தப் பத்திரிகையினை ரட்சித்து வந்துள்ள காவல் தெய்வமாம் விநாயகப் பெருமானை மனப்பூர்வமாகப் பிரார்த்திக்கிறோம்:

''கல்கி நேயர்களின் இல்லங்கள் தோறும் மகிழ்ச்சி பொங்கட்டும், ஆரோக்கியம் நிலவட்டும், சுபிட்சம் பெருகட்டும், கருணை சுரக்கட்டும், அறிவொளி ஓங்கட்டும். இலக்கிய - கலை ரசனைகள் சிறக்கட்டும், நாட்டுப்பற்று வளரட்டும், மனிதாபிமானம் வெல்லட்டும், உழைப்பார்வம் உயரட்டும்.

''இதற்கெல்லாம் கல்கி என்றும் துணைபுரியும் நிலையில் செழிக்கட்டும்.''

❋ ❋ ❋

நாளுக்கு நாள் கல்கி புத்துணர்ச்சி பெற்றுப் புது மெருகுடன் வெளிவந்து கொண்டிருப்பதாக ஆனந்தத்துடன் ஏராளமான வாசகர்கள் கடிதங்கள் எழுதி வருகிறார்கள். அவர்கள் அளித்து வரும் உற்சாகத்துக்கு நன்றி; குறைகள் தென்பட்டால் சாடவும் இவர்கள் தயங்குவதில்லை. இது மேலும் ஊக்கமளிப்பதாக உள்ளது!

இலக்கிய ரீதியிலோ அரசியல் ரீதியிலோ பொருளாதார, சமுதாய ரீதியிலோ கல்கி எந்த ஒரு கட்சி, கொள்கை அல்லது கோட்பாட்டினைச் சார்ந்து இருப்பதை நாம் விரும்பவில்லை. பத்திரிகைக்கென்று ஒரு அபிப்பிராயம் இருந்தாலும் மாற்றுக் கருத்துக்களுக்கும் இடம் தரவேண்டும் என்றே ஆசைப்படுகிறோம். வாதப் பிரதிவாதங்களை யொட்டி கல்கி நேயர்கள் நல்லது கெட்டதைத் தாங்களே உணர்ந்தறிய வேண்டுமென்று விரும்புகிறோம்.

❋ ❋ ❋

இந்த ஆண்டு மலரைக் கல்கி நேயர்கள் கரங்களில் பணிவுடனும் பெருமிதத்துடனும் சமர்ப்பிக்கிறோம்.

மணக்கோலம், சென்ட்ரல், மதுரநாயகி போன்ற உன்னத நாவல்களை கல்கி நேயர்கள் மறந்திருக்க முடியாது. அவற்றை உங்களுக்கு அளித்த பி.வி.ஆர், சென்னை பொது மருத்துவமனையை நிலைக்களனாகக் கொண்டு நூதனமான நாவல் புனைந்திருக்கிறார். அது உருக்கமான காதல் ஓவியமாகவும் திகழ்கிறது. முதல் இதழிலே அறிமுகமாகும் மூவர் து காரெக்டரும் எவ்வளவு நுல்லியமாக, ரசமாகச் சித்திரிக்கப்படுகின்றன! கூடவே ஜி.ஹெச்சின் சித்திரிப்பும் ஆரம்பமாகி விடுகிறது. எழுதி எழுதிப் பழகிய பண்பட்ட கரத்துக்கு மாருதியின் ஜீவ களை ததும்பும் ஓவியங்கள் பக்கபலமாய் நிற்கின்றன.

குழந்தைகள் மட்டுமின்றி எந்த வயதினரும் ஆவலோடு படித்து வரும் விதமாக விறுவிறுப்பான கதையோட்டமும் மர்மமும் நிறைந்த சித்திரத்தொடர் 007 பாலு இந்த இதழில் தொடங்குகிறது. ஓவியர் வினு தம் ஆற்றலைக் காண்பிக்கிறார்.

கல்கி வாசகர்களுக்கென்றே பிரத்தியேகமாக கராத்தே மணி கராத்தே வகுப்புக்களை நடத்துகிறார். எளிய முறையில் அந்த அரிய தற்காப்புக் கலையைப் போதிக்கும் அவருக்குத் தயாரிப்பாளர் குண்டுமணியும் ஓவியர் ராமுவும் உதவுகிறார்கள்.

சலன் — சும்மா இருக்க மாட்டார் மனுஷன்! ஸ்ரீவித்யா அவர்களை அணுகித் தமது திரையுலக அனுபவங்களைக் கல்கி வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளச் சம்மதிக்க வைத்து விட்டார்! இந்தச் சிந்தனைச் சிதறல்களில் இந்த வாரம் ரஜினி சிக்கியுள்ளார். இன்னும் போகப் போக யார் யார் பெயரெல்லாம் அடிபடப்போகிறதோ!

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்குப் பெரும்பாலும் சமூகச் சிறுகதைகளே வந்தன என்றாலும், விஞ்ஞான, ஹாஸ்ய, சரித்திர, மர்மச் சிறு

கதைகளிலும் பரிசுக்குரிய சிறந்த கதைகளைத் தேர்தெடுக்க முடிந்ததில் அளவற்ற மகிழ்ச்சி கொள்கிறோம். நடுவர்கள், ராமமூர்த்தி ஐ.ஏ.எஸ், சுந்தா, கோமகன், கோவி மணிசேகரன் ஆகியோருக்கு நன்றி.

செம்பியன் தமது பேனா முனையால் முதன்முதலாகச் சரித்திரக் காலத்தைத் தொட்டிருக்கிறார். ஆரம்பம் முதல் இறுதி வரை புயல் வேகத்துடன் வளர்ந்து எதிர்பாராத திருப்பத்துடன் முடியும் முழுநீள நாவல்.

அப்பகுதியில் புயல் என்றால் மற்றொரு பக்கத்தில் சூறாவளியே வீசப் போகிறது! ''சிவாஜி சகாப்தம்'' பற்றி ஆரம்பமாகியுள்ள சர்ச்சையையே குறிப்பிடுகிறோம்!

வாசகர்களுக்கு ஒரு நற்பணி மன்றம் தொடங்கி, பரிசுத்திட்டமும் அறிவித்திருக்கிறோம். சமுதாயத்துக்குத் தங்களால் இயன்ற நற்பணியாற்றிப் பரிசு பெறும் வாய்ப்பினை அடையுமாறு எல்லாரையும் அழைக்கிறோம்.

''காலேஜ் கேம்பஸ்'' என்ற பகுதி விரைவில் ஆரம்பமாகிறது. வாரம் ஒரு கல்லூரியைத் தேர்ந்தெடுத்து அந்தக் கல்லூரி மாணவர்களுக்கென்று இரு பக்கங்களை ஒதுக்கி அதில் தங்கள் ஆற்றலைக் காண்பிக்குமாறு அவர்களைக் கேட்டுக் கொள்ளப் போகிறோம்.

இது எஸ். வி. வி. நூற்றாண்டு. அவர் நினைவுக்கு அஞ்சலி செலுத்தும் முகமாக ஆகஸ்டு 24உ கல்கி நகைச்சுவை சிறப்பிதழாக மலர்ந்து உங்களைக் குலுங்கச் சிரிக்க வைக்கும். தயாரிப்பவர் – அகஸ்தியன்!

இவ்வளவும் இதற்கு அதிகமாயும் பல சிறப்புக்களைத் தாங்கி வரும் கல்கிக்கு நீங்கள் நல்லாதரவு தருவதற்கும் மேலாக ஒரு காரியம் செய்யலாம். அது, இதுவரை கல்கி வாங்காதிருக்கும் ஒரு நண்பருக்கு கல்கியின் அருமைபெருமைகளை எடுத்துக்கூறி அவரை உள்ளூர் ஏஜெண்டிடம் அல்லது சப் ஏஜெண்டிடம் நிரந்தரச் சந்தாதாரராகப் பதிவு செய்து கொள்ளச் செய்வதுதான்.

அவ்வாறு ஒவ்வொரு கல்கி வாசகரும் ஒரு நண்பரை கல்கிக்கு அறிமுகப் படுத்தி வைத்தால் அந்த நண்பரின் நோக்கில் உங்கள் மதிப்பு எஸ். எல். வி. 3 ராக்கெட் உயர்ந்தது போல் விண்ணளாவக் காண்பீர்கள்! ரோகிணியாக எங்கள் இதயத்தை நீங்கள் சதா சுற்றி வந்து கொண்டிருப்பீர்கள்!

---



பெட்ரோல் விலை இவ்வளவு ஏறியிருக்கிறதே அரசாங்க இலாகாக்களும் அதிகாரிகளும் பெட்ரோலைச் சிக்கனமாக உபயோகிக்கிறார்களா என்று நாடாளுமன்றத்தில் திரு ராம் விலாஸ் பாஸ்வான் கேட்ட கேள்வி அமைச்சர் வீரேந்திர பாட்டீலை வீழ்த்தி விட்டது. தொடர்ந்து நாடு பூராவும் உள்ள அரசு வாகனங்கள் எவ்வளவு, அவை எவ்வளவு பெட்ரோலைக் குடிக்கின்றன என்று பாஸ்வான் கணக்குக் கேட்க பெட்ரோலியம் மந்திரி பெட்ரோல் தீர்ந்து போய் நடுவழியில் நின்ற டாக்ஸி போலாகி விட்டார்!

இதைக் கணக்கெடுக்க வேண்டுமென்றால் அதற்கு ஐந்தாண்டுகள் அவகாசம் இருந்தாலும் போதாது என்று கையை விரித்து விட்டார் வீரேந்திரர்.

சும்மா விடுவாரா பாஸ்வான்? ஐந்தாண்டென்ன? ஐம்பதாண்டுகள் ஆனாலும் இந்தப் புள்ளிவிவரத்தைத் தர அரசு அதிகாரிகள் சம்மதிக்க மாட்டார்கள் என்று ஒரு போடு போட்டார்.

தகவல் சேகரிக்க ஐந்தாண்டாகும் என்று பாட்டீல் கூறுவதை ஏற்பதற்கில்லை. பிரதமர் ஓர் உத்தரவு போட்டால் அந்தே நாளில் தகவல்கள் வந்து சேரும். அதனால் அந்தத் தகவலை வெளியிட அரசுக்கு மனமில்லை என்றே நாம் கருத வேண்டியிருக்கிறது. மக்கள் ஆட்சியில் அரசு வாகனங்கள் துஷ்பிரயோகமாகாமல் உள்ளனவா, வரிப்பணம் விரயமாகாமல் இருக்கிறதா என்று அறிய மக்களுக்கு உரிமை உண்டு. அந்த உரிமையை யார் மதிக்கிறார்கள்?

• • •

● மகாராஷ்டிர முதல்வர் திரு அந்துலே இரவு நேரத்தில் பம்பாய் நகரின் மதுக் கடைகளையும் விபசார விடுதிகளையும் சுற்றிப் பார்த்திருக்கிறார். கள்ளச் சாராயம் காய்ச்சப்படுவதையும் அதைச் சுமந்து செல்ல லாரிகள் வருவதையும் கண்டிருக்கிறார். மாறு வேஷத்தில் சென்ற அவருக்கு உயர் போலீஸ் அதிகாரி ஒருவரும் மாறு வேடம் அணிந்து துணை வந்தாராம். நள்ளிரவில் நடந்த இந்த நகர்ப் பரிசோதனையின் நீசா லாபம், போலீஸ் மாமூல் விகிதம் அதிகரிப்பதும் கள்ளச்

## செய்திகள் வாசிப்பது செம்பியன்







இ-காங்கிரஸ் மாநில அரசுகள் திறம்பட இயங்க வேண்டும் என்பதற்காக இந்திரா காந்தி சுற்றுப்பயணம் மேற்கொள்ளப் போகிறார்.

ஆந்திரா பேக்கரி






ஆந்திரா பேக்கரி
சென்னு ரொட்டி!
சுட சுடத் தயார்!





சாராயத்தின் விலை கூடுவதுமாக மட்டுமே இருந்துவிடாது என்று நம்புவோம்!

• • •

• புதிய தொழில் கொள்கையை மத்திய அரசு வெளியிட்டுள்ளது. யதார்த்த ரீதியான அணுகுமுறை சில அம்சங்களில் காணப்படுகிறது.

முக்கியமாக அரசு நிறுவனங்களைச் செல்லப் பிள்ளைகளாகக் கருதி இடம் கொடுத்துக் கொடுத்துக் குட்டிச்சுவராக்கும் போக்குக்கு முடிவு கட்டப்படும் என்று தோன்றுகிறது. 79–80ல் அவை அடைந்த நிகர நஷ்டம் 32 கோடி என்பதைச் சுட்டிக்காட்டிவிட்டு தொழில் அமைச்சர் சரண் அவை திறம்பட இயங்கத் தீவிர முயற்சி மேற்கொள்ளப்படும் என்று அறிவித்திருக்கிறார்.

பல தொழில் நிறுவனங்கள் தங்கள் ஆற்றலை முழுமையாகப் பயன்படுத்தி உற்பத்தியை அதிகரிக்க முடியாமல் அரசு விதித்துள்ள அர்த்தமற்ற தடைகள் நீக்கப்படும் என்று சரண் கூறியுள்ளார்.

குடிசைத் தொழில், சிறு தொழில் பெரிய தொழில் என்ற வேற்றுமையின்றி எல்லாமே சமமான முக்கியத்துவம் பெற்று தேசத்தின் தேவைகளுக்கு ஏற்ப அவை உற்பத்தியைப் பெருக்கவும் அனுமதிக்கப்படும் என்று புதிய கொள்கை அறிவிக்கிறது.

பர்மிட் லைசென்ஸ் இல்லாத-லஞ்ச ஊழலுக்கே வாய்ப்பில்லாத ஒரு சுதந்திரப் பொருளாதாரச் சூழலை இந்திரா அரசு உருவாக்கும் என்று நம்ப இடமில்லை. ஆயினும் பொருளாதாரத்தின் குரல்வளையைப் பிடித்து நெரிக்காமல் மூச்சு விட இப்போது அனுமதித்திருப்பதே பெரிய காரியம்!

நகர்ப்புறப் பொருளாதாரம் மட்டுமின்றி சிற்றூர் — கிராமப் பொருளாதாரமும் வளர்ச்சியுற வசதியாக மாவட்ட ரீதியான அமைப்புக்களை ஜனதா அரசு யோசித்து வந்தது. அதனை இந்திரா அரசு கைவிட்டு விட்டது. கைவிடுவது சுலபம். ஆனால் இதற்கு மாற்று ஏற்பாடாக இதைவிடச் சிறந்த ஏதேனும் ஒரு திட்டத்தை தொழில் அமைச்சர் உருவாக்கி அமல்படுத்தவேண்டும். இல்லையெனில் இந்த அலட்சியப் போக்கினால் நாளாவட்டத்தில் படிப்படியாக உருவாகக் கூடிய அபாயகரமான பின் விளைவுகளை எதிர்நோக்கத் தயாராக வேண்டும்.

• • •

• சென்னையில் உள்ள நமது கோட்டை முந்நூறு ஆண்டு சரிதம் கண்டிருக்கிறது. முந்நூறு ஆண்டுகள் நிரம்பப்பெற்றதை கொண்டாட விழா எடுத்து பிரிட்டிஷ் அரசியையும் அன்னாரது கணவரையும் அதற்கு அழைக்கலாம் என்று தமிழ் நாடு ஆவணக் காப்பகம் திட்டமிட்டுள்ளது. அரசி அழைப்பினை ஏற்பாரா வருவாரா என்பது வேறு விஷயம். ஆனால் அவரை அழைக்க உத்தேசம் என்றதுமே பாரதீய ஜனதா கட்சி அதிர்ச்சியுற்று, ''கூடாது, கூடாது'' என்று அலறுகிறது!

செயின்ட் ஜார்ஜ் கோட்டையின் சரித்திரம் நமது அடிமைத்தனத்தின் சரித்திரமாம்! அதைக் கண்டு நாம் அவமானப்பட வேண்டுமாம்! எனவே கோட்டையின் முந்நூறாண்டு விழாவைக் கொண்டாடுவது தவறாம்! அதற்கு அரசியை அழைப்பது நமது அடிமைப் புத்தியைக் காட்டுகிறதாம்! — பாரதீய ஜனதா கட்சி கூறுகிறது.

அடிமைத்தனத்தின் சரித்திரம்தான், யார் மறுக்கிறார்கள்? கோட்டையின் முந்நூறு ஆண்டு விழாவைக் கொண்டாடாமல் இருப்பதால் அடிமைத்தன சரித்திரம் இல்லாமல் போய்விடுமா? அல்லது கொண்டாடுவதால் நாம் மீண்டும் அடிமைகளாகி விடப் போகிறோமா? பிரிட்டிஷாரிடம் நமக்கிருந்த விரோதம் என்றோ முடிந்துபோன பழங்கதை. இன்று அரசி இங்கு வந்தால் நண்பராக, இந்நாட்டுக்கும் பிரிட்டனுக்கும் உள்ள நட்புறவை வளர்ப்பவராக வரப்போகிறார். அதிலென்ன தவறு? கோட்டையின் பிறந்த நாளை ஏன் கொண்டாடக் கூடாது? அதில் இன்று பறப்பது யூனியன் ஜாக் அல்லவே? மூவர்ணக் கொடி தானே? பழைய சரித்திரத்தை விழா நினைவூட்டுகிறதால்தான் என்ன? மறுபடி உள்நாட்டினருக்கோ அல்லது வெளி தேசத்தவருக்கோ அடிமையாகி விடக் கூடாது என்பதைத்தானே அது உணர்த்தும்?

• • •

• பாரதீய ஜனதா கட்சி அசட்டுத்தனமான எதிர்ப்பு தெரிவிப்பதுடன் நிற்கவில்லை! செயின்ட் ஜார்ஜ் கோட்டை என்பதை ''கட்டபொம்மன் கோட்டை'' என்று பெயர் மாற்றிவிட வேண்டும் என்று ஓர் அபத்தமான யோசனையையும் வெளியிட்டிருக்கிறது! ஒரு பெயர் மாற்றத்தினால் சரித்திரத்தையே மாற்றிவிட எண்ணுகிறது பாரதீய ஜனதா கட்சி!

பொதுவாகவே சாலைகளுக்கோ பாலங்களுக்கோ கட்டிடங்களுக்கோ பெயர் மாற்றுவது சரியே அல்ல. ஒவ்வொரு பெயருக்குப் பின்னாலும் ஒரு ரசமான சரித்திரம் உண்டு. அதனை மாற்றிவிடவோ இருட்டடிப்பு செய்யவோ யாருக்கும் உரிமை கிடையாது. நமது மதிப்புக்குரிய இன்றைய தலைவர்களின் பெயர்களைப் புதிய சாலைகளுக்கு, புதிய கட்டிடங்களுக்கு, புதிய குடியிருப்புக்களுக்கு வேண்டுமானால் சூட்டலாமே யொழிய ஏற்கெனவே உள்ள பெயர்களை அழித்து இவர்களது பெயரைச் சூட்டுவது இவர்களுக்கோ அல்லது சரித்திரத்துக்கோ மரியாதை செய்வதாகாது. வேண்டாத குழப்பங்களைத் தோற்றுவித்ததாகத்தான் முடியும்.

''பாரதீய ஜனதா கட்சி என்று புதுப் பெயர் எதற்கு? பழையபடி ஜனசங்கம் என்றே இருக்கலாமே?'' என்ற யோசனையை ஏற்கக் காரணம் காட்டி மறுத்தபோது காண்பிக்கப்பட்ட புத்திசாலித்தனம் இப்போது அக்கட்சிக்கு எங்கே போயிற்று?

# செலக்ஷனே, செலக்ஷன்!

புத்திசாலியான அந்தப் பெண்
சாரதா'ஸ் பட்டுப் புடவையில் தன் அழகை
கண்டு மயங்கிய வரனின் முகத்தைப் பார்த்ததுமே
தீர்மானித்து விட்டாள் தன் திருமணத்திற்கு வேண்டிய எல்லா
பட்டுப் புடவைகளையும்
சாரதா'ஸிலேயே செலக்ட்
செய்ய வேண்டும் என்று.



# அத்தியாயம் 1

தன் கைக்கடியாரத்தைப் பார்த்த சுவட்டிலேயே சென்ட்ரல் ஸ்டேஷன் மணிக் கூண்டையும் அவன் பார்த்தான். உடனேயே சபித்துக்கொண்டான். கடந்த மூன்று நாட்களாக சென்ட்ரல் 3-35லேயே நின்று கொண்டிருக்கிறது. நல்ல உயரத்தில் இருப்பதால் ஏறி முட்களை அடைய இன்னும் ஓரிரு நாட்களாவது ஆகும்போலிருக்கிறது.

வால்டாக்ஸ் சாலையில் நின்றவன், வேடிக்கை பார்த்து நின்றான். மணி ஆறு இருபத்தைந்து. இன்னும் ஒரு மணி நேரத்துக்கு அப்பாவை அணுக முடியாது. அணுகக் கூடாது. உடம்பு எல்லா சுகங்களையும் அனுபவித்த நாட்களிலே அவர் 'அதிகாலை' எட்டு மணிக்கே எழுந்து, பற்பசையை மறந்து, காப்பியைக் குடித்து, குடித்த காப்பியின் ஆவி முழுதும் வெளியேறுவதற்கு முன் பச்சைப் பாக்கைப் போட்டுச் சுவைத்து, துணைக்கு வெற்றிலையையும் மடித்து மடித்து உள்ளே தள்ளுவார். பாக்கும் வெற்றிலையும் வாயினுள்ளே ஒரு தனிச் கலகலப்புடன் உறவாடும். நரம்புகள் திடீரெனப் புத்துயிர் பெற்று எழும். அணைக்கட்டுக் கால்வாயில் புதுவெள்ளம் தோன்றி ஒரு குஷியுடன் விரைவது போல ரத்தக் குழாய்கள் சுறுசுறுப்பு அடையும். இந்த நிலை வரும் போது மாப்பிள்ளை ராஜாமணி (தொண்ணூறு வயதில் மாமனார் இறந்து போய் ஏழு வருடங்கள் ஆகின்றன. மாப்பிள்ளைக்கும் எருமை மாட்டுக்கும் கிழட்டுத்தனம் கிடையாது. நாளைக்குச் சாகிற எருமை இன்று ஒரு கன்று ஈன்று சிரிக்கும். அறுபத்து நாலு வயதான ராஜாமணி, நேற்று இன்று நாளை முழுதும் மாப்பிள்ளை தான்.) பாலக்காடு தழைப் புகையிலைத் துண்டுகளில் ஒன்றை, சுயம்வரப்பெண்ணின் பயம், பதற்றம், சந்தேகம் போன்ற தவிப்புக்களுடன் தேர்ந்தெடுத்து வாயில் போட்டுக் கொள்ளுவார். வெற்றிலைப் பாக்கு என்ற இரு நதிகளின் சங்கமத்துடன் மலையாளத் தழைத் துண்டு ஐக்கியமாகும்.

அவருடைய இந்த நிலை ஒரு முனிவரின் மோன நிலை மாதிரி. அரை மணி நேரம் கண் மூடிய கோலம். யாரும் அவரைக் கலைக்கக் கூடாது. கலைத்தவர்கள் அதன் விபரீத பலன்களை உடனடியாக அனுபவித்திருக்கின்றனர்.

மொத்தத்தில் மருத்துவ மனையில் ஒரு தனி அறையில் தான் வைத்ததே சட்டம் என்று கொடி கட்டிப் படுத்திருக்கும் அப்பா, மாப்பிள்ளை ராஜாமணியை ஏழரை மணி வரையில் பார்க்கக் கூடாது. பின்னை அது வரையில் என்ன செய்வான்? ஐந்தே முக்கால் மணிக்கே சென்ட்ரல் ஸ்டேஷன் பவுடர் பால் நெஸ்கபேயைக் குடித்தாகி விட்டது. சப்பென்ற,



உயிரற்ற குளியை மறைக்க ஒரு 'கொக்கு' வாசனைப் பாக்கையும் போட்டு ஹிந்து பேப்பரையும் வாங்கியாகி விட்டது. பொழுதை ஓட்டியாக வேண்டுமே? பேப்பரை ஆஸ்பத்திரி வார்டில் டெட்டால் பினாயில் கலவை மணத்தில் ஆர அமரப் படிக்க வேண்டும். இப்போதுதான் குப்பை அள்ளுகிறவர்கள் வந்திருப்பார்கள். அதன் பின்னர் ஒரு பட்டாளம் வரும். வராந்தாவில் ஒரே இரைச்சல். இரவில் ட்யூட்டி பார்த்த நர்சுகள், கண் சிவக்க, அலுங்கிப்போன உடையில் நடந்து போவார்கள். காலைச் சூரியனின் பளபளப்பில் பதில் நர்சுகள் வெள்ளை வெளேரென்ற உடையில் டக் டக்கென்று (இவ்வளவுக்கும் ஓசை எழுப்பாத கான்வாஸ் ஷூஸ்தான்) வந்து கொண்டிருப்பார்கள்.

அவன் ஹிந்து பேப்பருடன் சென்ட்ரலை விட்டு வெளியே வந்தான். ஜெனரல் ஆஸ்பத்திரிக் கட்டிடத்துக்கு முகப்பு இல்லாதது குறையாக இருந்தது. பதக்கம் இல்லாத செயின் போல இருந்தது. அவன் வருத்தப் பட்டான். ஆசிய கண்டத்திலேயே ஓரிரு பெரிய ஆஸ்பத்திரிகளில் இது ஒன்றும். ஆனால் இந்த ஆஸ்பத்திரி கோணு மாணு என்று ஆரம்பிக்கிறது. நெரிசல் சாலையில் பல பஸ் நிலையங்களுக்கு இடையே தேடிக் கண்டு பிடிக்க வேண்டிய நுழைவு வாயில். எப்போதும் ஒரு கூட்டம். உள்ளே அவஸ்தைப்படுகிறவர்களின் சங்கடம் தெரியாமல், அல்லது தெரிந்தும் கவலைப்படாமல் டீ குடித்துக் கொண்டும் புகைத்துக் கொண்டும் நிற்கும் ஒரு கூட்டம்.

வால்டாக்ஸ் சாலைக்கு வந்தவன் அவன் தினசரி பார்க்கும் கூட்டத்தை நினைத்து மனம் சிணுங்கினான். மூன்று முப்பத்தைந்தில் நிற்கும் சென்ட்ரல் ஸ்டேஷன் கடியாரத்தை நினைத்து மனம் கொதித்தான். வந்து இறங்கிய பிரயாணிகளின் குரல்வளைகளைப் பிடித்துக் கசக்கும் ஆட்டோ, டாக்ஸி, குதிரை வண்டிக்காரர்களைச் சபித்தான்.

இவ்வளவெல்லாம் செய்யும் நேரம் நகரவில்லை. மூன்று முப்பத்தைந்திலேயே நிற்பதாகப் பட்டது.

திடீரென்று அவனுக்குத் தெரிந்த ஓர் உருவம் கண்ணில் பட்டது. தலையில் அங்கவஸ்திரத்தால் கட்டப்பட்ட முண்டாசு. சிகப்புக் கரை வேட்டி. தொள தொள வென்று உடம்பில் விழுந்த ஷர்ட்டு. மார்புப் பக்கம் பிளந்து, சமூத்தில் தொங்கும் செயினின் புலி நகத்தைக் காட்டியது. கையில் ஒரு பெரிய பை. பதினைந்து கிலோ புளியை எளிதாக அடைக்கலாம்.

"சாமா!"

# GH

பி.வி.ஆர்

சாமா நின்றான். குரல் வந்த திசையைத் தவிர மற்ற எல்லாத் திசைகளையும் சுழற்றினான். சாமாவுக்கு மூன்று திசைகள். அவன் என்றுமே சரியான திசையைப் பார்த்தது கிடையாது.

''சாமா!'' சொன்னவன் அவன் அருகே சென்றான்.

''அடடே! நீயா? மாப்பிள்ளைக்கு எப்படி இருக்கு? போன சனிக்கிழமை ஊரிலே ஒரே பதற்றம். கல்யாணப் பந்தலே அவிழ்க்கக் கூட ஏற்பாடு ஆயிடுத்து. நான் தான் போன் பண்ணி விசாரிச்சுண்டேன். போன் வந்ததோ?''

''நீ என்ன சொல்றே, சாமா?''

''அப்பா...''

''உயிரோடுதான் இருக்கார்.''

''அவ்வளவு எளிசிலே உன் அப்பா போயிடுவாரடா? இன்னும் எவ்வளவு பாக்கி இருக்கு?''

''நீ எப்ப வந்தே?''

''வந்துண்டே இருக்கேன்.''

''வழக்கம்போல் கேஸ்தானே?... நேரே வக்கீலைப் போய் எழுப்பப் போறியாக்கும்?''

''இந்த வாட்டி கேஸ் இல்லே.''

''பின்னே?''

''ஆபரேஷன்.''

''யாருக்கு?''

''யாருக்கா? எனக்குத்தான்.''

''மூளையா?''

''அதைத்தான் பொறந்தபோதே மருத்து வச்சி கையாலே கிள்ளித் தொப்புள் கொடியோடே கலந்து மண்ணிலே போட்டுட்டாளே.... ஹெர்னியா.''

''யார்?''

''அப்பாவன்று?''

''யார் டாக்டர்?''

''வக்கீல் கோபாலரத்னத்துக்கு ஒரு டாக்டர் பண்ணிஞர். வெண்ணெய் மேலே கோடு இழுக்கிற மாதிரி அந்த டாக்டர் கத்தியை இழுப்பாராம். அவர்தான்.... அது சரி, நீ என்ன வால்டாக்ஸ் ரோடு பிளாட்பாரத்திலே, வாட்டிங் ரூம் புக் பண்ணித் தரவன் மாதிரி நிக்கறே?''

''அப்பா சொத்து ஏதும் எழுதி வைக்கலைன்னு அந்த வேலைதான் செய்யணும்...''

''எல்லாம் நீயா இழுத்துப் போட்டுண்டது.... டேய், ஒண்ணு மட்டும் சொல்லிட்டு ஓடியே போயிடறேன். ஒரு மண்டுவுக்கு பாரத ரத்ன பட்டம் கொடுக்கிறதுன்னு உனக்குத்தான் முதல்லே கொடுப்பா. அப்பறம் பல நூறு வருஷங்களுக்கு வேறு யாரும் கிடைக்க மாட்டா!''

''வருஷா வருஷம் தரட்டும் வாங்கிக் கிறேன்!''

''பின்னே என்னடா? பி.எல்லி., எம்.பி. பிஎஸ். போர்டைத் தொங்க விட்டுண்டு வெள்ளைக் கோட்டு மேலே ஸ்டெதாஸ் கோப்பை மாட்டிண்டு போற உயிர்களை வழி அனுப்ப வேண்டியதுதானே! பெரிசா வா படிச்சே. சரி, அப்புறம்? கறுப்புக் கோட்டைப் போட்டுண்டியா? இப்ப பிளைவேட்டா என்னமோ படிச்சுண்டிருக்கே!''

''சம்ஸ்கிருதம்.''

''அதுக்கு அன்னிக்கே அத்யயனம் பண்றது தானே.. டேய் டேய் மறந்தே போயிட்டேன். நடேசனும் அவ பெண் மல்லிகாவும் சென்ட்ரல் வராந்தாவிலே உட்கார்ந்திருக்கா..''

''யாரு நடேசன்?''

''ஏழெட்டு வருஷங்களுக்கு முன்னாலே உங்க வீட்டிலே கணக்கு எழுதிண்டிருந்தான். ஒரு நாள் ஆறே முக்கால் ரூபாய்க்கு என்ன செலவுன்னு சொல்லத் தெரியாம முழிச்சான். அன்னிக்கே அவன் சீட்டைக் கிழிச்சு வெளியில் வாரிப் போட்டான் மாப்பிள்ளை. அவனும் அவன் பெண் மல்லிகாவும்....''

''எனக்குத் தெரியாது.''

''நாங்க எல்லாரும் கோயமுத்தூர்லே திருவனந்தபுரம் மெயில்லே ஏறினோம். நடேசன் வாய் திறவாம, கண் திறக்காமக் கிடக்கிறான். ஆறு போன்னு மனசு கலங்கணுமே... ஊஹூம். நீ அவளைப் பார்க்கணும்டா...''

''ஏன்?''

''ஏனு?... ஒரு இருபத்தெட்டு வயசுக்காரன் ஒரு இருபத்திரண்டு வயசுக்காரியை ஏன் பார்க்கணும்? அழகை ரசிக்கத்தான். சே, போயும் போயும் எனக்கு அம்பத்து நாலு வயசாச்சே... தொட்டா ரத்தம் வரும். பார்த்தா பிழை விழுந்துடுமே... சிரிச்சா உன் தலை சுத்தும்... அவா ரெண்டு பேரையும் அங்கே உட்கார வெச்சுட்டு தான் இங்கே உன்னுடன்....''

''அதோ ஒருத்தி வர்றாளே அவளா பாரு!''

சாமா எங்கேயெல் லாமோ பார்த்து விட்டு முடிப்பதற்குள் அவளே அவன் அருகே வந்து விட்டாள். ஒரு நிமிடம் தயங்கிவிட்டு, ''சாமா சார்'' என்றாள்.

''என்ன மல்லிகா?''

''இதோ வரேன் ஜூட்டு...''

''என்ன செய்யறது, மல்லி? ஒருகோம



கவரானுடைய பிள்ளையைத் தற்செயலாப் பார்த்துட்டேன். ரெண்டு வார்த்தை பேசாமல் இருக்க முடியுமா? ஹங்... உன்னையும் உன் அப்பாவையும் கவனிச்சுக்கறதாக இவன் என் கைமேல் அடிச்சுச் சத்தியம் பண்ணிக் கொடுத்திட்டான்....''

''சாமா...''

''கொஞ்சம் இருடா. நான் இன்னும் முடிக்கலை. மல்லிகா, இவன் யார் தெரியுமோ? நம்ம மாப்பிள்ளை ராஜாமணியோட பிள்ளை. நீ மூத்தவனுடைய ஃபாக்டரியிலே வேலை செய்யறே! இவன் மூன்றாவது. நடுவிலே இருக்கிறவனைப் பத்தி இப்பப் பேச வேண்டாம். உனக்கும் உன் அப்பாவுக்கும் எல்லா சௌகரியங்களையும் இவன் செய்து தருவான்... டேய் நான் வரேண்டா... உன் அப்பா எந்த வார்டிலே இருக்கா?''

அவனுக்கு என்னென்னவோ பேச நா துடித்தது. ஆனால் சாமா பேசவொட்டாமல் அடக்கி விட்டான். யார் கைமேல் அடித்து சத்தியம் பண்ணிக் கொடுத்தார்கள்? அவனா?

அவனுக்குத் தலை சுற்றியது. ஒருசில விநாடிகள் கண்ணை மூடிக் கொண்டான். திறந்தபோது சாமா இல்லை.

''அவர் போய்விட்டார்.''

''உன் பெயர்?''

''மல்லிகா.''

''வெறும் மல்லிகாவா?''

''ஆமாம். தொடுக்காத மல்லிகாதான்.''

''நன்னாப் பேசறே.''

''அது ஒண்ணுதான் மிச்சம் இருக்கு.''

''அப்பா?''

''அங்கே படுத்துண்டிருக்கார்.''

''என்ன உடம்பு?''

''தரித்திரம்.''

''அப்பமன்னு?''

''ஒரு வியாதி. பர்ஸ் காலியானா ரொம்ப வலிக்கும். அப்பாவுக்கு ரொம்ப நாளா வலிக்கிறது.''

''மெட்ராஸுக்கு வருவானேன்?''

''சாகறதுக்கு முன்னாடி ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு ஆசை! என் அப்பாவுக்கு ஜெனரல் ஆஸ்பத்திரியிலே ஒரு ரெண்டு நாளாவது படுத்துவிட்டுக் கண்ணை மூடணும்னு ஒரு நப்பாசை...''

''ஆஸ்பத்திரி பேரைக் கெடுக்கணும் போல் இருக்கு.''

''ஏன், ஆஸ்பத்திரி நல்ல பெயர் எடுக்க ஆசைப்பட்டா, என் அப்பாவைக் குணப் படுத்தட்டுமே.''

''அவருக்கு வந்த வியாதியின் பெயர் தரித்திரம்னு சொன்னாயே...''

''ஏதோ ஒரு வெறுப்பிலே ஒரு விரக்தியிலே சொல்விட்டேன். தப்பு... வயிற்றிலே ஏதோ கோளாறு. கட்டி இருப்பதாக அவர் சொல்றார். அவர் சாப்பிட்டு ஏழு நாளாறது. ஒரே விக்கிட் டயட்....''

''சரி.''

''ரொம்ப தாங்க்ஸ்.''

''எதுக்கு?''

''என்னையும் என் அப்பாவையும் பார்க்கறதுக்கு முன்னாலேயே எல்லா உதவியும் பண்ணித் தருவதா சாமா சாரிடம் சொன்னதுக்கு.''



லேடி டைப்பிஸ்ட்: ''சரியா ஒத்துழைக்கமாட்டேங்குது ஸார்!''
மானேஜர்: ''எதும்மா...?''
லேடிடைப்பிஸ்ட்: ''டைப்ரைட்டிங் மிஷின்தான்! நான் ஒண்ணு நினைக்கிட்டு டைப் அடிச்சா அது ஒண்ணை அடிக்க வைக்குது!''
உ. ராஜாஜீ

---

''அவன் சொன்னதை நீ நம்பினாயா?''

''இல்லை.''

''ஏன்?''

''அவர் சாமா ஆச்சே?''

''பின்னே ஏன் எனக்கு இப்போ தாங்க்ஸ் சொன்னே?''

''அப்பப்பா... என்னமா கேள்வி கேட்டுத் துளைக்கிறேள்!''

''என் அப்பாவிடம் உன் அப்பா சில வருடம் முன்னாலே வேலை பார்த்திருக்கிறாராம். உனக்குத் தெரியுமா?''

''சொல்லியிருக்கிறார். ஆனா நான் சத்திய மங்கலத்திலே என் மாமா வீட்டில் வளர்ந்தேன்.''

''என்னை இதுக்கு முன்னாடி பார்த்திருக்கிறாயா?''

''இல்லை!''

''கேள்விப்பட்டிருக்கிறாயா?''

''இல்லை.''

''ஆச்சரியம்தான்.''

''நான் ஜெனரல் நாலட்ஜிலே ரொம்ப வீக்.''

''என்னுடன் ஏழெட்டு நாள் பேசினால் போதும். நீ ரொம்ப ஸ்ட்ராங்காப் போயிடுவாய்.''

''இப்ப அப்பாவைக் கவனிக்கலாமா?''

''அதுக்கு முன்னாடி ஒரு கண்டிஷன்.''

''என்ன?''

''என் அப்பாவும் ஜெனரல் ஆஸ்பத்திரியில்தான் படுத்துண்டிருக்கார். ராஜ வைத்தியம் நடக்கிறது.''

''அதுக்கு என்ன?''

''என் சிநேகிதை அவருக்குப்பிடிக்கவில்லை''

''அதுக்காக?''

''என் ஃபாதரை நீ கவனிச்சுக்கணும். நான் உன் அப்பாவைப் பார்த்துக்கறேன். அப்பப்ப வந்து வந்து பார்த்துக்கலாம். உன் அப்பாவை பெரிய டாக்டர் எக்ஸாமின் பண்றது என் பொறுப்பு.''

''உங்க அப்பா எப்படி?''

''என் மூத்த அண்ணா எப்படி?''

''முகடு.''

''இது ஆயிரம் முகடு. அவர் மனசிலே என்ன இருக்குன்னு அவர் மனசுக்கே தெரியாது. ஆனா பிறத்தியார் தெரிஞ்சுண்டு அனுசரணையாப் போகணும்னு எதிர்பார்ப்பார்.''

''சரி.''

''தாங்க்ஸ்.''

''என் பெயர் மல்லிகா.''

''என் பெயர் தெரியாதுன்னு சொல்லிக் காட்டுகிறீயாக்கும்.''

''புரிந்துவிட்டதே!''

''பஞ்சபாண்டவர்களிலே ஒருவன்.''

''பீமன் என்கிற பேரு அவ்வளவா வழக்கிலே இல்லே. ராவுஜிகளிலே பீமராவ் உண்டு.''

''நான் ராவ் இல்லே.''

''பீம்சிங்காக்கும்.''

''நான் சிங்கும் இல்லே. சரியான கோபி செட்டிபாளையம் ஸ்மார்த்தன்.''

''வெறும்...''

''என் பெயர் பீமனே இல்லே. என்னைப் பார்த்தால்... என் உயரம், என் கிராப்பு, என் ஸைட் பர்ன்ஸ், என் வேட்டி, என் ஜிப்பா, என் பேச்சு, என் சிரிப்பு, என் துடுக்கு, என் கம்பீரம் இதையெல்லாம் நீ பார்க்கிறப்போ என் பெயர் நினைவுக்கு வரவில்லே?''

''பிருகந்நளை!'' என்றாள் அவள்.

அவன் சிரித்தான்.

''சாயங்காலம் புடவை கட்டிண்டு வரேன். இப்ப அர்ஜுனன் அப்படீன்னு கூப்பிடு.''

''மிஸ்டர் அர்ஜுனன்!''

''யெஸ்...''

''எனக்கு என் நாக்கைக் கடித்துக்கொள்ளணும் போல இருக்கு!''

''ஏன்?''

''சாமா அறிமுகம் செய்து கால் மணி நேரம் பூர்த்தியா முடியலே. அதுக்குள்ளே பல வருஷம் பழகிவிட்ட மாதிரி நான் பேசறேன். ரொம்ப உரிமையோடு....''

''எனக்குப் பிடிச்சிருக்கு. நமக்குள்ளே ஒரு பெரிய ஒற்றுமை இருப்பதை இப்பக் கண்டுபிடித்தேன்.''

''என்ன?''

''நீ ஏழை வீட்டுத் தனிக்கட்டை. மனசில் புலம்பலே மறைக்க—வெளியே கலகலப்பா பேசறே... நான் சாமா சொன்னானே கோடீசுவரன்னு — அந்தக் கோடீசுவரன் வீட்டிலே பிறந்து வளர்ந்த தனிக்கட்டை. வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கிற அலுப்பை மறக்கக் கலகலப்பாப் பேசறேன்.''

''என் அப்பா அங்கே....''

''இதோ!'' என்றான் அர்ஜுனன்.

அவள் நடந்தாள். அவன் பின்தொடர்ந்தான். அன்றையப் பொழுது ஜே ஜே என்று விடிந்து, ஒரு புதுப் பாதையைக் காட்டுவதாக அவனுக்கு அப்போது தோன்றியது.

(தொடரும்)

---

**ஷோ**பா, காலேஜ் லெக்சரர்; அவரையும், அவரது மிக இயல்பான நடிப்பையும் பார்க்கும்போதே ரசிகர்களின் கண்களைக் கண்ணீர் மறைத்து விடுகிறது. ஷோபாவின் இனிமையான குரல், பொருள் பொதிந்த புன்னகை, ஒவ்வொரு வார்த்தையையும் உணர்ந்து பேசும் பேச்சு, மெல்லிய உடல்வாகு, விரக்தியான முக பாவம், எல்லாமாகச் சேர்ந்து படத்துக்கு மெருகு கூட்டிவிட்டன. இறுதி யாத்திரையைப் பொருத்தமாகக் காட்டி அனைவரையும் சோக வெள்ளத்தில் ஆழ்த்தி விட்டனர்.

ரிக்ஷாக்காரனாக வரும் சிவகுமார்தான் கதாநாயகன். நடை, உடை, பாவனை எல்லாவற்றிலும் பொருத்தமாக நடித்திருக்கிறார். குடிசை வாழ்வோருடன் சேர்ந்து இவர் போடும் கும்மாளி பிரமாதம். ரிக்ஷாக்காரனின் முறைப் பெண்ணாக வரும் ராஜி அற்புதமாக நடித்திருக்கிறார். ஆனால் சினிமா உலகில் தொடர்ந்து கடர்விட விரும்பினால், அவர் தம் எடையைக் கணிசமாகக் குறைத்துக்கொள்ள வேண்டும்.

படத்தின் கம்பீரமான வில்லன், ஏ.ஆர். எஸ். நெடிதுயர்ந்த தோற்றம், எடுப்பான பேச்சு, அலட்சியப் பார்வை எல்லாம் அந்தப் பாத்திரத்துக்கு ஏற்றதாக உள்ளன.

கருணிராஜன் மெல்லிசைப் பாடகருக வந்து படத்தின் காமெடிக்கு உயிர் கொடுத்திருக்கிறார்.

பின்னணிப் பாடகர் மலேஷியா வாசுதேவன், முதன் முதலில் இப்படத்துக்கு இசை அமைத்திருக்கிறார். இனிமையாகவொலிக்கிறது.

செல்வராஜின் வண்ண ஒளிப்பதிவு பாராட்டுப் பெறுகிறது.

டைரக்ஷன்: கே. எஸ். மாதங்கன்.

சாமந்திப்பூ தனக்கே உரிய தனி மணம் பரப்புகிறது.

—காந்தன்



# உங்களது தங்க நகைகளை பொன் முட்டையிடும் வாத்தாக மாற்றிக் கொடுக்க உத்தரவாதம் அளிக்கிறோம்.



## இந்தியன் பாங்கின் நகைக் கடன் வசதித் திட்டம்

### உங்களுடைய குறுகிய காலத் தேவைகளுக்கு உடனடிப்பண உதவி!

உங்களுடைய வயல்களுக்கு ரசாயன உரங்கள் தேவைப்படலாம் . . . இந்த விதைப்புப் பருவத்தில் அதிக மகசூல் தரும் விதைகளை வாங்க நீங்கள் உத்தேசித்திருக்கலாம் . . .

அல்லது, அறுவடை நெருங்கிவிட்டதா ? விவசாயியின் தேவைகளுக்கு ஒரு முடிவே இல்லை; அவை திரும்பத் திரும்ப வந்துகொண்டே இருக்கும் . . .

அவசரத்துக்குப் பணம் புரட்டுவது ஒரு தீராத தலைவலி.

உங்களுடைய தங்க நகைகளை சும்மா முடக்கி வைத்திருப்பதற்குப் பதிலாக, ஒரு நல்ல காரியத்துக்கு அவற்றை ஏன் நீங்கள் பயன்படுத்தக் கூடாது ?

இந்தியன் பாங்கின் நகைக் கடன் வசதியைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். நகைகளை ஈடுவைத்து உடனடியாகப் பணம் வாங்கிக் கொள்ளுங்கள் . . . மற்றதுதான் உங்களுக்குத் தெரியுமே; உங்களுடைய நகைகள் எங்களிடம் மிகப் பாதுகாப்பாக இருக்கும்.



## இந்தியன் பாங்க்

(ஓர் இந்திய அரசு நிறுவனம்)

உங்கள் செல்வச் செழுமைக்கு உதவும் வங்கி

S.A.A./IB/1080

● 'இரக்கமற்ற இரவுகள்' ஒரு நடுத்தரக் குடும்பத்தைப் பற்றிய உன்னதப் படைப்பு. விறுவிறுப்பான கதை.

பரமக்குடி நா. ஆறுமுகம்

● தெளிந்த நீரோடை போல் ஆழமாகவும், அழுத்தமாகவும் சீரான நடையில் ஆரம்பித்த இரக்கமற்ற இரவுகளை ஏனோ அவசரம் அவசரமாக முடித்துவிட்டார் ஹேமா ஆனந்த தீர்த்தன்! பாலு மனம் மாறித் திரும்பிய தாய்க் காட்டியிருந்தால் இன்னும் நன்றாய் இருந்திருக்கும். என்றாலும் இத்தனை நாட்கள் நாங்கள் படித்து மகிழ ஒரு நல்ல கதையை அவர் அளித்தார் என்பது மிகையில்லை.

தேனி சாரதா வெங்கட்ராமன்

● கதை இவ்வளவு விரைவில் முடிந்துவிட்டதே. 15 வாரங்கள் போனதே தெரியவில்லை. கதையைப் படித்து முடித்ததும் ஒரு திரைப் படத்தைப் பார்த்த திருப்தி ஏற்பட்டது.

சென்னை-44 ஏ. கே. சங்கர்

● ''இரக்கமற்ற இரவுகள்'' தொடரைக் கல்கி வாசகர்களாகிய எங்கள் மீது இரக்கம் கொண்டு விரைவில் முடித்த கதை ஆசிரியருக்கு மிக்க நன்றி.

ஆத்தூர் முகில்வண்ணன்

● ஓர் எளிமையான குடும்பத்தில் ஏற்படும் சிக்கல்களை மிக அழகாக விடுவித்து சுபமான முடிவைக் கொடுத்திருக்கிறார் ஹேமா ஆனந்த தீர்த்தன்.

கதையின் ஊடே சில நிமிடங்கள் வந்து போகும் ராமுவின் பாத்திரத்தை மிக உன்னத நிலைக்கு உயர்த்திவிட்டார்.

சென்னை-56 பூவை விமலன்

● இப்படிப் பதினைந்தே வாரத்தில் முடித்து விட்டது மிகவும் வருந்தத் தக்கது. ஆரம்பம் முதல் ஒவ்வொரு வாரமும் கதையின் போக்கு மிகவும் அருமையாகவும் விறுவிறுப்பாகவும் இருந்தது.

கோயம்பேடு வி. மணிசங்கர்

● பொருத்தமற்ற தலைப்பு! சிறிது கூட முதிர்ச்சியோ நயமோ இல்லாத நடை! காலம் ரொம்ப முன்னேறியிருக்கிறது சார்! இனியாவது 'இரக்கமற்ற இரவுகள்' போன்ற கதைகளை வெளியிட்டு எங்களை இரக்கமில்லாமல் வதைக்க வேண்டாமென்று மிகவும் பணிவுடன் வேண்டிக் கொள்கிறேன்.

திருச்சி வி. விசுவநாதன்.

● குழப்பமின்றி சம்பவங்களைக் கதையுடன் கூறிவந்த ஹேமா ஆனந்ததீர்த்தன் அவசரத்துடன் முடித்திருக்கும் முடிவைப் பார்த்தால் வாசகர்களின் சுவையறியாத இரக்கமற்ற ஆசிரியராய் இருப்பார் போலிருக்கிறதே!

பெங்களூர்-5 அ. குமார்

● ஹேமா ஆனந்த தீர்த்தன் 'இரக்கமற்ற இரவுகள்' கதையை ஏன் இவ்வளவு சீக்கிரமாக முடித்தார்? ம. செ.வின் ஓவியம் கதைக்கு ஏற்றவாறு எங்களுடன் பேசியது!

சென்னை 26 கே. பாபு

● ''இரக்கமற்ற இரவுகள்'' என்ற பெயரில் உயிர்த் துடிப்புள்ள தொடர் கதையை வாசகர்களுக்கு அளித்த ஹேமா ஆனந்த தீர்த்தன் அவர்களுக்குப் பாராட்டுக்கள். ரவி, ராமு மறக்க முடியாத பாத்திரங்கள். கதா பாத்திரங்கள் உரையாடும் முறை அருமை.

பட்டுக்கோட்டை சிவகுருநாதன்

● ஹேமா ஆனந்த தீர்த்தனுக்கு என்ன அவசரமோ தெரியவில்லை. இவ்வளவு சீக்கிரம் முடித்துவிட்டார். அதுவும் மூன்று கல்யாணத்தையும் இரண்டே வரியில் முடித்து விட்டார்! என்னைப் போன்ற வாசகருக்கு இனி உறக்கமற்ற இரவுகள்தான்!

சென்னை-61 இரா. வரதராசன்



# 007 பாலு 1

கதை: குமரன்
சித்திரம்: விஜு

ஒரு நாள் தாம்பரத்தில் வசிக்கும் தன் பாட்டியைப் பார்க்க வர மின்சார ரயிலில் ஏறினான் பாலு. மடியில் ஒரு கூடை. கூடைக்குள்.......




















பாலு அவரை அவசரமாய் நெருங்கி....

ஸார்! உங்க பர்ஸ்! அதாவது கீழே விழுந்தவன் உங்க பர்ஸை பாக்கெட் அடிச்சான். நீங்க கவனிக்கலே...

வாட் நான்ஸென்ஸ்! என் பர்ஸ் பத்திரமா இருக்கு! நான் எதையும் பறி கொடுக்கலே. வேலையைப் பார்த்துக் கிட்டுப் போ!

பாலு திகைத்து நின்று.... ....... சில வினாடி யோசனைக்குப் பின்....

டைகர்! ஃபாலோ ஹிம்! குட்பாய்!

விழுந்தவன் கிடந்த இடத்துக்கு பாலு திரும்ப....

போலீஸ்!
ஆம்புலன்ஸ்!
சோடா!
டாக்டர்!
போன் பண்ணுங்க!
யார் வந்தாலும் இனி பயன் இல்லே!
விலகுங்க! விலகுங்க! வழி விடுங்க!

இறந்து கிடப்பவன் சட்டைப் பையை இன்ஸ்பெக்டர் சோதிக்க..

ஸார்! அது அவன் பர்ஸே இல்லே. இவன் பாக்கெட் அடிச்சதை நான் பார்த்தேன்.

தம்பி! என்ன சொல்றே? ஸ்டேஷனுக்கு வந்து விவரமா சொல்லு...

ஓகே! சட்டத்துக்கு உதவ நான் எப்பவும் தயார்!

இதற்கிடையில்...

இந்த ஆள் டாக்ஸி பிடிக்கிறான்! இப்ப நான் என்ன பண்றது? இந்த பாலு எப்பவும் இப்படித்தான். தானும் வம்பிலே மாட்டிக்கிட்டு என்னையும் மாட்டி விட்டுடுவான்!

தொடரும்

சைக்கிளை நடையில் சாத்தி வைத்து விட்டு அவன் கூடத்தில் நுழைந்தபோது அங்கே ஏக இரைச்சலும், சிரிப்புமாயிருந்தது. வீட்டில் இரண்டே பேர், ராதா, அவன் மனைவி; பாலு, அவன் தம்பி. கிரிக்கெட் வர்ணனையை டிரான்ஸிஸ்டர் உச்ச ஸ்தாயியில் முழங்கிக் கொண்டிருக்க, அதுவும் போதாதென்று அதற்குள்ளேயே தலையை நுழைத்துக் கொள்கிற மாதிரி அவர்கள் கேட்டுக் கொண்டிருந்த விதம், அவனுக்கு இலேசான எரிச்சல் கலந்த கோபத்தை ஊட்டியது.

எதையும் காட்டிக் கொள்ளாமல் சோஃபாவில் உட்கார்ந்து ஷூவைக் கழற்றுகிற போது, அதுவரை இருந்த கலகப்பு 'சட்' டென்று வடிந்து போய், ஒரு உம்மணா மூஞ்சித்தனம் தோற்றிக் கொண்ட மாதிரி அசாதாரணமான ஒரு மௌனம் அங்கே நிலவ ஆரம்பித்தது.

''ஸ்கோர் என்னவாம் பாலு?''

சூழ்நிலைக்கு உயிரூட்டுகிற முயற்சியாய் நினைத்துக் கொண்டு தான் கேட்ட கேள்வியின் செயற்கைத்தனம் அவனுக்கே உள்ளூறக் கொஞ்சம் உறைத்தது. பதில் சொல்ல வேண்டிய அளவுக்கு முக்கியமான கேள்வியாய் அதை அவர்கள் பொருட்படுத்தாமல் இருந்ததை அவனும் கண்டு கொள்ளாமல் மேலே பேச ஆரம்பித்தான்.

''பாலு! கொஞ்சம் லாண்டரி வரைக்கும் போயிட்டு வந்துடறியா? எல்லா டிரஸ்ஸும் அழுக்காய்ப் போச்சு. நாளைக்கு எதைப் போட்டுக்கிறதுன்னே தெரியலே!''

சட்டையை மாட்டிக் கொண்டு பாலு கிளம்பிப் போனதும் ராதாவும் டிரான்ஸிஸ்டரை ஆஃப் செய்துவிட்டு அவனுக்குக் காப்பி கலந்து எடுத்து வர உள்ளே போனாள்.

''அதுபாட்டுக்கு இருந்துட்டுப் போறதே! ஏன் அணைக்கிறே?'' அவன் பேசியது அவனுக்கே கேட்காததோடு, திரும்பப் போய்



# ஊடங்களும்

—எம்.ஏ.சுசீலா—

அதை 'ஆன்' செய்வதில் எந்தவித ஆர்வமும் காட்டாமல் பாத்ரூம் பக்கம் எழுந்து போனான் அவன். முகம் கழுவி, லுங்கிக்கு மாறி அவன் வந்தபோது டீப்பாயில் சூடான காப்பி காத்திருந்தது.

சுமார் முக்கால் மணி நேரம் கழித்து, 'உள்' வேலைகளை முடித்துவிட்டுப் புடவைத் தலைப்பில் ஈரக் கையைத் துடைத்தபடி அவள் ஹாலுக்குள் வந்து அவனுக்கு எதிரே உள்ள நாற்காலியில் அசதியுடன் உட்கார்ந்தாள். அவன், டீப்பாயின் மீது காலைத் தூக்கிப் போட்டுக் கொண்டு சிகரெட் பிடித்தபடி அதிலிருந்து வட்ட வட்டமாய் வெளியேறும் புகை வளையங்களை ஏதும் இலக்கின்றி வெறித்துக் கொண்டிருந்தான். அவளது வருகை ஏற்படுத்திய சலனத்தால் ஒருமுறை தலையைத் திருப்பிப் பார்த்துவிட்டு மறுபடியும் அந்த வளையங்களை வெறிக்க ஆரம்பித்தான். அவன் கை படாமல் அங்கே கிடந்த வாரப் பத்திரிகைகளில் ஒன்றை எடுத்து வைத்துக் கொண்டு அதில் மூழ்கிப் போனாள் அவள்.

''சாயங்காலத்திலிருந்து தொண்டை கம்மிப் போன மாதிரி இருக்கு ராதா! ஒரு டம்ளர் சூடா வெந்நீர் கொண்டு வாயேன்.''

வெந்நீர் போட்டுக் கொண்டு அவள் வருவதற்குள், பாலு திரும்பியிருந்தான். அண்ணா

வின் பீரோவைத் திறந்து சலவைத் துணிகளை வைத்துவிட்டுக் கையில் ஒரு பை நிறையக் காய்கறி கனக்க அவளிடம் வந்தான்.

''மன்னி! நல்ல பிஞ்சுக் கத்தரிக்காயா... சின்னதாய்ப் பொறுக்கி வாங்கிண்டு வந்திருக்கேன். நாளைக்குக் காலம்பற மொறு மொறுன்னு எண்ணெய்க் கறியாய்ப் பண்ணிடுங்கோ!''

பாலுவுக்கும் அவனுக்கும் தட்டலம்பி வைத்து அவள் பரிமாற ஆரம்பித்தாள். ரசம் சாதம் சாப்பிடும்போது, பாலு திடீரென்று நினைவுக்கு வந்தவனாய், ''மன்னி! சொல்ல மறந்திட்டேனே!... அந்தக் கல்யாணி வேறே ஒருத்தனைக் கல்யாணம் பண்ணிண்டுட்டா'' என்றான். இவள் ஒரு லேசான திகைப்புடன் சாப்பிடுவதை நிறுத்திவிட்டு, ''ஏண்டா? நீ பண்ணிக்கிறதா இருந்தியா அவளை?'' என்று மெல்லிய கிண்டல் தொனிக்கக் கேட்டாள்.

''இல்லேண்ணா! இது ஒரு தொடர் கதையோட இந்த வார அத்தியாயம். மன்னிக்கும் எனக்கும் ஒரு சின்னப் பந்தயம். கல்யாணி ஹீரோவைத்தான் கல்யாணம் பண்ணிக்கப் போறான்னு சொன்னா மன்னி. நான் மாத்திச் சொன்னேன். கடைசியிலே ஜெயிச்சது நான்தான்.''

''உனக்கும் உங்க மன்னிக்கும் எதிலேதான் பந்தயம் வைக்கிறதுன்னு விவஸ்தையே இடையாது போலிருக்கு!'' — சாப்பிட்ட தட்டிலேயே கையை அலம்பி எழுந்தான்.

**ப**டுக்கையில் சாய்ந்தபடி மேலோட்டமாய் ஒரு ஆங்கிலப் பத்திரிகையில் 'படம்' பார்த்துக் கொண்டிருந்த அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, அவள், தி. ஜானகிராமனின் 'மரப் பசு'வில் கொஞ்சம் கொஞ்சமாய் ஆழ்ந்து கொண்டிருந்தாள். தலையைச் சுற்றிப் பத்திரிகையைச் சுழற்றி எறிந்தவன் இரண்டு கைகளையும் உயரத் தூக்கிச் சோம்பல் முறித்தபடி பெரிய கொட்டாவி ஒன்றை விட்டான். அவளைப் பார்த்து லேசாகச் சிரித்தபடி, 'லோ!'' என்றான். புத்தகத்திலிருந்து மெள்ளத் தலை நிமிர்த்திய அவளுக்கு

# பரிமாணங்களும்



இன்று அவன் ஏதோ ஒரு யுத்தத்துக்கு ஆயத்தமாகிற மாதிரி உள்ளுணர்வு குறு குறுத்தது.

''வர வர நீ என்னோட பேசறதே கொறைஞ்சு போச்சு.''

''அப்படி யெல்லாம் ஒண்ணுமில்லையே'' என்றாள் அவள்.

''நோ, நோ, நானும் கொஞ்ச நாளாவே கவனிச்சுண்டுதான் வரேன். யூ ஆர். இராஜு வளி லூஸிங் இன்ட்ரஸ்ட் இன் மீ....

''அஃப்கோர்ஸ், ஐ ஆம் இரோயிங் ஓல்ட். பட் மைண்ட் யூ! யூடு!''



ஆசிரியரைப் பார்த்து
நடிகை கத்துகிறாள்

"'மிஸ் நளினஸ்ரீ தற்போது நாலுமாத கர்ப்பம்'னு என்னைப் பத்தி உங்க பத்திரிகையில செய்தி போட்டிருக்கீங்களே... எதையும் சரியா தெரிஞ்சுக்காமலேயே கண்டபடி செய்தி போடறீங்க... நான் இப்ப இரண்டு மாத கர்ப்பம் தானே!"
- ச. ராஜஸ்ரீ

அவன் படுக்கையிலிருந்து எழுந்து நின்று லுங்கியை இறுக்கிக் கட்டிக் கொண்டு முன்னும் பின்னும் நடக்க ஆரம்பித்தான்.

''நீங்க பேசுங்கோ, நானும் பேசறேன்னுதான் சொல்றேனே!''

''அந்தப் போனித்தனமெல்லாம் எதுக்கு? இப்ப... பாலு பேசித்தான் அவன் கிட்டே பேசறியா? அவ னோட பேசும்போது இருக்கிற 'ஸ்பாண்டேனியஸ் ஃப்ளோ' என்கிட்டே வரும் போது மட்டும் ஏன் வத்திப் போயிடறதுன்னுதான் கேட்கிறேன்.''

என்றைக்கோ கெட்ட கனவாய் எண்ணி மறந்து போய்விட்டிருந்த சில விஷயங்களை அவன், அந்தக் கணத்தில் வலுக்கட்டாயமாக நினைவு படுத்திப் பார்த்தான்.

''எப்பப் பார்த்தாலும் ஆபீஸ், ஆபீஸ் ஆபீஸ் புராணம்தானா? அங்கே அது நடந்தது, அவ இப்படிச் சொன்னா, இவ இப்படி புரூஸ் பண்ணியிருந்தா! இதை விட்டாப் பேச வேறே விஷயமே இல்லையா ராதா உனக்கு? என்னைக் கல்யாணம் பண்ணிண்டதுக்குப் பதிலாப் பேசாமே ஆபீஸையே கல்யாணம் செஞ்சிண்டிருக்கலாம் நீ!''

—கல்யாணமான புதிதில் அவன் வேடிக்கை செய்வதாய் நினைத்துச் சமாதானப்படுத்திக் கொண்டாலும், ஒரு புறம் அவளை ஆழமாகவும் பாதித்தன அந்த வார்த்தைகள்.

''இன்னிக்கு மியூசிக் அகாடமியிலே வாய்ப்பாட்டு கச்சேரி இருக்கு போகலாமா?''

''இதோ பாரு ராதா! எனக்கு அந்த அளவுக்கெல்லாம் சங்கீத ஞானம் கிடையாது!''

''இதுக்கு ஞானம் தேவையில்லே...'' — இன்னும் ஏதோ சொல்ல வந்தவளை அவன் இடைமறித்தான்.

''நான் இல்லாமே தனியாப்போக இஷ்டமானா நீமட்டும் போயிட்டு வா!''

இவனிடம் எதைப் பற்றித்தான் பேசுவது என்பதே புரியாமல் போய்ப் படிப்படியாய்ப் பேச்சைக் குறைத்துக் கொண்டு ஜடமாக அவள் நடமாடத் தொடங்கிய அந்த ஆரம்ப நாட்கள் ஒன்றில்... அவன் இன்று கேட்ட அதே கேள்வியைக் கொஞ்சம் வேறு விதமாய் மாற்றிக் கேட்டான்.

''ஏன் ராதா! வந்தபோது இருந்த கலகலப்பையே உன்கிட்டக் காணுமே? இப்பல்லாம் ஏன் ரொம்பப் பேசறதே இல்லே! என்கிட்டே ஏதாவது கோபமா?''

அவள் வெகுளியாய்ச் சிரித்தாள். ''பேசக்கூடாதுன்னு விரதமெல்லாம் ஒண்ணுமில்லே ஆறு, உங்ககிட்டே என்ன பேசறது, எதைப் பத்திப் பேசறதுன்னு தெரியாமே தயக்கமா இருக்கு! நான் என்ன 'சப்ஜெக்ட்' பேசினாலும் அது உங்களுக்குப் பிடிக்கலே! 'ஸ்போர்ட்ஸ்' னாலே உங்களுக்கு அலர்ஜி! சரி; ஏதாவும் 'புக்'கைப் பத்தி 'டிஸ்கஸ்' பண்ணலாம்னா 'நியூஸ் பேப்பர்' படிக்கிறது கூட உங்களுக்கு வேஸ்ட் ஆஃப் டைமாகத் தோன்றது!''

''அப்ப... இதைப் பத்தியெல்லாம் பேசிண்டிருக்கிறதுக்குத்தான் நம்பளைக் கல்யாணம் பண்ணி வச்சிருக்கான்னு சொல்றியா? லுக் ராதா! அப்படியெல்லாம் எதிர்பார்க்கிறதா இருந்தால் நீ ஒரு ஆல் ரவுண்டருக்கு — சகலகலா வல்லவனுக்குக் கழுத்தை நீட்டியிருக்கணும். கணவன் — மனைவிக்குள்ளே பேசறதுக்கு எந்த சப்ஜெக்டுமே தேவையில்லே. புற உலகத்தைப் பத்தியும், பொது விஷயங்களைப் பத்தியும் தான் நாம 'கம்யூனிகேட்' செஞ்சுக்கணும்னு அவசியமில்லே! நம்மைப் பத்தியே நாம பேசிப் புரிஞ்சுக்கலாம்! 'அனலைஸ்' பண்ணிக்கலாம். ஒருத்தர் இன்னொருத்தரோடே நிறை குறைகளைத் தெரிஞ்சு 'ரெக்டிஃபை' பண்ண முயற்சி எடுக்கலாம்!''

'ஆயுசுக்கும் இதேயா? 'மாசறு பொன்னே' டயலாக்தானா?' — மனத்துக்குள் இப்படி நினைத்தாலும், அவன் வட்டத்துக்குள் அன்று முதல் அவள் முடங்கிப் போக ஆரம்பித்த பிறகு, இத்தனை நாள் கழித்து, இப்பொழுது தான் — ஒரு 'இண்டர்வ்யூ', வேலை தேடல் நிமித்தமாய்ப் பாலு இங்கே வந்து தங்கியிருக்கிற இரண்டு மாதங்களுக்குப் பிறகு— இந்தப் பிரச்னை தலை தூக்கி யிருக்கிறது.

''என்ன? கதைக் காண்றியா? பாலுவையே கல்யாணம் பண்ணிண்டிருந்தா வாழ்க்கை எப்படி இருக்கும்னு மனசிலே சினிமா ஓட்டிப் பார்த்திண்டிருக்கியா?''

முற்றிலும் எதிர்பார்க்காத ஒரு நேரத்தில் கூண்டிலிருந்து வெளியாக்கப்பட்ட பறவையாக அவள் படபடத்தாள்.

''நிறுத்துங்கோ! இத்தனை வருஷம் பழகினப்புறம் இப்படிச் சொல்ல உங்களுக்கு வெட்கமாயில்லே? 'காமன் இன்ட்ரஸ்ட்' உள்ள எல்லாரையும், எல்லாத்தையும் முடிச்சுப் போட ஆரம்பிச்சா இந்த உலகத்திலே சோரம் போறவாளைத் தவிர வேறே, யாருக்குமே இடமில்லேன்னு ஆயிடும். மனசைத் திறந்து, பார்வையை விரிவு படுத்திண்டு விஷயங்களையும், மனுஷாளையும் பார்க்கவும், பேசவும் பழகிக்கோங்கோ!''

ஒரே மூச்சில் இரைந்து விட்டுப் படுக்கையில் படுத்துக் கண்ணை மூடிக் கொண்டாள். அவன், ஒரு 'பெட்ஷீட்'டையும் தலையணையையும் உருவிக் கொண்டு பால்கனிப் பக்கம் படுப்பதற்கு எழுந்து போனான்.

மறுநாள் காலை அவன் சமையலறைக்குள் வந்தபோது, அவள் கத்தரிக்காய் நறுக்கிக் கொண்டிருந்தாள். எதுவுமே நடக்காதது போல, அவள் அருகே வந்த அவன், ''இன்னிக்கு எண்ணெய்க் கறி வேண்டாம் வயிறு சரியில்லே! நறுக்கின காய் வீணாய்ப் போகாமே சாம்பாரிலே போட்டு விடு'' என்றான்.

இதெல்லாம் ஒன்றுமே தெரியாத குழந்தைத்தனத்தோடு ''ஏன் மன்னி, அவ்வளவு ஆசையாய்க் கேட்டும் கறி பண்ணலே?'' என்று கேட்கப் போகும் மைத்துனனுக்கு என்ன பதில் சொல்வது என்று கவலைப்பட்டாள்.

ஒரு வாரம் கழித்து ஆபீஸிலிருந்து திரும்பியதும், பாலுவைக் கூப்பிட்டு ஒரு கவரைக் கையில் கொடுத்தான் அவன்.

''என்னண்ணா? 'அப்பாயின்ட்மென்ட் ஆர்டர்'தானே?'' தன்னம்பிக்கையுடன் கவரைப் பிரித்துப் படித்த பாலுவின் முகம், ஒரு விநாடி இருண்டது.

''மெட்ராஸிலேயே ஒரு பிராஞ்சிலே கிடைக்கும்னு அவ்வளவு 'ஷ்யூரா' இருந்தேனே? உங்க மானேஜர் கூடப் பிராமிஸ் பண்ணியிருந்தாரே! இப்போ 'நார்த்'துக்கு 'போஸ்ட்' பண்ணியிருக்காளே!?''

''என்ன செய்யறது பாலு! கடைசி நிமிஷத்திலே எங்க மானேஜிங் டைரக்டருக்கு வேண்டியவா 'பிரஷர்' கொண்டு வந்துட்டதாலே அந்தப் பையனை உள்ளூரிலே போட வேண்டியதாய்ப் போச்சு!''

''பரவாயில்லேண்ணா! எப்படியோ ஒரு வேலைன்னு கிடைச்சதே, அதுவே போதும்.''

தன் வட்டத்திலேயிருந்து பாலுவை விலக்கி வைத்துவிடுவதில் காட்டுகிற ஆர்வத்தைத் தான் அந்த வட்டத்திற்குள் நுழைவதை அவன் காட்டாமலிருப்பதையும் அதற்கெல்லாம் மேலாக என்றோ அவனுடைய பெரிய வட்டத்துக்குள் அவளும் அடைக்கலமாகிப் போனதை உணராத அவனுடைய பேதைமையையும் நினைத்து அந்த நிலையிலும் அவள் சிரித்துக் கொண்டாள். இனிமேல் அந்த வீட்டில் பழையபடி நிலவப் போகிற வெறுமையை எண்ணி ஒரு கணம் துணுக்குற்றாலும், தினந்தோறும் இனம் புரியாத சித்ரவதையினால் ரணப்படுகிற இரண்டு ஜீவன்களுக்குக் கிடைக்கப் போகிற விடுதலையை எண்ணும் போது, அலாதியான திருப்தியுடன் கூடிய ஆறுதல் ஒன்றும் அவளுள் பிறந்தது.

1

# கராத்தே கற்கலாம்!

பயிற்சி: ஆர்.வி.டி.மணி

சித்திரம்: [signature] தயாரிப்பு: குண்டுமணி

என்னப்பா!
கராத்தே மணி கிட்டே
கூட்டிட்டுப்
போறேன்னு
சொன்னே, இவரு
கண்ணை மூடிட்டுச்
சும்மா உட்கார்ந்
திருக்கிறாரே!



ஷ்! அரவிந்த்! வாயைச்
சுருட்டிட்டு சும்மா இருடா!
அவர் தியானத்தில் இருக்கார்!

தியானமா? அதற்கும்
கராத்தே சண்டைக்கும்
என்னப்பா சம்பந்தம்!



உடலுக்கு அதிகாரி
மனம் தான், அரவிந்த்!
உடலும் மனமும் உன்
கட்டுப் பாட்டில் இருந்தால்
தான் சாதாரண செயலோ
சாதனைகளோ சரியாகச்
செய்ய முடியும்....



....தியானத்தின் மூலம்
உடல் நலம், மனவளம்,
துணிவு, செயலாற்றல்,
தன்னம்பிக்கை,
தற்காப்பு எல்லாமே
சித்திக்கும்!

தொடரும்

பின் அட்டைப் புகைப்படம்: உத்ரா



# தமிழ்நாடு அரசு

# கிராமப்புற நகர்ப்புற ஏழை மக்களின் கடன் நிவாரணம்

கடன் சுமையால் வருந்தும் கிராம மக்களுக்கும், நகரவாசிகளுக்கும் நிவாரணம் அளிக்கும் அவசியத்தைக் கருதி தமிழ்நாடு அரசு ஏற்கனவே நடைமுறையில் இருந்த கடன் நிவாரணச் சட்டங்களைச் சீரமைத்தது. ஆயினும், நாட்டில் நிலவிய விலைவாசி உயர்வு, பொருளாதார நலிவு ஆகியவற்றின் காரணமாகப் பல ஏழைகள் இச்சட்டங்களால் போதிய பலனடையவில்லை எனத் தெரிய வந்தது. ஆகவே, மேலும் அதிகமான நன்மையளிக்கக்கூடிய ஒரு சட்டம் இயற்ற அரசு தீர்மானித்து, 31-12-'79 வரையில் பட்ட கடன்களிலிருந்து, ஏழைமக்கள்—நகரவாசிகளானாலும் கிராமவாசிகளானாலும்—பயன் பெறும் வகையில் தமிழ்நாடு 1980 ஆம் ஆண்டு கடன் நிவாரணச் சட்டம் இயற்றப்பட்டுள்ளது.

**இச்சட்டத்தின் மூலம் பயன்பெறுவோர் யார் ?**

31-12-1979ல் முடிவடைந்த ஆண்டில் மொத்த வருமானம் ரூ. 4,800/-க்கு மேற்படாமல் உள்ள அனைவரும் நகர்ப்புறத்தில் வசிப்பவர்களோ, கிராமப்புறத்தில் வசிப்பவர்களோ அல்லது எந்தத் தொழில் செய்பவர்களானாலும்—

மேற்கூறிய வருமான வரம்பிற்குள் நீங்கள் இருந்தால் 1-1-1980 நாளுக்கு முன்னர் நீங்கள் அடகுக் கடைக்காரர்கள், வட்டிக்கு கடன் கொடுப்பவர்கள், கடன் கொடுக்கும் தனி நபர்கள் ஆகியோரிடமிருந்து வாங்கியுள்ள கடன்கள் (அரசு, கூட்டுறவு வங்கிகள் மற்றும் கூட்டுறவுச் சங்கங்கள், தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் மற்றும் இச்சட்டத்தின் கீழ் விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ள நிறுவனங்கள் முதலியவற்றிற்குச் செலுத்த வேண்டிய கடன்கள் தவிர்த்து) முழுவதும் (வட்டியுட்பட) செலுத்திவிட்டதாகக் கருதப்படும்.

இச்சட்டத்தின் விதிமுறைகளை தாசில்தார்கள் செயல்படுத்துகின்றனர்.

**இச்சட்டத்தின்படி நிவாரணம் பெறத் தகுதி பெற்றவராயின் நீங்கள் செய்ய வேண்டியது என்ன ?**

இச்சட்ட விதிகளின்படி நிர்ணயிக்கப்பட்ட படிவங்களைப் பூர்த்தி செய்து, நீங்கள் வசிக்கும் பகுதியின் அதிகார வரம்புள்ள தாசில்தார், துணைத்தாசில்தார், வட்டார வளர்ச்சி அலுவலர் (பி.டி.ஓ) கூட்டுறவு சார்பதிவாளர்—இவர்களில் ஒருவர் முன் பிரமாண வாக்குமூலம் செய்து வருமானச் சான்றிதழ் இணைத்து உங்கள் பகுதியைச் சேர்ந்த தாசில்தாருக்கு 18-10-1980க்குள் நிவாரணம் கோரி மனுச் செய்யவேண்டும்.

அருகிலுள்ள சம்பந்தப்பட்ட தாலுக்கா அலுவலகத்திற்குச் சென்று, நீங்கள் பூர்த்தி செய்து கொடுக்கவேண்டிய படிவங்களைப் பெற்றுக் கொள்ளலாம். உடனடியாக நிவாரணம் பெறுவதற்கான படிவங்களைக் காலதாமதமின்றி பூர்த்தி செய்து கொடுத்துவிடுங்கள்.

**உங்கள் கடன் சுமையிலிருந்து விடுபடுங்கள்.**

**மனு அளிக்கக் கடைசி நாள் 18-10-1980.**

வருவாய்த்துறை

ELEGANT



# வண்டார்குழலி

முழு நீள நாவல்

**செம்பியன்**

## 1

**பா**ண்டிய நாட்டிலிருந்து நர்த்தகி ஒருத்தி வந்திருக்கிறாள்; அரசவையில் ஆட அனுமதி கோருகிறாள் என்ற செய்தி எட்டியது பாஸ்கர ரவி வர்மனுக்கு. சேரமான் அக்கறை காட்டவில்லை. எத்தனையோ எழிலரசிகளான ஆடலரசிகளைப் பார்த்தவன் அவன். சேர நாட்டில் இல்லாத அழகிகளா? ஆடல்கலை வல்லுனர்களா?

அரசவை நிகழ்ச்சிகள் எங்ஙனமுள்ளன என்று திருமந்திர ஓலை அதிகாரியை அவன் வினவ, ''இன்னும் ஏழு தினங்களுக்கு நெருக்கமாகத்தான் நிகழ்ச்சிகள் உள்ளன. ஆயினும் மன்னர் விரும்பினால்...'' என்று பதில் முற்றுப் பெறாமல் நின்றது.

''ஏழு என்ன? பத்து நாட்களே செல்லட்டுமே'' என்றான் சேரமான் பாஸ்கர ரவிவர்மன். ''அது வரை அந்த நர்த்தகிக்கு உரிய மரியாதை காட்டி நமது விருந்தினர் மாளிகை ஒன்றை ஒதுக்குங்கள். ஒத்திகை பார்த்துக் கொள்ள வசதியாக வாத்தியக்காரர்களுக்கும் ஏற்பாடு செய்து தரலாம்'' என்று உத்தர விட்டான்.

பத்து நாட்கள் பொறுமையாகக் காத்திருந்தாள் வண்டார்குழலி. ''பெண்ணே! சிட்டுக்குருவி கருடனாக முடியுமா? நீரொம்ப உயரத்தில் பறக்கப் பார்க்கிறாய் என்று எனக்குத் தோன்றுகிறது'' என்றாள் அவள் தாய்.

''அம்மா! என் அழகும் என் கலையும் சாமானியருக்கு உரியது அல்ல. மன்னர்களுக்கே ஏற்றது என்று நான் உறுதியாக நம்புகிறேன்.''

''பாண்டி நாட்டிலேயே இரண்டு மன்னர்கள் இருக்கிறார்களே அவர்களை விட்டு விட்டு....''

''அம்மா இதென்ன பேச்சு.. பெயரளவில் தான் அவர்கள் மன்னர்கள். பராந்தக சோழன் காலத்திலேயே பாண்டிய நாடு சோழன் வசப்பட்டு விட்டது. அப்புறமும் பல தலைமுறைகளாகப் பல பேர் பாண்டி நாட்டு அரியாசனத்துக்கு உரிமை கொண்டாடி வருகிறார்களே தவிர, சுதந்திரமான மா மன்னர்கள் என்று சொல்லும்படியாக யார் இருக்கிறார்கள்? அவ்வப்போது கிளைத்தெழுவதும் ஒடுக்கப்படுவதுமாய் அவர்கள் காலம் செல்கின்றது. இது போதாததற்கு அவர்களுக்குள்ளேயே உட்பகை வேறு. இல்லாத பேரரசுக்கு அமர புஜங்கனுக்கும் வீரபாண்டியனுக்கும் இடையில் போட்டி. இதனால்தான் நான் சேரமானை நாடி வந்தேன்.''

''தஞ்சைக்கே சென்றிருக்கலாமே பெண்ணே?''

''அங்கே செம்பியன்மாதேவியும் குந்தவைப் பிராட்டியும் கலைகளையும் இறையுணர்வையும் இரு கண்களே போல் வளர்த்து வந்திருக்கிறார்கள். அங்கே என் ஆற்றலுக்கு வரவேற்பிருக்கும். ஆனால் அதனால் யாரையும் வெற்றி கொள்ள முடியாது. நாற்றோடு நாற்றி ஒன்று. இங்கு நிலைமை அப்படியல்ல. நீ வேணுமானால் பாரேன். சேரமான் என் அழகிலும் கலையிலும் தன் வயமிழக்கப் போகிறான்!''

''பார்க்கத்தானே காத்திருக்கிறேன் கண்ணே'' என்றாள் தாய்.

வண்டார்குழலி எதிர் பார்த்தபடியே அரசவையில் அவள் அரங்கேறிய போது அசந்துதான் போய் விட்டான் பாஸ்கர ரவிவர்மன். நடனத்தின் அழகை ரசிப்பதா அல்லது நங்கையின் அழகை ரசிப்பதா என்று அவன் தடுமாறிப் போனதை வண்டார்குழலி உணர்ந்தாள். உள்ளம் பூரித்தாள்.

'வந்து நின்ற கோலத்திலேயே எத்தனை கம்பீரம்! அகன்ற கண்களின் கருவிழிகளைச் சுழற்றி அவையோரை ஒரு பார்வை பார்த்ததில் எத்தனை லாகவம்? அந்த ஒரு கண் வீச்சிலேயே இதயங்களைக் கவ்வி இழுத்து விடுகிறாளே!

தன் நாட்டின் இயற்கை எழிலில் சேரனுக்கு மிகுந்த கர்வம் உண்டு. 'தனது போர்க் கப்பல்களை ஊஞ்சலாட்டும் அலைகளின் நெளிவுகள் இவளது உடலில் காணும் வளைவு நெளிவுகளுக்கு ஈடாகாது' என்று எண்ணினான். நெடிதுயர்ந்து நிற்கும் 'தென்னை மரங்கள் இவளது கம்பீரத்துக்கு எதிரே எம்மாத்திரம். பசும் வயல்களின் குளிர்ச்சி இவளது தோற்றத்தைக் காணும் போது ஏற்படும் இதத்துக்கு ஈடாகுமா? மாஞ்சோலைகளில், பழுத்து, பறிக்கப்படக் காத்திருக்கும் கனிகள், உப்பங்கழிகளில் துள்ளி விழும் கயல்கள், கடலில் முத்துக் குளிப்போர் அள்ளிக் குவிக்கும் முத்துக்கள் எல்லாமே இவளது அங்கங்களின் எழிலெதிரே சாமானியம்தான். ஏலம், லவங்கம் போன்ற வாசனைப் பொருள்கள் இவளது நெருக்கத்தில் சூழும் நறுமணத்தை விடவா உயர்ந்தவை? வண்டார்குழலி! என்ன அழகான பெயர்! இவளது கண்களே கருவண்டுகளாகி அளகபாரத்தின் மணத்தால் ஈர்க்கப்பட்டு அலைகின்றனவோ!'





இப்படி அவன் தன் அழகிலே இறங்க வேண்டும் என்பதற்காகவே தாமதித்தவள் போல நின்றவள் பின்னர் அரசனுக்கு வணக்கம் செலுத்தி அவையோரையும் வணங்கினாள். வாத்தியக்காரர்களுக்கும் நட்டுவாங்கத்துக்கும் சமிக்ஞை செய்து விட்டு ஆடத் தொடங்கினாள். அவளது செழுமையானதும் அளவானதுமான கால்கள் முதலில் அசைந்து சதங்கை ஒலிகளைத் தாளத்துக்கு ஏற்ப எழுப்பின. பின்னர் கரங்களும் ஒத்துழைக்க ஆரம்பித்தன. பிறகு முகபாவங்களும் சேர்ந்து கொண்டன. அப்புறம் உடலின் ஒவ்வொரு பாகமுமே நடனத்தோடு இழைந்து தத்தம் பணிகளை செவ்வனே ஆற்றின. சேர நாட்டின் ஆறுகளின் வேகம், மலை முகடுகளின் கம்பீரம், ஏரிகளின் அமைதி, மலர்களின் புத்துணர்ச்சி, போன்ற அனைத்தையும் உள்ளடக்கிய ஒரு புது அநுபவமாக இருந்தது சேரமானுக்கு.

அவையிலே நூறு பேர் இருந்தாலும் அவள் தனக்காக மட்டுமே ஆடுவது போலிருந்தது அவனுக்கு. இந்தக் கலையையும் இந்த எழிலையும் இனி உன்னால் மறக்கவோ புறக்கணிக்கவோ முடியுமா என்று கேட்பது போலிருந்தது. நீ என் அடிமை, நான் உன்



உடைமை என்று சொல்லாமல் சொல்வது போலிருந்தது.

எத்தனை நாழிகை சென்றதோ அவனுக்கே தெரியாது. ஒரு கட்டத்தில் ஆவேசமாக "போதும் நிறுத்து" என்றான் மன்னன். அனைவரும் திடுக்கிட்டு திகைக்க, "வண்டார்குழலி, இதற்கு மேல் நீ ஆடினால் என்னால் தாங்க முடியாது! அவையோரும் தாங்க மாட்டார்கள்! ஏன் இந்த அரண்மனையும் நகரமும் நாடுமே தாங்க மாட்டா! இப்படி வா!" என்றான்.

ஆடிக்களைத்த பெருமூச்சுக்களால் மட்டுமின்றி மன்னன் சொல்கேட்டு விம்மித முற்றதாலும் பொங்கித் தணியும் நெஞ்சகங்களுடன் அவள் மன்னனை நெருங்கினாள். தன் கழுத்திலிருந்த முத்து மாலைகளை எண்ணிப் பாராமல் அள்ளி எடுத்தான் பாஸ்கர ரவிவர்மன். நீண்டிருந்த அவள் கரங்களில் அவற்றை உதிர்த்தான்.

"மாமன்னா!" என்று அழைத்தவள் சற்றே தயங்கினாள்.

"என்ன வேண்டுமோ கேள்" என்று பணித்தான்.

"தங்கள் ஆதரவு என்றென்றும் வேண்டும்"

"அதில் ஐயம் வேண்டாம். இன்று முதல் நீ இங்கு ராஜநர்த்தகி."

"நான் பாக்யசாலிதான்" என்றாள் வண்டார்குழலி. "மேலும்...."

"மேலும்....?"

இதுவரை உரக்கவே பேசியவள் இப்போது குரலைத் தாழ்த்தி அவன் செவிகளுக்கு மட்டும் கேட்கும்படியாகக் கூறினாள்: "இந்த அரங்கில் ஆடியது போல தங்கள் இதய அரங்கிலும் ஆடும் நாளை ஆவலுடன் எதிர் நோக்குகிறேன்!"

இப்படிக் கூறிய போது ஒளி சிந்திய அவளது கண்கள் அசாதாரண துணிச்சலுடன் அவன் நெஞ்சை ஊடுருவி அந்தரங்கத்தில் புகுந்து கணப்போதில் ஆயிரமாயிரம் ரகசியங்களைப் பேசின; இன்பக் கோட்டைகளை எழுப்பி உல்லாச புரிகளை சிருஷ்டித்துக் காட்டின.

அவளது அழகுடன் ஆற்றலும் அத்துடன் இணைந்த துணிச்சலும் ஏற்படுத்திய அதிர்ச்சியில் கண்ணிமைக்கும் நேரம் தடுமாறித்தான் போனான் பாஸ்கர ரவிவர்மன். அடுத்த கணமே தன்னை ஒரு நிலைப்படுத்திக் கொண்டான். 'நான் யார்? இவள் யார்? யாரிடம் என்ன பேசுகிறாள் இவள்? தன் அழகிலும் கலை ஆற்றலிலும் இத்தனை கர்வமா இவளுக்கு? அரங்கத்தின் மத்தியில் அரசனுடன் அந்தரங்கம் பேசுமளவுக்கு மமதையா?'

"பெண்ணே!" என்றான் பாஸ்கர ரவிவர்மன் அனைவரும் கேட்க. "உனது தன்னம்பிக்கையை மெச்சுகிறேன். ஆனால் சேரமான் தனக்குத் தேவையானதைத் தானே தான் தேர்ந்தெடுப்பானேயொழிய சேரமானை இன்னொருவர் தேர்ந்தெடுக்க அனுமதி இல்லை! புரிகிறதா? அவள் பேசிய ரகசியம் அம்பலத்துக்கு வந்து விட்டது! எவ்வளவு அவமானம்!

ஏளனம் தொனித்த மன்னனின் குரலில் இப்போது கடுமை ஒலித்தது. 'சோமேசுவரரே' என்று தனது மந்திரி பிரதானிகளுள் ஒருவரை அழைத்தான். "தங்கள் அந்தப்புரத்துக்கு இன்னொரு அழகியை வழங்குகிறேன். மறுக்காமல் ஏற்றுக்கொள்ளுங்கள்" என்றான்.

அவையினர் அதிர்ந்து போயினர். ஒரு சொல், ஒரு வியப்பொலி ஏதும் எழவில்லை. வண்டார்குழலியின் கர்வம் அவளை எங்கு கொண்டு தள்ளி விட்டது என்பது எல்லாருக்கும் புரிந்தது. மன்னனையே மயக்கித் தன் வயப்படுத்தி விட எண்ணியவள், அவனது இதய பீடத்தில் அமர்ந்து அதன் மூலம் சேர நாட்டிலேயே மன்னனுக்கு அடுத்தபடியாக மிகச் சக்தி வாய்ந்த மானுடப் பிறவியாக விளங்க எண்ணியவள் சோமேசுவரருக்கு — அறுபது வயதுக் கிழவனுக்கு — ஆசை நாயகியாக்கப்பட்டு விட்டாள். அதிலும் இவளுக்கு ஒரு தனிச்சிறப்பு கிடையாது. ஏற்கனவே அவருக்குள்ள பல ஆசை நாயகிகளுடன் மேலும் ஒருத்தி அவ்வளவுதான். சோமேசுவரன் ஒரு காமாதுரன். அது அரசனுக்கும் தெரியும். ஆனால் சோமேசுவரனின் கணித அறிவு வேறு யாருக்கும் வராது என்பதால் அவருடைய அந்தப் பலவீனத்தைப் பொருட்படுத்தாதிருந்தான். இப்போது அவரது பலவீனத்தையே இவளுக்குத் தண்டனையாக்கியும் விட்டான்!

சோமேசுவரன் ஓரடி முன்னால் வந்து மன்னனை அடிபணிந்து வணங்க, வயதான அவனது தோற்றத்தைக் கண்ட உடன் வண்டார்குழலி தன் துர்பாக்கியத்தைப் புரிந்து கொண்டாள். அவையோர் அனைவரும் ஆணவக்காரியான இவளுக்கு வேண்டும்தான் இந்தத் தண்டனை என்று எண்ணிய போதிலேயே, 'பாவம்' என்று பரிதாபப்படவும் செய்தனர். ஆனால் வண்டார்குழலிக்கோ அத்தனை பேரும் தன்னைப் பரிகசிப்பதாகவே தோன்றியது. மன்னனின் முன்னிலையில் மரியாதை கருதி வாளாவிருக்கிறார்களே யொழிய மனத்துக்குள் ஏளனமாய்ச் சிரித்துக் கொண்டுதானிருக்கிறார்கள்!

"மன்னவா! தாங்கள் தகுதி அறிந்து தக்க காரணத்துடன்தான் எதையும் செய்வீர்கள் என்ற நம்பிக்கையில் அன்புப் பரிசினை நன்றியோடு ஏற்கிறேன்" என்றார் சோமேசுவரன். அவருக்கே தெரியும் இவ்வளவு உன்னதமான பரிசைப் பெறத் தாம் தகுதியற்றவர் என்று. ஆனால் அவருக்கு மன்னரின் செயலை நியாயப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம்!

தான் மட்டும் கர்வத்துடன் பேசாமல் அமைதி காத்திருந்தால் சேரமானே விரைவில் ஒரு நாள் தன்னை நாடி வந்திருப்பார் என்பது இப்போது வண்டார்குழலிக்குப் புரிந்தது. ஆனால் என்ன செய்வது? அழகும் ஆற்றலும் உருவாக்கிய ஆணவம் அதிகார ஆசையையும் தூண்டிவிட வாய்த்த துடுக்காக மன்னனிடம் சமய சந்தர்ப்பம் அறியாமல் பேசியாகி விட்-

டது. பின் விளைவுகளை இனி ஏற்பது தவிர வேறு வழி?

அவளுக்குத் தன்னிடமே கோபம் வந்தது. அதற்கும் மேலாகத் தன்னையும், தன் கலையையும் இப்படி இழிவுபடுத்தி அவமானத்துக்குள்ளாக்கிய சேரமான் மீது ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

## 2

"நாளை நான் சேர நாட்டுக்குக் கிளம்புகிறேன்'' என்றான் சிவலோகநாதன். ''நமக்கிருப்பது இன்று ஒரே ஒரு நாள்தான்.''

''அப்படிச் சொல்லாதீர்கள்''என்று அவன் வாயைத் தன் காந்தள் விரல்களால் பொத்தினாள் உதயபானு. ''இன்னும் ஒரு நாள் அல்ல. ஓராயிரம் நாளுமல்ல; பல்லாயிரம் நாட்கள் நாம் இணை சேர்ந்து இன்புற்றிருக்கத்தான் போகிறோம்''

''இருந்தாலும் இப்போது நீண்ட காலப் பிரிவு'' என்று சுட்டிக் காட்டினான்.

''அதனால் என்ன? பிரிவு நம் காதலுக்கு உரமேற்றும்.''

''பிரிவு மட்டும்தானா உரமாகும்? நெருக்கமும்தான்'' என்றான் அவளை இழுத்து அணைத்தவாறே. அவர்களுடைய ஆலிங்கனம் அரச மரத்தின் இலைகளுக்குக் கூட இன்பச் சிலிர்ப்பை ஏற்படுத்தியது. ஏரிக் கரையில் மோதிய சிற்றலைகள் களுக்கென்று சிரித்தன. குயில் ஒன்று குக்கூ என்று பரிகசித்தது. தென்றல் சில்லென்று வீசி அவர்களை மேலும் இறுக்கமாக இணைய வைத்தது.

அருள்மொழி வர்மனிடம் அனுமதிபெற்று அரசுப் பணிகளிலிருந்து அன்று ஒரு நாள் தன்னை விடுவித்துக் கொண்டு அவன் வந்திருந்தான். அந்தப்புரப் பணிகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு குந்தவைப் பிராட்டியிடம் அனுமதி பெற்று அவள் வந்திருந்தாள். இருவருமாகத் தஞ்சைக் கோட்டைக்கு வெளியே அரச வனத்தினை ஊடுருவிச் சென்றார்கள். ஏரிக் கரையை அடைந்ததும் குதிரையிலிருந்து தான் இறங்கி அவளும் இறங்க உதவினான். குதிரை அவர்களை நிம்மதியாக விட்டுப் புல் மேயச் சென்றது. ''பானு! பாடு'' என்று வேண்டினான். அவள் ஆனந்தமாக அவன் கோரிக்கையை நிறைவேற்றினாள். உடன் எடுத்து வந்திருந்த சித்திரான்னங்களைப் புசித்தார்கள். சல்லாபித்தார்கள். சற்று விளையாடவும் செய்தார்கள். பகல் போது மெல்ல மெல்லக் கரைந்து மாலைப் போது நெருங்க ஆரம்பித்தபோது அவன் தாபம் அதிகரித்தது.

''பானு! பானு!'' என்று கரகரத்த குரலில் அழைத்தபடியே தன் கரங்களுக்குள் சிக்குண்டிருந்த அவளைக் கெஞ்சினான். ''என் கண்ணல்லவா?'' அவன் அதரங்கள் அவளுடைய சந்திர வதனத்தை ஸ்பரிசித்தன. அவன் நடக்கிற காரியத்துக்கும் தனக்கும் சம்பந்தம் இல்லை என்பது போல் தன் கண்களை மூடிக் கொண்டாள். இருவரைத் தருவித்துத் தன்னைத் தன்னிடமிருந்தே இப்படி சாமர்த்தியமாக விலக்கிவிட்ட பின் தனக்குச் சம்பந்தமில்லாத அந்த இன்னொருத்திக்குத் துணிவு அசாத்தியமாகப் பிறக்கக் கண்டு வியந்தாள். அந்த இன்னொருத்தி இப்போது முகத்தை உயர்த்தியதன் மூலம் அவன் இதழ்கள் கன்னங்களிலிருந்து கீழிறங்கி கழுத்திலே பல இடங்களில் முத்திரை பதிக்க உதவிக் கொண்டிருந்தாள். அவள் கேசத்தை அவன் விரல்கள் இறுகப் பற்றி இழுத்தும் அழுத்தியும் வழி காட்டிக் கொண்டிருந்தன. அவன் முதுகிலே படர்ந்து தவழ்ந்து கொண்டிருந்த அவளுடைய கரங்களில் ஒன்று இப்போது தோளுக்கு உயர்ந்து நெஞ்சுக்குத் தாழ்ந்தது.

''உம்'' என்ற முனகல் அவள் கண்டத்திலிருந்து எழுந்தது. அது வேண்டும் என்றதா? வேண்டாம் என்றதா? உதயபானுவுக்கே புரியவில்லை. புல் தரையில் அவளைச் சரித்தான். திண்ணென்றிருந்த தன் வலது தோளை அவளுக்குத் தலையணையாக்கினான். அவள் விரல்கள் அவன் பரந்த மார்பினை அளவெடுத்தன. மாலைச் சூரியன் வெட்கி ஒரு மேகத்துள் மறைந்தான்.

சற்றுத் தூரத்தில் குளம்படிகள் கேட்டன. சோழ மன்னர் அருள்மொழி வர்மர் வேட்டையாடி முடித்து அரண்மனை திரும்புவதற்கு அறிகுறியாகக் கொம்பொலி முழங்கியது.

சரேலென்று எழுந்தாள் அவள். ''கிளம்புவோமா? நேரமாகிறது. மன்னர் கடைசி நேர அறிவுரைகளை எனக்கு வழங்க எண்ணி விரும்பார்.''

''ஆமாம். குந்தவைப் பிராட்டி கவலையோடு காத்திருப்பார்'' என்றான்.

இருவருமே ஒரு இனிய கனவிலிருந்து விடுபட்டவர்களாக—திடுக்கிட்டு விழித்தெழுந்தவர்களாக ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு நின்றார்கள். இருவருமே சிரித்தும் விட்டார்கள். ரொம்பத் தைரியம்தான் நமக்கு என்று தங்களைத் தாங்களே கேலி செய்துகொள்வது போல் ஒலித்தது அந்தச் சிரிப்பு.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

நிருபர்: ''முத்தக்காட்சியில் நடிக்கத் தயார்னு நீங்க சொன்னதைக் கண்டித்து ரசிகர்கள் யாரும் கண்டனக் கடிதம் எழுதினாங்களா...?''

நடிகை: ''ஒரே ஒரு கடிதம் வந்தது...!''

நிருபர்: ''யாரிடமிருந்து...?''

நடிகை: ''ஊரிலிருக்கும் என் கணவரிடமிருந்து!''

- க. ராஜுஜி





சலசலப்புக் கேட்டது. திரும்பிப் பார்த்தார்கள். குதிரை மேல் கம்பீரமாக ஆரோகணித்திருந்த அருள்மொழி, இப்போது குனிந்து, பரியின் பிடரி மேல் கரங்களை மடித்துப் போட்டவராகப் பரிகாசக் குரலில் "சிவலோகநாதா! உன் மன்னன் மான்களை வேட்டையாடுவதில்லை, தெரியுமல்லவா?" என்றார்.

"நாடி வரும் மான்களை நலிய விடுவதுமில்லை அவர். அதுவும் எனக்குத் தெரியும்" என்றான் சிவலோக நாதன்.

"நலிய விடக் கூடாது நண்பா! ஆனால் அதனை உரிய முறையில் செய்ய வேண்டும்" என்று உணர்த்தினார் அருள்மொழி. உதயபானு வெட்கித் தலை குனிந்து நின்றான். சிவலோகநாதன் பாய்ந்து குதிரை மீதேறி அவளையும் தனக்கு முன்னால் கைலாகு கொடுத்துத் தூக்கி வைத்துக் கொண்டான்.

"உனது சேர நாட்டுப் பயணம் உங்கள் காதலுக்கு ஒரு சோதனையாகவே இருக்கட்டும். நீ திரும்பி வந்த மறு தினமே திருமணத்துக்கு நாட் குறிக்கப்படும்" என்று உறுதிமொழி தந்தார் அருள்மொழி வர்மர். சிவலோகநாதனைத் தட்டிக் கொடுத்தார். "உதயபானு! கோபமா?" என்றும் வினவினார்.

"ஆம் பிரபு! கோபம்தான்" என்றான் உதயபானு. "ஆனால் உங்கள் மீதல்ல. வேட்டைக்குப் போவது போல் செல்லுமாறு கூறி உங்களை இங்கே அனுப்பி வைத்திருக்கும் குந்தவைப் பிராட்டி மீதும் அல்ல. என் மீதேதான் எனக்குக் கோபம். என்னுடைய பலவீனத்தை நான் உணர்ந்ததால் கோபம். கட்டுப்பாடு இழந்த என் மனத்தினிடம் கோபம்."

"போதும் போதும். ஓரேயடியாகக் கோபித்துக் கொள்ளாதே" என்று சிரித்தார் அருள்மொழி வர்மர். "அவ்வளவு கோபப்படும்படி உன் மனம் பெரிய தவறு எதும் செய்துவிடவில்லை. சந்தேகமிருந்தால் சிவலோகநாதன் வல்லவரையர் வந்தியத்தேவரை வினவட்டும். நீ வானதியைக் கேட்டுப் பார்!"

## 3

"அம்மா! நீ எதற்கு இன்னும் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்? எனக்கு ஏற்பட்டுவிட்ட இந்தக் கதியைப் பார்த்துக் கண்ணீர் உகுத்துக் கொண்டிருக்கவா? நீ புறப்பட்டுப் போ!"

"எங்கே போகச் சொல்கிறாய்?"

"பாண்டிய நாட்டுக்கே திரும்பப் போயேன். இங்கே என்ன சாதிக்கப் போகிறாய்?"

"உன்னை இங்கே விட்டு விட்டா?"

"பின்னே? என்னை உடன் அழைத்துச் செல்ல முடியுமா என்ன? உனக்கு இன்னும் புரியவில்லையா? என் கணவருடன் சேர்ந்து நானும் இங்கே சிறைப்படுத்தப்பட்டிருக்கிறேன் என்று நீ இன்னும் உணரவில்லையா?" அவள் விசும்பினாள். அடக்க மாட்டாமல் கண்ணீர் பெருகிக் கன்னங்களில் வழிந்தது.

"என் கண்ணே! உன் கதி இப்படியாகி விட்டதே! நான் என்ன செய்வேன்?" என்று புலம்பினாள் தாய். அவள் கண்ணீரைத் துடைத்து விட்டபடியே, "அப்போதே சொன்னேன்..." என்று ஆரம்பித்தாள்.

அவளை இடைமறித்து, "அப்போது சொன்னதைப் பற்றி இப்போது என்ன?" என்று சீறினாள் மகள், இங்கு மங்கும் தன் வட்டக் கருவிழிகளை ஒரு முறை சுழல விட்டு. தனிமையை உறுதிப்படுத்திக் கொண்டு தொடர்ந்தாள்: "அம்மா! எனக்கு சேரமான் பாஸ்கர ரவி வர்மனைப் பழிவாங்கியாக வேண்டும். அதற்கு நீ உதவுவாயா மாட்டாயா அதைச் சொல்!" என்றாள்.

"என்னை என்ன செய்யச் சொல்கிறாய் குழலி?"

"நீ பாண்டிய நாட்டுக்கே திரும்பிப் போ. ஏன், எதற்கு என்று யாரும் கேட்க மாட்டார்கள். மகளைப் பற்றிய பொறுப்பு இனி உனக்கு இல்லை. அதனால் சொந்த நாடு திரும்புகிறாய் என்று எண்ணுவார்கள். அங்கே போய் மன்னரைப் பார்த்து..."

"அமரபுஜங்கனையா?"

"சே! அவரைப் பார்த்து என்ன பயன்? அவர்தாம் பாஸ்கர ரவி வர்மனுக்கு உற்ற நண்பராயிற்றே!"

"பின்னர்?"

"பாண்டிய நாட்டுக்கு உரிமை கோரிக் கொண்டு இன்னொரு வீர பாண்டியன் அவ்வப்போது தலையெடுப்பதும், ஒடுக்கப்பட்டால் தலை மறைவதுமாய் இருக்கிறாரே அவரை நீ சந்தித்து...."

"அவரை நான் எங்கு போய்த் தேடுவேன், எப்படிப் பார்ப்பேன்?"

"அதுதான் உன் சாமர்த்தியம். அவருக்கு உன்னால் உதவ முடியும் என்பதைத் தக்கவரிடம் தெரியப்படுத்தினால் செய்தி மெல்ல மெல்ல அவருக்கு எட்டும். அவருக்கும் ஆவல் கிளர்ந்தெழும். அவரைச் சந்திக்கும் மார்க்கம் உனக்குத் தன்னால் தெரிய வரும். அல்லது யாரேனும் உன்னை நாடி வந்து அழைத்துப் போவார்கள். மதுரையிலேயே வீர பாண்டியனுடைய ஆட்கள் இருக்கிறார்கள். பூசாரி, மந்திரவாதி, கொல்லன் என்று பலவாறாகவும் காட்சி தருவார்கள். தொழில் நடத்துவார்கள். குறிப்பாக எனக்குத் தெரிந்த ஒரிடத்தைப் பற்றி மட்டும் விவரிக்கிறேன். கேட்டுக் கொள்கிறாயா?"

"மாட்டேன் என்று சொன்னால்தான் நீ விடப் போகிறாயா?" என்றாள் தாய். "வீர பாண்டியனைச் சந்திக்கும்போது அவனிடம் நான் என்ன கூறவேண்டும்?"

"விரோதியின் நண்பன் விரோதி" என்று உணர்த்த வேண்டும். "அமரபுஜங்கனின் நண்பன் பாஸ்கர ரவி வர்மன் வீரபாண்டியனின் விரோதி என்பதை எடுத்துச் சொல்.

சேரமானைத் தொலைத்துக்கட்டி அதே நேரத்தில் அமரபுஜங்கனையும் ஒழித்து வீரபாண்டியனே பாண்டிய நாட்டுக்கு மன்னனாகும் நாளை எதிர்பார்த்திருக்கலாம் என்று சொல்லு. அவனுக்காக நான் இங்கு வேவு பார்த்துக் கொண்டிருப்பேன் என்பதையும் தக்க சூழ்நிலையினை உருவாக்கி உரிய நேரத்தில் செய்தி கூறி அனுப்புவேன் என்பதையும் தெரிவி.''

''நம்புவானா?''

''இங்கு நடந்ததை நடந்தபடி விளக்கிக் கூறு. அடிபட்ட பெண் புலி பழிவாங்காமல் ஓயாது என்பதை உணர்வான்'' என்று கூறித் தாயை அனுப்பி வைத்தாள் வண்டார் குழலி. அதன் பின்னர் அவள் சாகசங்கள் ஆரம்பமாயின.

• • •

கிழவன் சோமேசுவரனுக்கு வயதுதான் ஏறியதே தவிர ஆசைகள் வடியவில்லை. அந்த ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ள அவன் உடலில் சக்தியும் இல்லை. இதையெல்லாம் அறிந்து அதற்கேற்பத் திட்டமிட்டு நடந்து கொண்டு அவனது நம்பிக்கையைப் பரிபூரணமாகப் பெற்றாள் வண்டார் குழலி. சோமேசுவரன் ரவிவர்மனும் மிகவும் மதிக்கப்பட்ட காரணத்தால் நாளடைவில் பல ராஜாங்க ரகசியங்கள் அவளுக்குத் தெரிய வந்தன.

கிழவன் தனக்கிருந்த ஆசை நாயகிகள் பலரை ஒதுக்கி வண்டார் குழலியையே அதிகம் நேசித்தான். இதனால் அசூயையுற்ற அவர்கள் அவனிடம் குழலியைப் பற்றி புகார் கூறினார்கள். குழலிக்கு அரசவையில் இருந்த சில இளைஞர்களுடன் தொடர்பிருப்பதாகக் கூறினர். பொறாமையால் அவர்கள் பிதற்றுவதாகச் சீறின சோமேசுவரன் அவர்களை மேலும் வெறுத்து ஒதுக்கினான்.

ஆனால் அவர்கள் கூற்றில் ஓரளவு உண்மை இல்லாது போகவில்லை. கிழப் பூனையிடம் அகப்பட்டிருந்த அந்த யௌவனக் கிளியிடம் பல இளைஞர்கள் அனுதாபம் கொண்டு கொஞ்சு மொழி பேசினார்கள். வண்டார் குழலி பட்டும் படாமலும் நடந்துகொண்டாள் சாமர்த்தியமாக. அவர்களை மறுத்து விலக்கவும் இல்லை, ரொம்ப நெருங்கவும் விடவில்லை. அபவாதத்துக்கு இடம் தராமல் காலத்தை ஓட்டி வந்தாள். சேரமான் ஒருவனைத் தவிர பாக்கி அனைவரையும் சுண்டுவிரலால் ஆட்டுவிக்கக் கூடிய தன் அபார சக்தியில் இறுமாப்புக் கொண்டாள்.

வனபோஜனத்துக்கு என்றும் வேட்டையாட என்றும் இளைஞர் கோஷ்டி அரண்மனையிலிருந்து புறப்படும்போது கணவரின் அனுமதி பெற்று அதில் கலந்து கொள்வாள் வண்டார்குழலி. சோமேசுவரனும் சில சமயம் வருவான். ஆனால் பெரும்பாலான தருணங்களில் அவரது தளர்ந்த உடல் அதற்கு இடம் தராது. இதற்காக அவள் சென்று வருவதற்கு அவர் என்றும் தடை விதித்தது இல்லை. 'இளம் நங்கை. அவளை நான்கு சுவர்களுக்கு இடையில் அடைத்துப் போட்டு விடக் கூடாது. அது அநீதி' என்று எண்ணினார். தன்னிடம் அவளுக்குள்ள காதல் கரை காண முடியாதது என்றும் கலையிலும் அவள் தனக்குத் துரோகமிழைக்க மாட்டாள் என்றும் நம்பினார்.

ஒருமுறை வனபோஜனத்துக்கும் வேட்டைக்கும் பாஸ்கர ரவி வர்மனே வந்திருந்தான். மந்திரி, சேனாதிபதிகள் உயர் அதிகாரிகள், அவர்களது பணிவியர் குமாரத்திகள் ஆகியோருக்கு இடையில் இருந்த இவள் மீதும் யதேச்சையாக அவன் பார்வை விழுந்தது. ''வண்டார் குழலி!'' என்று விளித்தான். ''பிரபோ!'' என்று அவள் அருகில் வந்ததும் ''உன் நாட்டியம் நடந்து ரொம்ப நாட்களாகிவிட்டனவே? நாளை மறுதினம் வைத்துக்கொள்வோமா?'' என்றான். அவன் கண்களில் சபலம் லேசாக எட்டிப் பார்ப்பதை உணர்ந்தாள் அவள். வசீகரமான ஒரு புன்னகையை உதிர்த்து விட்டுச் சொன்னாள்:

''மன்னா! எனக்குத் தேவையான நடன அரங்கினை நான்தான் தேர்ந்தெடுப்பேனே ஒழிய எனக்காக நாட்டிய அரங்கினை யாரும் தேர்ந்தெடுக்க அனுமதிப்பதில்லை.''

இந்தப் பதிலைக் கேட்டுச் சுற்றிலும் இருந்தவர்கள் அதிர்ந்தனர். அவளுடைய பதில் சவுக்கடியாக விழ விசுக்கென்று நிமிர்ந்தான் பாஸ்கரன். ''பெண்ணே! யாரிடம் பேசுகிறாய் தெரிகிறதல்லவா? உன்னை ராஜநர்த்தகியாக நியமித்த சேரமான் நான்!''

''தெரியும் பிரபோ! என்னைச் சோமேசுவரரின் ஆசை நாயகியாக நியமித்தவரும் தாங்கள்தான். இரண்டாவது நியமனத்தால் இயல்பாக முதல் நியமனம் அடிபட்டுப் போகிறது.''

''உன்னை நாடு கடத்திவிட முடியும் என்னால்!''

''உத்தரவிடுங்கள் மன்னா! கூடவே சோமேசுவரரையும் இழக்கத் தயாராகுங்கள். என்னை விட்டுப் பிரிந்திருக்க என் இன்னுயிர்க் காதலர் சம்மதிக்கவே மாட்டார்.''

ரவிவர்மன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. அவளால் சோமேசுவரரையும், அவரது அறிவாற்றலையும் எவ்வாறு இழந்து விட்டிருக்க முடியும்? சேர நாட்டின் பொக்கிஷங்களுள் ஒன்றுயிற்றே சோமேசுவரரின் மூளை.

''பெண்ணே! உன்னைச் சோதித்துப் பார்த்தேன். வென்றுவிட்டாய்'' என்று சமாளித்தான் மன்னன்.

''சோதனைகளில் வண்டார் குழலி என்றுமே தோல்வி கண்டதில்லை'' என்றாள் அவள் விட்டுக் கொடுக்காமல். சேரனுக்கு அவளிடம்








இலேசான அச்சம் தோன்றியது. தான் அவனுக்குப் பெரிய அநீதி இழைத்துவிட்டதாக உணர்ந்தான். அந்தக் குற்ற உணர்வு காரணமாகவே அவனுக்குப் பல சலுகைகள் தந்தான்.

குழலி தனியே பல்லக்கேறிச் சேர நாடு முழுவதும் சுற்றி வரலானாள். தன் அந்தரங்கத் தோழி ஒருத்தியும் பல்லக்கைச் சுமப்போரும் ஒரு மெய்க்காப்பாளனும் மட்டும் உடன் வரச் சென்றாள். சேர நாட்டின் எழிலையெல்லாம் கண் குளிரக் காண விரும்புவதாகக் காரணம் கூறினாள். அவளைத் தடுப்பாரில்லை. வேவு பார்க்கும் நோக்கில் அவள் நடத்திய இத்தகைய பயணங்கள் ஒன்றின் போது ஒரு நாள் மாலை நேரத்தில் அவள் சிவலோகநாதனைச் சந்தித்தாள்.

## 4

தனக்கு அளிக்கப் பட்டிருந்த பெரும் பொறுப்பால் இலேசாக மமதை எட்டிப் பார்க்க, உதயபானுவின் காதலை உணர்ந்ததால், கர்வம் தலை தூக்க, அருள்மொழி வர்மனின் நட்பையும் அன்பையும் பெற்றிருக்கிறோம் என்பதால் பெருமிதம் சற்றே கிளர்ந்தெழ, அனைத்தும் இணைந்ததால் உருவான ஆணவம் தலைக்கேற சிவலோகநாதன் குதிரையைத் தட்டிவிட்டான்.

“சேரமானிடம் உன்னை நல்லெண்ணத் தூதுவனாக அனுப்புகிறேன். சில காலம் முன்பாக அரியணை ஏறியுள்ள அருள்மொழி வர்மன் அமைதியையே விரும்புகிறார் என்று தெரியப்படுத்து. இளம் வயதிலேயே நிறையக் களப் போர்களைக் கண்டுவிட்ட நான் இனிக் கலைப் போட்டிகளிலேயே ஈடுபட விரும்புகிறேன். உலகம் வியக்கும் வண்ணம் போர்ச் சாதனைகளை அல்ல; கலைச் சாதனைகளை நிகழ்த்த விரும்புகிறேன். இதை எடுத்துச் சொல்லு. நீ சேரனிடம் செல்வது போலவே வேறு பல ராஜ்ய மன்னர்களுக்கும் தூதர்கள் செல்கின்றனர் என்பதைவிவரித்துக் கூறு” என்றெல்லாம் அருள்மொழி பேசியவை ஏறக்குறைய அவனுக்கு மனப்பாடமாகிவிட்டிருந்தன. காடு, மலைகள், ஆறு சுனைகள், நெடுஞ்சாலைகள், குறுக்குப் பாதைகள், நகரங்கள், கிராமங்கள்எல்லாம் கடந்து ஒரே சீரான கதியில் விரைந்துகொண்டிருந்தது அவன் குதிரை. அவனுக்குக் களைத்துப் போகும்போது நிதானமாய்ச் செலுத்துவான். அது குதிரைக்கும் ஓய்வளித்ததாயது. இரவு நெருங்குகையில் அவன் எதிர்ப்படும் கிராமம் அல்லது நகரத்தில் தெரு ஓரத் திண்ணையில் அல்லது பயணியர் விடுதியில் படுத்துறங்கி மறு நாள் காலை மீண்டும் புறப்படுவான்.

வழி நெடுக அவன் மாறிவரும் காட்சிகளை அனுபவித்துக் கொண்டே சென்றான். காவிரியும் அதன் கிளை நதிகளும் பாய்ந்த பகுதியில் ஆற்றுப் பாசனத்தால் செழித்து வளர்ந்திருந்த வயல் வெளிகள், தென்னஞ்சோலைகள், பழத் தோட்டங்கள், வெற்றிலைக் கொடிகள், அங்கே உழைக்கும் கரங்கள், உழைப்பை இலேசாக்க எழும் பாடல்கள் எங்கும் பசுமை.. பசுமை.. பசுமை! வெகு தூரம் சென்ற பிறகு காட்சி மாறியது. கிணற்றுப் பாசனமான பூமியில் கவலைகள் ஏற்றங்கள். அதன் பிறகு மானம் பார்த்த பூமியில் புழுதி மண்டலம். இரவில் கருவேலங்காடுகளில் நரிகளின் ஊளையிடும் சப்தம் சேர நாட்டு எல்லையைக் கடந்ததுமே மீண்டும் பசுமை. ஆறுகள், சிற்றோடைகள், ஏரிகள் இதர நீர்நிலைகள், மலைகள், கணவாய்கள் பட்சி ஜாலங்களில் பல்வகை ஒலிகள். இவ்வாறு பலவிதக் காட்சிகளை அனுபவித்துக் கொண்டே செல்கையில் ஒரு காட்சி மட்டும் மாறாமல் அவன் மனக் கண் முன் சதா இருந்து கொண்டிருந்தது. அது, உதயபானுவின் பால் நிலவு மேனியில் பூத்துக் குலுங்கிய எழில். ‘அன்று மட்டும் அருள்மொழி வர்மர் அந்தச் சமயம் பார்த்து வந்து தொலைக்காமலிருந்தால்.... சே! என்ன அசட்டு எண்ணம்!’ என்று அவன் தன்னைத் தானே கடிந்து கொண்டான். ‘அவர் வந்ததுதான் நல்லதாயிற்று. சந்தேகமென்ன? இல்லாதபோனால் இப்போது நான் அனுபவிக்கிற ஏக்கத்துடன் கூடிய எதிர்பார்ப்பை அது அளிக்கிற இன்பத்தை உணர முடியுமா?’

மாலை வேளையில் அவன் ஒரு சிற்றோடையை அடைந்தான். அதன் கரையில் போரடித்துப் போட்ட வைக்கோல் சிதறலைப் பொறுக்கி எடுத்து ஓடையில் இறங்கிக் குதிரையைத் தேய்த்துக் குளிப்பாட்டினான். பின்னர் அதனைக்கரையேற்றி மேயவிட்டான். குதிரையைக் குளிப்பாட்டிய இடத்திலேயே தானும் குளிக்க விரும்பாமல் சற்றே ஓடைக் கரையோடு மேலேறி நடந்தான். கொஞ்ச தூரம் நடந்ததும் ‘ஹோ’ என்ற ஓசை கேட்கவே அருவி விழுவதை உணர்ந்து அதில் குளிக்கலாம் என்று இன்னும் மேலே சென்றான். அங்கு சிற்றாற்றின் மறு கரையில் ஒரு பல்லக்கு இறக்கி வைக்கப் பட்டிருந்தது. பல்லக்குத் தூக்கிகளைக் காணோம். பல்லக்கிலிருந்து இறங்கியிருந்த இரு பெண்கள் மட்டும் அருவியிலும் பிறகு ஆற்றிலும் குளித்துக் கொண்டிருந்தனர். இவனை அவர்கள் கவனிக்கவில்லை. பெண்கள் குளிக்கும்போது தான் அங்கிருப்பது முறையல்ல என்றுதான் பல்லக்குத் தூக்கிகள் அப்பால் சென்றிருக்க வேண்டும். அவர்களுடன் வந்த ஒரு மெய்க்காப்பாளனும் அவ்வாறே சென்றிருக்கலாம் என்பதற்குத் தனித்து நின்ற ஒரு குதிரை சாட்சியம் கூறியது.

சிவலோகநாதனும் தான் அங்கு தாமதிப்பது தவறு என உணர்ந்து திரும்பிவிட யத்தனித்தான். அச்சமயம் அவன் கண் பார்வையில் பல்லக்கின் திரைச் சீலை பட்டது! அதில் பொறிக்கப்பட்டிருந்த வில் அம்பு சின்னத்தைப் பார்த்ததும் இவர்கள் அரச

குடும்பத்தை அல்லது அரண்மனையைச் சேர்ந்தவர்கள் என்று புரிந்து கொண்டான். அரசவையையே இவனும் நாடிச் சென்று கொண்டிருந்ததால் இவர்கள் யார் என்று தெரிந்து கொள்ளும் ஆர்வம் ஏற்பட்டது.

அருவியை நெருங்காமல் சற்று எட்டத்திலேயே சிற்றாற்றில் • இறங்கி நீராடி நீந்திய படியே மறு கரையை அடைந்தான். உடலைத் துவட்டிக் கொண்டு சுற்று முற்றும் நோக்கியபோது புகை வாடை. வீசவே அந்தப் பக்கமாகச் சென்றான். பல்லக்குத் தூக்கிகளும் மெய்க் காவலனும் இரவு உணவு சமைப்பதில் ஈடுபட்டிருந்தார்கள். அப்பால் ஒரு வசதியான கூடாரமும் உருவாகியிருந்தது. உணவு வகைகளைப் பார்த்ததும் சிவலோகநாதனுக்கு வயிற்றைக் கிள்ளியது. பாவம், இத்தனை வகை உணவையும் இவர்களால் சமாளிக்க முடியாது. இன்றிரவு இவற்றைத் தீர்த்துக்கட்ட இவர்களுக்கு நாம் உதவிட வேண்டியதுதான் என்று தீர்மானித்துக் கொண்டவனாக மேலும் சற்று நெருங்கினான்.

அவர்கள் தங்கள் எஜமானி அருகில் இல்லை என்ற துணிவில் மனம் விட்டுப் பேசிக் கொண்டது அவன் செவிகளுக்கு எட்டியது.

''பாவம், ராஜ நர்த்தகி என்று பட்டம் பெற்று என்ன புண்ணியம்? கிழவனைக் கட்டிக் கொண்டு படுகிற பாடு பரிதாபம்தான்'' என்றான் ஒருவன்.

''அதனால்தான் ஆற்றைப் பார்க்கிறேன், அருவியைப் பார்க்கிறேன் கோவிலுக்குப் போகிறேன், குளத்தைக் காண்கிறேன் என்று புறப்பட்டு விடுகிறாள்'' என்றான் இன்னொருவன்.

''கிழவனும் இவள் அழகில் நன்றாக மயங்கித்தான் கிடக்கிறான். எதற்குமே மறுப்பு சொல்வதில்லை''

''சோமேசுவரர் மட்டுமில்லையப்பா! மன்னருக்கே இவளிடம் கொஞ்சம் கிறக்கம் தானாம்! நடந்த கதைதான் உனக்குத் தெரியுமே. கோபப்பட்டுச் சற்றும் யோசியாமல் கிழவனுக்கு. இவளைக் கொடுத்து விட்டாரே யொழிய அன்று முதலே இவளுக்காக மன்னர் ஏங்கிக்கொண்டுதான் இருக்கிறாராம். ஆனால் இவள் இப்போது முறுக்கிக் கொண்டிருக்கிறாள், மன்னரின் ஆசைக்கு இடம் தராமல்!''

''போதும், போதும்! என்ன அரட்டை? வேலையைக் கவனியுங்கள்'' என்று மெய்க் காப்பாளன் அதட்டும் குரலில் சொன்னான்.

சிவலோகநாதனின் ஆவல் மேலும் அதிகரித்தது. அருவியில் குளித்துக் கொண்டிருப்பவள் அரசனையே மயக்கிய அழகியா? அதையும் பார்த்துவிடத்தான் வேண்டும் என்று தீர்மானித்தவனாக அவர்களுடன் பேச்சுக் கொடுக்க ஓர் உபாயத்தை யோசித்தபடியே சிற்றாற்றங்கரையோடு கீழிறங்கிச் சென்றான். ஒரு சீழ்க்கை ஒலி எழுப்பியதும் அக்கரையில் மேய்ந்து கொண்டிருந்த அவன் குதிரை ஆற்றைக் கடந்து வந்து சேர்ந்தது. அதைச் சற்று மேலே அழைத்துப் போய்க் கழுத்தைத் தடவிக் கொடுத்துப் பின்புற முதுகை ஒரு தட்டுத் தட்டினான். குதிரை தன் எஜமானனின் கருத்தறிந்தாற்போல முன்னேறியது. சென்று அங்கு மேய்ந்து கொண்டிருந்த மெய்க்காப்பாளனின் குதிரையை அணுகி அதன் கழுத்தோடு தன் முகத்தை உரசியது.

''அடேய்! யாரடா அவன் இந்தக் குதிரையின் சொந்தக்காரன்! சேர நாட்டில் மைவிழி மாதர்தாம் ஆடவரை மையல் கொள்ளச் செய்வார்கள் என்று கேள்வி. ஆண் குதிரைகளை ஈர்க்கவும் பெண் குதிரைகளைப் பழக்கியிருக்கிறீர்களா?'' என்று உரக்கக் கேட்டவாறே அப்போதுதான் தன் குதிரையைத் தேடி வருவது போல் மேடு ஏறி வந்தான் சிவலோகநாதன்.

அந்தக் கூச்சலைக் கேட்டு வியப்புற்று மெய்க் காப்பாளன் எழுந்து வரவும் வண்டார் குழலி குளித்துவிட்டுப் பட்டு உடலின் மேல் புத்தாடையாகப் பட்டாடை அணிந்து வரவும் சரியாக இருந்தது. கேசத்தை உலர்த்திக் கொண்டே வந்தவள் இந்த அரவம் கேட்டு ஒரு கணம் திடுக்குற்று நின்றாள். அடுத்து அவளுக்குச் சிரிப்பு வந்தது.

சர்வர்: ''என்ன சார் கொண்டு வரட்டும்?''




அவர்: ''ஒரு காப்பி சர்க்கரை இல்லாம கொண்டுவா. காப்பிக்குப் போட வேண்டிய சர்க்கரையைப் பொட்டலமா கட்டிக் கொடுத்துடு.''

எஸ். சந்திரசேகர்

''யாரப்பா நீ? சேர நாட்டுப் பெண்களைப் பற்றியும் பெண் குதிரைகளைப் பற்றியும் ரொம்ப நல்ல அபிப்பிராயம் வைத்திருக்கிறாயே!'' என்றாள்.

''ஆகா! என் அபிப்பிராயம் மட்டுமா அது? சேரமான் அவையின் ராஜ 'நர்த்தகியுடைய சாகசங்கள்தாம் சோழ தேசம் வரையிலும் ஏன் அதற்கு அப்பாலும் எட்டியிருக்கிறதே'' என்றான் சிவா. அதே நேரத்தில் தன் எதிரே நின்ற பேரழகில்சொக்கியும் போனான். மாலைக் கதிரவனின் பொன்னொளி பட்டு அந்தச் சொர்ண மேனி மேலும் தகதகத்துக் கொண்டிருந்தது. தங்க விக்கிரகமானாலும் கரைந்துருகிவிடும் மென்மையும் அதற்கு உண்டென்று தோன்றியது. அவள் அவயவங்களின் எழுச்சியும் செழுமையும் சிவலோகநாதனின் கண்களைக் கூசச் செய்தன.

''ஓ! சோழ தேசத்தவனா நீ? அப்படி என்ன பேசிக் கொள்கிறார்கள் அங்கே ராஜ நர்த்தகி பற்றி?'' என்று கேட்டாள்,

''அவள் பேரழகியாம். ஈரேழு பதினாலு உலகங்களிலும் அப்படி ஓர் அழகியைக் காண முடியாதாம். எங்கள் மன்னர் அருள் மொழி வர்மரின் பட்டத்து அரசி வானவன் மாதேவி கூட அழகுக்கு அவளிடம் பிச்சை வாங்க வேண்டுமாம். சொல்லிக் கொள் கிறார்கள். எனக்கென்னவோ எல்லாம் மிகையாகத் தோன்றுகிறது!''

''எதனால் அப்படிச் சொல்கிறீர் வீரரே?''

''அந்த ராஜ நர்த்தகி இதோ என் கண் ணெதிரே தோற்றமளிக்கும் எழில் குவியலை விட அழகில் உயர்ந்தவளாக இருக்கவே முடியாது என்று எனக்குப் படுகிறது.''

''அடேய்! என்ன வார்த்தை மிஞ்சுகிறது? உன் குதிரையை இழுத்துக் கொண்டு ஓடி விடு! அயல் நாட்டவனாயிற்றே என்று பார்க் கிறேன். விபரீதத்துக்கு விலை பேசாதே! ஓடு!'' என்றான் மெய்க்காப்பாளன்.

''சரி!'' என்று அமைதியாகக் கூறிய சிவலோக நாதன், மெய்க்காப்பாளனுடைய குதிரையின் கடிவாளத்தைப் பற்றி இழுத் தான்.

''அடேய்! அது என் குதிரை! அதோ மேய்ந்து கொண்டிருக்கிறதே பயணக் களைப் புடன் சோர்ந்திருக்கும் சோனிக் குதிரை அதுதான் உன்னுடையது'' என்றான் மெய்க் காப்பாளன் குஞ்சரமல்லன்.

''அழகுதான்!'' என்று சீறினான் சிவா. ''சேர நாட்டில் இவ்வளவு ஏமாற்று வேலைகள் நடக்கும் என்று நான் எதிர் பார்க்கவே வில்லை. மன்னாதி மன்னர் அருள்மொழி வர்மர் தம் தூதனுக்கென்று விசேஷமாகத் தேர்ந்தெடுத்து அளித்த அராபியக் குதி ரையை இவன் தன்னுடையது என்று கூசா



மல் சொல்கிறானே! இது அடுக்குமா? அல்லது நான்தான் சும்மா விடுவேனா? சோழ தேசத்தவர் அப்படியொன்றும் ஏமாளிகள் அல்ல.''

''என்ன, அருள்மொழியின் தூதனா நீ!''

''ஆமாம், ஆமாம்! இந்த உதவாக்கரை நாட்டைப் போய்ப் பெரிதாக மதித்து நல்லெண்ணத் தூது வேறு அனுப்பினாரே அதைச் சொல்லுங்கள். அடேய்! என் குதிரையைத் தரப் போகிறாயா இல்லையா?''

குதித்தெழுந்தான் குஞ்சர மல்லன். ''நீ தூதனோ ஒற்றனோ சோழனோ பாண்டியனோ யாரானாலும் சரி, என் குதிரை மேல் கை வைத்தால் தொலைந்தாய்!'' என்றான்.

சிவலோகநாதன் கரங்களை முஷ்டியாக்கிக் கொண்டு அவன் மீது பாய்ந்தான். நாலு குத்துக்கள் பரிமாறப்படுவதற்குள் ''குஞ்சரமல்லா! நிறுத்து! விலகி நில்!'' என்று உத்தரவிட்டாள் வண்டார்குழலி. பின்னர் சிவலோகநாதனைப் பார்த்து, ''தூதரே! அமைதியாயிருங்கள். இந்தக் குதிரையை விடச் சிறந்ததான ஒன்பது குதிரைகளை உமக்குப் பரிசளிக்கிறேன். சரிதானே?'' என்றாள் புன்னகை புரிந்து.

''இந்தத் தேசத்தில் யாரை நம்புவது என்றே தெரியவில்லை. எல்லைக்குள் நுழைந்ததுமே பரி பறிபோகப் பார்க்கிறது. இப்போது உங்கள் வாக்குறுதியை நம்ப வேண்டுமானால் முதலில் நீங்கள் யார் என்று தெரிய வேண்டும்'' என்றான் சிவா.

''நீங்கள் சற்று முன் வர்ணித்தீர்களே ஈரேழு பதினாலு உலகங்களிலும் காணக் கிடைக்காத அழகி என்று; அந்த ராஜ





நர்த்தகி நான்தான். பெயர் வண்டார்குழலி'' என்றாள். அவள் இமைகள் படபடத்தபோது ஓராயிரம் மதன பாணங்கள் அவன் நெஞ்சில் பாய்ந்தன.

• • •

அன்றிரவு அவன் அவர்களுடனேயே சேர்ந்திருந்தான். விருந்தினனுக்கும் எஜமானிக்கும் முதலில் உணவு படைத்துப் பிறகு மற்றவர்கள் உண்டனர். அவர்கள் சாப்பிடும் போது சற்றுத் தள்ளி அமர்ந்திருந்து வண்டார் குழலியும் சிவலோகநாதனும் உரையாடினர். தன் அவல வாழ்க்கையைப் பற்றிக் கல்லும் கரையும் விதமாகப் பேசினாள் அவள். சிவாவின் அனுதாபத்தை முழுமையாகப் பெற்றாள்.

கணப்புக்காகவும் துஷ்ட மிருகங்களை விரட்டுவதற்காகவும் சமையல் செய்த நெருப்பு தொடர்ந்து எரிந்து கொண்டே இருந்தது. சந்திரோதயமும் ஆயிற்று. அவள் 'நாளை சந்திப்போம்' என்று கூறிக் கூடாரத்தினுள் நுழைந்தாள். இவன் திறந்த வெளியில் படுத்தான். கூடாரத்தின் உள்ளிருந்து ஒரு சோக கீதம் எழுந்தது. அது போர்க் காயங்கள் அளிக்கும் வேதனையை விட அதிகமாகத் துன்பத்தை அளிப்பதாக அவன் நெஞ்சைப் பிளந்து இருதயத்தைத் தாக்கியது. 'பாவம், ராஜ நர்த்தகி என்று பெயர் பெற்று இத்தனை அழகுடன் விளங்கி இவ்வளவு ஆற்றலை அடைந்திருந்தும் என்ன பயன்? மகிழ்ச்சி என்பதே இவள் வாழ்வில் இல்லையே' என்று எண்ணினான். உடல் களைத்திருந்தும் அவனுக்கு உறக்கம் வர நீண்ட நேரமாயிற்று.

மறுநாள் அவன் கண் விழித்தபோது பலபலவென்று விடிந்து நீண்ட நேரமாகிவிட்டிருந்தது. 'அடடே! இவ்வளவு நேரம் தூங்கி விட்டோமே' என்று வெட்கப் பட்டுக் கொண்டே அவன் எழுந்தபோது பெண்கள் இருவரும் ஏற்கனவே பல்லக்கில் ஏறிவிட்டிருந்தனர். புறப்பட அனைவரும் ஆயத்தமாக இருந்தனர். ''சேர நாட்டில் நிலவும் இன்னொரு நல்ல பழக்கம் சொல்லாமல் கொள்ளாமல் நழுவி விடுவதாக்கும்'' என்றான்.

அவள் சிரித்தாள். ''நீண்ட தூரம் நெடு நாள் பயணம் செய்து வந்திருக்கிறீர்கள். உங்கள் களைப்பு எனக்குத் தெரியும். அதனால் எழுப்ப வேண்டாம் என்று கட்டளையிட்டேன்'' என்றாள்.

''உங்களை மீண்டும் எப்போது சந்திப்பது?''

''அரசவைக்குத் தானே வருகிறீர்கள், பார்ப்போம். நாங்கள் தயாரித்த காலை உணவில் சிறு பகுதி உங்களுக்காக எடுத்து வைத்திருக்கிறது. பசியாறுங்கள்.''

''சேர நாட்டினரின் உணவின் ருசியை நேற்று உணர்ந்தேன். இன்று உபசரிப்புக் கலையிலும் உயர்ந்தவர்கள் என்று புரிந்து கொண்டேன்.''

''சோழ நாட்டினர் முகஸ்துதி செய்வதில் வல்லவர்கள் என்று நேற்று அறிந்தேன். நாடகக் கலையில் கை தேர்ந்தவர்கள் என்பதையும் கூடவே உணர்ந்தேன்'' என்று கூறிக் குறிப்பாக அவன் குதிரையை நோக்கினாள். பல்லக்கின் பட்டுத் திரை இறங்கியது. உள்ளிருந்து கைதட்டும் ஒலி எழ பல்லக்குத் தூக்கிகள் அதனைத் தோளில் சுமந்து ஒரே சீராக ஓடத் தொடங்கினார்கள். குஞ்சர மல்லன் இவனைத் திரும்பிக் கூடப் பாராமல் பல்லக்கைப் பின்தொடர்ந்தான்.

நடந்ததெல்லாம் கனவல்ல என்பதற்கு அடையாளமாகக் காலை உணவு தயாரித்த இடத்தில் தீ இன்னமும் எரிந்து கொண்டிருந்தது. அருகே உணவுடன் கூடிய ஒரு துணி மூட்டை.

முகம் கழுவிக் கொண்டு வந்து அதனைப் பிரித்தான். வாழை இலையில் சுற்றிய பணியாரங்கள். இலைக்கும் பட்டுத் துணிக்கும் இடையில் சில ஓலை நறுக்குகள். எடுத்துப் படித்தான். ''அன்பரே! ஒரே ஒரு மாலை சந்திப்புத்தான். இருந்தாலும் உங்களை என்னால் சுலபத்தில் மறக்க முடியும் என்று தோன்றவில்லை. தாங்களும் அவ்விதமே என்னைப் பற்றி எண்ணுவீர்களானால் இன்றிலிருந்து நாலாவது இரவு என்னைச் சந்திக்க முயலவும். வஞ்சி நகரின் ராஜ வீதியில் தேர்கள் பழுது பார்க்கப்படும் பட்டறை ஒன்றிருக்கிறது. அந்தத் தொழிற் கூடத்துக்குள் நுழைந்து அதன் பின்கட்டுக்கு வாருங்கள். அங்கு ஒரு செவிட்டு ஊமையை நீங்கள் சந்திக்க முடிந்தால் அவனிடம் முத்திரை மோதிரத்தைக் காட்டுங்கள். என்னைக் காண்பதற்கான வழி பிறக்கும்!'

''அன்பரே! நீங்கள் வந்தாலும் சரி, அல்லது நமது நட்பு நேற்றைய ஒரு தினக் கனவாக மங்கி மறைவதானாலும் சரி, தயவு செய்து மறவாமல் இந்த ஓலையை உடனடியாக அதோ இன்னும் எரிந்து கொண்டிருக்கும் நெருப்பில் இட்டுக் கொளுத்திப் பொசுக்கி விடுங்கள். இந்த அபலைக்கு ஏற்கனவே உள்ள அபக்கியாதிகள் போதும். இந்த ஓலை வேறு சந்தர்ப்பவசமாக யார் கையிலாவது சிக்கி அதனால் புதிய தொல்லைகள் விளைய வேண்டாமே!''

இரு ஓலை நறுக்குகளையும் இணைத்துக் கட்டியிருந்த பட்டு மணிக் கயிற்றில் ஒரு முத்திரை மோதிரமும் தொங்கியது. அதிலே வில் அம்புச் சின்னம் காணப்பட்டது. சிவலோகநாதன் முத்திரை மோதிரத்தைப் பத்திரப் படுத்திக் கொண்டான். எழுந்து சென்று ஓலையை நெருப்பிலிடப் போனான். பிறகு தயங்கி இடைக் கச்சில் பத்திரப்படுத்தினான். மீண்டும் மனம் மாறியவனாக ஓலையை அதனை எழுதியவள் விருப்பப்படியே நெருப்பிலிட்டுச் சாம்பலாக்கினான்.

## 5

சேரமானிடம் அருள்மொழி வர்மரின் இலச்சினையைக் காட்டிச் செய்தியைத் தெரிவித்து அரச முத்திரை இடம் பெற்றிருந்த ஓலையையும் அளித்தான் சிவலோகநாதன். பாஸ்கர ரவிவர்மனின் நன்றியையும் வாழ்த்தையும் பெற்றுக் கொண்டான். அருள்மொழி வர்மர் அனுப்பிய பரிசுகளை ஏற்று ஓலையைப் படிக்கச் செய்து அகமும் முகமும் மலர—தூதனைப் போற்றிய சேரமான், "சிவலோகநாதா! சேர நாட்டின் விருந்தோம்பலைச் சில காலம் இங்கிருந்து நீ ஏற்க வேண்டும். ஓய்வு கொள்ளவும் வேண்டும். அதற்குள் சோழச் சக்கரவர்த்திக்கு எமது பரிசுகளையும் பதிலையும் ஆயத்தம் செய்கிறேன்" என்றான். "வஞ்சி நகரின் செல்வச் செழிப்பினை நீ காண வேண்டாமா? இங்குள்ள பலவித அங்காடிகளை நீ பார்க்க வேண்டாமா? முத்தும் பவழமும் தந்தத்தாலான கலைப் பொருட்களும் சந்தனம் ஏலம் போன்ற வாசனைப் பொருட்களும் குவிந்து கிடப்பதைப் பார். அப்புறம் இங்குள்ள இயற்கை எழிலை யெல்லாம் கண் குளிர அனுபவி. அது அலுத்து விட்டால் இருக்கவே இருக்கின்றன கேளிக்கை விடுதிகள். சிவலோகநாதா! சேர நாட்டின் இளம் பெண்கள் பேரழகிகள் மட்டுமல்ல. கொஞ்சம் பேராசையும் கொண்டவர்கள்! உன்னைப் போன்ற கட்டழகனைக் கண்டால் போட்டி பலமாகவே இருக்கும். எச்சரிக்கையாக இரு!"

இதைக் கேட்டு அவையோர் கலகலவென்று சிரிக்க சிவலோகநாதனும் அந்த நகையொலியில் கலந்து கொண்டான்.

"மன்னா! சோழ நாட்டு வாலிபர்கள் எந்தப் போட்டிக்கும் அஞ்ச மாட்டார்கள்" என்றான்.

இப்போது நகைப்பொலி பலமாகவே இருந்தது.

அதனூடே அவன் கண்கள் நாலாபுறமும் சுழன்று வண்டார் குழலியின் இரு கயல் விழிகளையும் தேடின. 'பாஸ்கரா! உனது சேர நாட்டுப் பெண்கள் யாருக்கு வேண்டும்? இங்கு வந்துள்ள ஒரு பாண்டி நாட்டு நர்த்தகி போதும் எனக்கு! அரம்பையையும் ஊர்வசியையும் தோற்கடிக்கும் அந்த அழகுத் தேவதையை நான் மறுபடி சந்தித்தாக வேண்டும். இன்பக் கதைகள் பேசி இனிய பொழுதாகக் கழிக்க வேண்டும்' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட அவன் நகைப்பொலி அடங்கக் காத்திருந்தவன் போல் விட்ட இடத்தில் தொடர்ந்து உரக்கப் பேசினான்: "எனவே தங்கள் பதிலும் பரிசுகளும் ஆயத்தமாக எவ்வளவு கால தாமதமானாலும் பாதகமில்லை!"

மறுபடியும் அவையில் சிரிப்பொலி பீறிட்டு எழுந்தது. வண்டார் குழலியைக் காணாமல் அவன் கண்கள் ஏமாற்றமடைந்தன.

ஆயினுமென்ன, அவன் கருத்துப்படியே நான்காவது இரவு குறிப்பிட்ட இடத்துக்கு வந்து சேர்ந்தான். தொழிற் பட்டறையில் இரவு நேரமானபோதிலும் அவசர வேலைகளை மட்டும் ஒருசிலர் தீப்பந்தங்களின் ஒளியில் கவனித்துக் கொண்டிருந்தனர். அவள் சொல்லிக்கொடுத்திருந்தபடியே பின் கட்டுக்குள் நுழைந்தான். அங்கு உலைக்களத்துத் துருத்தியை இயக்கிக் கொண்டிருந்த ஒருவன் மட்டுமே காணப்பட்டான். இவன் வருவதையே அவன் உணராததால் கடமையே கண்ணாக ஓர் இயந்திர கதியில் இயங்கிக் கொண்டிருந்ததால் அவன்தான் வண்டார் குழலி குறிப்பிட்ட செவிட்டு ஊமையாக இருக்க வேண்டும் என்று ஊகித்தான். அவனை இவன் தொட்டதும் அவன் தலை திரும்பிப் பார்த்துப் பேந்தப் பேந்த விழித்தான். ஐயம் தீரவே தன் இடைக் கச்சிலிருந்து முத்திரை மோதிரத்தை எடுத்துக் காட்டினான் சிவலோகநாதன். தீப்பந்தத்தின் ஒளியில் அதைப் பார்த்ததும் இலேசாகப் புன்முறுவல் செய்தான் செவிட்டு ஊமை. சுற்று முற்றும் ஒருமுறை பார்த்துக் கொண்டான். பலகணியின் கதவையும் சிவலோகநாதன் நுழைந்து வந்த வாசலின் கதவையும் சாத்திவிட்டுத் திரும்பினான். ஒரு பக்கச் சுவரில் தேர்ச் சக்கரம் ஒன்று பொருத்தப்பட்டிருந்தது. அதன் மையத்தில் தன் இடையிலிருந்த ஒரு விசையை எடுத்துப் பொருத்தித் திருகினான் ஊமை. பிறகு சக்கரத்தைச் சுழற்ற அது மைய அச்சில் சுழன்றது. வலப்புறம் சுவர் விலகி ஒரு சிறு துவாரம் தெரிந்தது. சீக்கிரம் சீக்கிரம் என்று செவிடன் ஜாடை காட்டவே சிவலோகநாதன் அந்தத் துவாரத்தில் நுழைந்தான். தவழ்ந்துதான் செல்ல வேண்டியிருந்தது. அடுத்த கணம் செவிட்டு ஊமை சக்கரத்தை மறுபுறமாய்ச் சுழற்ற விலகிய சுவர் மீண்டும் இணைந்துகொள்ள சிவலோகநாதனை அந்தகாரம் சூழ்ந்தது. வந்தது வந்தாயிற்று. இனிப் பின்னேறவும் முடியாது என்பதை உணர்ந்து நெஞ்சைத் திடப்படுத்திக் கொண்டு மேலே தவழ்ந்தான். சற்று தூரம் சென்ற பின் துவாரம் பெரிதாயிற்று. ஓர் ஆள் சற்றே குனிந்து நடந்தால் தலை இடிக்காமல் செல்லக் கூடிய சுரங்கப் பாதை. இலேசாகப் படர்ந்த வெளிச்சம் ஒரு திரும்புமுனையில் தீவட்டி ஏற்றிவைக்கப்பட்டிருப்பதை உணர்த்தியது. அது வழக்கமான காரியமா அல்லது தன்னை எதிர்பார்த்து வண்டார் குழலி செய்த முன்னேற்பாடா என்று யோசித்த வண்ணம் மேலே நடந்தான் சிவலோகநாதன். என்ன



அவர் : "என் பொதுக்கூட்டப் பேச்சை எந்த சி. ஐ. டி. யும் ரிப்போர்ட் செய்ய முடியாது!"

இவர் : "ஏங்க...?"

அவர் : "அவ்வளவு குழப்பமாகப் பேசுவேன்!" - உ. ராஜாஜி



தான் தைரியசாலியாக இருந்தாலும் அவன் இதயம் என்னவோ திக் திக்கென்று அடித்துக்கொண்டுதான் இருந்தது. சடபடவென்று ஒரு வௌவால் அவன் மேல் விழுந்தடித்துக் கொண்டு பறந்தபோது ஒரு கணம் நிலை குலைந்துதான் போய்விட்டான். பிறகு 'சே! இவ்வளவு பயந்தாங்கொள்ளியா நான்' என்று தன்னைத் தானே நொந்து கொண்டான். இருட்டைக் கண்டோ அல்லது சுரங்கப் பாதையைக் கண்டோ பயமில்லை. தவறான ஒரு காரியத்தில் இறங்கி விருப்பதால்தான் நெஞ்சம் நடுங்குகிறது என்று அவனுக்குப் புரிந்தது. ஆயினும் அதே நேரத்தில் வண்டார் குழலியின் பொன் வண்ண மேனி அருவி நீரில் மறைந்தும் மறையாமலும் காட்சி தந்த கண் கவர் வனப்பு அவன் மனக் கண் முன் தோன்றி அவனை மேலே மேலே கவர்ந்திழுத்துச் சென்றது.

சுரங்கப் பாதை இறங்கியும் ஏறியும் சென்றது. சில இடங்களில் இரும்பியும் வளைந்தும் குறுகலாயும் அகலமாயும் இருந்தது. ஒரு கட்டத்தில் மேலே நீர் அலை மோதுவது போல் ஓசை கேட்டது. சுவரில் ஈரக் கசிவு இருந்தது. அரண்மனையையும் அரசு மாளிகைகளையும் உள்ளடக்கிய அகழியையும் மதிலையும் கடந்து செல்கிறோம் என்றுஎண்ணினான். இன்னும் கொஞ்சம் தூரம்தான். சோமேசுவரனின் அந்தப்புரத்தில் வண்டார் குழலியின் 'அந்தரங்க அறைகளுக்கே இந்தச் சுரங்கப் பாதை நம்மைக் கொண்டு விட்டு விடும்! அவள் ஆவலோடு தனக்காகக் காத்திருப்பாள்! ஆர்வம் மீதுற விரைந்தான் சிவா. சுரங்கப் பாதை ஒரு கட்டத்தில் முடிந்து விட்டதாகத் தோன்றியது. ஆனால் எப்படி இங்கிருந்து வெளியேறுவது? இருளுக்குப் பழக்கப்பட்ட கண்களால் சுற்று முற்றும் பார்த்தான். சற்றுத் தொலைவில் இருந்த தீப்பந்தத்தின் மங்கிய ஒளியில் சுவரில் ஒரு தேர்ச் சக்கர வடிவம் தென்பட்டது. ஆனால் இது பட்டறையில் பார்த்தது போன்ற பெரிய சக்கரம் அல்ல. சின்னஞ் சிறியது. அதைச் சுழற்றினான். சுழல மறுத்தது. அவனைப் பீதி ஆட்கொள்ள ஆரம்பித்தது. இங்கேயே நம்மை யாராவது கண்டுபிடித்துக் கைதியாக்கும்வரை அடைபட்டுக் கிடக்க வேண்டியதுதானா? திரும்பி விடுவோமா? திரும்பினால் மறுபக்கக் கதவை உட்புறமிருந்து நம்மால் திறக்க முடியும் என்று என்ன நிச்சயம்? பெரிய சக்கரத்தின் மையத்தில் செவிட்டு ஊமை ஏதோ விசையைப் பொருத்திக் இருந்தது இவன் நினைவுக்கு வந்தது. இந்தச் சிறிய சக்கரத்தின் மையத்திலும் ஏதாவது விசை இருக்குமோ? விரலை வைத்து நெருடினான். அழுத்தினான். ஏதோ விசை சுழல்வது போலிருந்தது. அழுத்திய நிலையிலேயே மற்றொரு கரத்தால் சக்கரத்தைச் சுழற்ற, சுழன்றது. சுவர் நகர்ந்து வழி விட்டது. சிறிய திட்டி வாசல் போல் இருந்த அந்தத் துவாரத்தினுள் நுழைந்து சென்றான். ஓரிரு கணங்களில் சுவர், இடைவெளி இருந்தது தெரியாமல் மூடிக்கொண்டு விட்டது.

சுற்று முற்றும் பார்த்தான் சிவலோக நாதன். பெரிய அறை; அதன் சுவர் ஓரமாகப் பல பெட்டிகள், பேழைகள். ஒரு பக்கம் உயரே சாளரம். அறைக் கதவு சாத்தப்பட்டிருந்தது. அது வெளிப்புறம் தாளிட்டுப் பூட்டப்பட்டுமிருக்கும் என்று எண்ணினான். இனி என்ன செய்வது? வண்டார் குழலி இங்கு வந்து தன்னை அழைத்துப் போகும் வரை காத்திருக்க வேண்டியதுதான். சந்தர்ப்பம் சரியில்லாமல் அவளுக்குத் தாமதமாகிறதோ என்னவோ?

பெரிய சப்ரமஞ்சக் கட்டிலையும் திரைச் சீலைகளையும், அகிற் புகையையும் அகல் விளக்கையும் மலர்ச் சரங்களையும் மோகினிக் கோலத்தையும் எதிர்பார்த்து வந்தவனுக்கு என்னமோ போலிருந்தது. சற்று நேரம் செயலற்று உட்கார்ந்திருந்தவன் சலிப்பை நீக்க ஒரு பேழையைத் திறந்து பார்த்தான். பொற்கழஞ்சுகள்! இன்னொரு பேழையைத் திறந்தான். பவழங்கள்! மற்றொன்றில் முத்தாரங்கள்! மேலுமொன்றில் நவரத்தின மணிகள் சோமேசுவரனின் பொக்கிஷ நிலவறையா இது?

ஒரு பெரிய பெட்டியைத் திறந்து பார்த்தான். பதப்படுத்தப்பட்ட தோல் சுருள்கள் அடுக்கி வைத்திருந்தது. ஒன்றை எடுத்து அதனைச் சுற்றியிருந்த பட்டு நூலைப் பிரித்து விரித்தான். வரைபடம். சேரனின் கடற்கரைப் பட்டினங்களைக் குறிப்பது. அங்குள்ள கப்பல்களின் எண்ணிக்கையை விவரிப்பது. இன்னொரு தோல் சுருளைப் பிரித்தான். அதில் பல்வேறு கப்பல்களின் பெயர்கள் அவற்றின் எடை, 'தகுதி, திறமை, பலம் இதர சிறப்புக்களைப் பற்றிய குறிப்புக்கள் இடம் பெற்றிருந்தன. இந்தப் பெட்டி நிறைய கடற்படை பற்றிய விவரங்கள்தான் போலும்! இத்தனை விவரங்களையும் சேகரித்து வைப்பது கணக்கு அதிகாரி சோமேசுவரனின் கடமைகளுள் ஒன்று போலும்! மன்னன் கேட்கும்போது எந்தத் தினத்தில் எந்தத் துறைமுகத்தில் எந்தெந்தக் கப்பல்கள் உள்ளன அவற்றின் ஆற்றல் என்ன என்று பிசகின்றிக் கூறுவது அவன் பொறுப்பு என்றாகிறது!

மற்றுமொரு பெட்டியைத் திறந்தான். அதிலும் இதே போல் பாடம் செய்யப் பெற்ற தோல் சுருள்கள். அவற்றில் பல்வேறு கோயில்களுக்கு நிவந்தங்கள் அளிக்கப்பட்டிருந்தமை பற்றிய விவரங்கள். வேறொரு பெட்டியில் அரசாங்கப் பொக்கிஷ நிலவறையில் கையிருப்பு பற்றிய குறிப்புக்கள். மேலும் ஒன்றில் வருவாய் பற்றிய விவரங்கள், எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் பற்றிய குறிப்புக்கள். இன்னுமொன்றில் யானைப் படை பற்றிய விவரங்கள். பிறிதொன்றில் குதிரைப் படை பற்றிய கணக்குகள். மேலோட்டமாகத்தான் என்றாலும் அடக்க மாட்டாத ஆர்வத்துடன் ஒவ்வொன்றாகப் பார்த்துவந்த

சிவபோக தூதனுக்கு வியப்பும் சந்தேகமும் மேலிட்டன. சேரமானின் படை பலம், பொக்கிஷ பலம் பற்றிய அத்தனை ரகசியக் குறிப்புக்களும் இந்த அறையில்தானே பாதுகாக்கப்பட்டு வருகின்றன? இங்கேயா என்னை வரச் சொன்னான் வண்டார் குழலி? எதற்கு?



''நன்றி மாமா!''
''எதற்கு மாப்ளே?''
''உங்க மனைவியும் என் மனைவியும் ஆபீசிலிருந்து வருவதற்குள் எனக்கு நீங்க காப்பி கொடுத்ததற்கு!''
-''சுதர்ஸன்''

## 6

“எல்லாவற்றையும் பார்த்தாகி விட்டதா? தேவையான விவரங்களைச் சேகரித்தாகி விட்டதா?'' என்று குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினான் சிவா.

அங்கே குஞ்சர மல்லன் நின்றுகொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் திறந்த கதவு வழியாக அப்போதுதான் உள்ளே நுழைந்து கொண்டிருந்தான் ஒரு கிழவன். அவன்தான் சோமேசுவரனாக இருக்க வேண்டும்.

''யாரப்பா நீ? எதற்கு இங்கு வந்தாய்? எப்படி வந்தாய்? இங்கு அனுமதி இன்றி வந்தவர்கள் உயிருடன் திரும்பிச் செல்ல முடியாது என்பது தெரியாதா உனக்கு?'' என்று கடுமையாகக் கேட்டவர், குஞ்சர மல்லன் உயர்த்திப் பிடித்த தீப்பந்தத்தின் ஒளியில் அப்போதுதான் அவனை நன்றாகப் பார்த்தவராக, ''ஓ! நீ அருள்மொழி வர்மரின் தூதனல்லவா?'' என்றார் வியப்பு மேலிட.

''தூதனல்ல, ஒற்றன்! இது இப்போது புரிந்து விட்டது ஐயா!'' என்றான் குஞ்சர மல்லன்.

கையும் மெய்யுமாக அகப்பட்டுக் கொண்டோம் என்று உணர்ந்தான் சிவபோகதூதன். அவன் அருகில் ஒரு பெட்டி திறந்திருந்தது. அவன் கரத்தில் பிரிக்கப்பட்ட ஒரு வரைபடமும் இருந்தது.

''ஒற்றன் என்பதுதான் உள்ளங்கை நெல்லிக் கனியாகத் தெரிகிறதே! இவன் இங்கு எப்படி வந்தான் என்பதுதான் எனக்கு வியப்பு'' என்றான் சோமேசுவரன்.

''அதை நான் சொல்கிறேன்'' என்று கூறியபடியே உள்ளே நுழைந்தாள் வண்டார் குழலி. ''நான்கு தினங்களுக்கு முன் நான் யாத்திரை முடித்துக் கொண்டு திரும்பும் வழியில் இவனை யதேச்சையாகச் சந்தித்தேன். அப்போதும் தன்னைச் சோழ மன்னனின் தூதன் என்றுதான் அறிமுகப்படுத்திக் கொண்டான். பசியால் வாடிக் களைத்திருந்தவனிடம் கருணை கொண்டு உணவளித்தேன். அதற்குப் பிரதியுபகாரமாக இவன் குஞ்சர மல்லனின் குதிரையைத் திருடிச் செல்லப் பார்த்தான். ஆனால் அந்த முயற்சியில் நல்ல வேளையாக இவனால் வெற்றி பெற முடியவில்லை. அப்போதே நான் இவனைத் தண்டித்திருக்கலாம். நல்லெண்ணத் தூதன் என்றதால் தயங்கினேன்.''

''அப்படியா?'' என்றார் சோமேசுவரன். 'ஏன் என்னிடம் முன்பே கூறவில்லை?''

''சொல்ல வேண்டும் என்று தோன்றவில்லை பிரபோ! யாரோ ஒரு போக்கிரி என்னையும் குஞ்சர மல்லனையும் ஏமாற்றப் பார்த்து அம்முயற்சியில் தோல்வி அடைந்து விட்டான் என்றுதான் எண்ணினேனே தவிர அதைப் பெரிதாகக் கருதத் தோன்றவில்லை. சேரமானின் அரசவைக்கு இவன் வந்து சோழ மன்னரின் ஓலையைச் சமர்ப்பிப்பதைப் பார்த்திருந்தால் இவனிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று உடனே உங்களிடம் கூறியிருப்பேன். ஆனால் அன்று ராஜ சபைக்கே என்னால் வர முடியாமல் போய்விட்டது. உங்களுக்குத்தான் தெரியுமே அன்று நான் உடல் நலிவுற்றிருந்தது.''

வியந்து வாயடைத்துப் போனான் சிவா. 'எப்படியெல்லாம் கதையை மாற்றுகிறாள் இவள்! எதற்காக? இது தெரியவில்லையா? தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளத்தான். அப்படியானால் என் கதி? அவன் அவள் முகத்தைப் பார்த்தான். சலனமற்றிருந்த அந்த முகத்தில் மின்வெட்டும் நேரத்தில் ஓர் அபிநயம்! 'அஞ்சாதே! உன்னைக் காப்பாற்ற நான் இருக்கிறேன்' என்ற அபயக் குறி. என்னைக் காட்டிக் கொடுக்காதே என்ற கெஞ்சல். நடன மணியல்லவா அவள்! பேசாமல் மொழி பேசுகிறாள்!'

மறுத்துப் பேச வாய் திறந்தவன் தயங்கித் தடுமாறினான். 'இப்போது என்ன சொல்வது? குதிரையைத் திருட நான் முயலவில்லை என்பதா? குஞ்சர மல்லன் சும்மா இருப்பானா அதைக் கேட்டுக் கொண்டு? விளையாட்டு வினையாகிவிட்டதா? இனி என்ன செய்வது? இவள்தான் இங்கு என்னை வரச் சொல்லி முத்திரை மோதிரம் தந்தாள் என்பதா? அப்படிக் கூறினால் இவள் மீது — ஒரு பெண் மீது பயங்கரமான பழி சுமத்தியதாக ஆகும். அல்லது இவளை நம்பி இவ்வளவு தூரம் வந்துவிட்டவன் இனியும் இவளையே நம்பி மௌனம் சாதிக்கலாம். தலைக்குக் கிடைக்கக் கூடிய தண்டனையிலிருந்து எப்படியாவது இவள் தன்னைத் தப்புவிப்பாள் என்று எதிர்பார்த்துக் காத்திருக்கலாம். ஆனால் அது எப்படிச் சாத்தியமாகும்? இவளால் என்னை எப்படி நல்ல பெயருடன் இனிச் சோழ தேசத்துக்குத் திருப்பி அனுப்ப முடியும்?'

இந்தக் குழப்பங்களுக்கு இவன் விடை காண்பதற்குள் சோமேசுவரன் மீண்டும் அதே வினாவை எழுப்பினார். ''அதெல்லாம் சரிதான். ஆனால் இவன் இங்கு எப்படி வந்தான்? அதற்கு இன்னும் பதில் இல்லையே?''

''தாதா!'' என்று குழைந்தாள் குழலி. ''யாத்திரையிலிருந்து திரும்பியதுமே உங்களிடம் நான் சொல்லவில்லை? முத்திரை மோதிரம் காணாமல் போயிற்று என்று? குதிரையைத் திருட முயன்றவன் அதில் தோற்றதும் முத்திரை மோதிரத்தை என்னிட

# இல்லத்தரசிகளே!

உங்கள் எல்லாவித சலவை செய்யும் பிரச்னைகளுக்கு

சரியான பதில் இதோ



# டீபால்

## மல்டி–பர்ப்பஸ் திரவ டிடர்ஜெண்ட்

**டீபால்—உலக முழுவதும் மாதர்கள் உபயோகிக்கும் உலகத் தரம் வாய்ந்த ஒரு தயாரிப்பு**

டீபால் உலகம் பூராவும் பரவியுள்ள ஷெல் நிறுவனத்தின் தரமான டிடர்ஜெண்ட் கலவைக் கூற்றை இப்போது இந்திய இல்லத்தரசிகளுக்கு நோஸில் (ஒரு மஃபத்லால்-ஷெல் கம்பெனி) வழங்குகிறது.



**டீபால்—அழுக்கை விரைவாகத் துரத்துகிறது**

திரவ டிடர்ஜெண்டாக இருப்பதால் டீபால் நீரில் உடனடியாகக் கரைகிறது. ஆகவே நீங்கள் சுத்தம் செய்ய விரும்பும் எல்லாவற்றையும் உடனடியாக சுத்தம் செய்யத் தொடங்கிவிடலாம்.



**டீபால்—மடிப்பு விழுவதை போக்குகிறது**



அதன் சக்திவாய்ந்த டிடர்ஜெண்ட் செயலால், டீபால் மடிப்பின் சுவடு தெரியாமல் போக்கி விடுகிறது. பாதி முயற்சியில் இரண்டு மடங்கு சுத்தம் செய்கிறது.

**டீபால் பணத்தை மிச்சப் படுத்துகிறது**

டீபால் முழுச் செறிவுள்ளது. பெரிய அளவில் துவைக்கும் வேலைக்கு சிறிய அளவு டீபால் உபயோகித்தால் போதும்.

**டீபால் பல பயனுள்ள சுத்தம் செய்யும் சாதனம்**

இந்த திரவ டிடர்ஜெண்ட் ஒன்றே பலவற்றின் வேலையை அற்புதமாக செய்கிறது. இது டைல்கள், பாட்டில்கள், ஜாடிகள், ஜன்னல்கள், கண்ணாடிகள், மாசாமான், கம்பளங்கள், தட்டுமுட்டு சாமான்கள், தட்டுகள், கட்லரி, அடுப்புகள், ஸானிடரிவேர் மற்றும் தரை முதலியவற்றை சுத்தம் செய்கிறது.



**குறைந்த அளவு டீபால் நிறைந்த அளவு சுத்தம் செய்கிறது!**

விற்பனைக்கு விடுப்போர்:




**நேஷனல் ஆர்கானிக் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.,**
மஃபத்லால் ஸெண்டர், நரிமன் பாயிண்ட்,
பம்பாய்-400 021



யிருந்து களவாடுவதில் எப்படியோ வெற்றி கண்டிருக்கிறான். அதைப் பயன்படுத்தி இங்கு வந்துவிட்டிருக்கிறான்!''

'ஏதோ பெரிய சூழ்ச்சியில் தான் அகப்பட்டுக் கொண்டிருப்பதாகப் புலனாயிற்று சிவலோகநாதனுக்கு. தன்னை ஒற்றன் என்று நிரூபிக்க இவள் படாத பாடு படுகிறாள். ஏன்? எதற்கு? என்னை ஒற்றன் என்று பழி சுமத்திச் சிறையில் தள்ளுவதால் இவளுக்கு என்ன லாபம்?' ஒரே குழப்பமாக இருந்தது அவனுக்கு. வண்டார் குழலி சோமேசுவரன் குஞ்சரமல்லன் அந்த அறையிலிருந்த பொக்கிஷப் பேழைகள் கணக்கு விவரங்களைக் கொண்ட பெட்டிகள் எல்லாமே கண்ணெதிரே சுழன்று சுழன்று வந்தன. தயவு செய்து இந்த ஓலையைக் கொளுத்திவிடுங்கள் என்று அவன் கெஞ்சிக் கேட்டது இதற்குத்தானா? அதனைப் பத்திரப்படுத்தாமல் விட்டது எத்துணை பெருந் தவறு? சட்டென்று அவன் தன்னைச் சுதாரித்துக் கொண்டான்.

''முத்திரை மோதிரத்தை இவளிடமிருந்து நான் களவாடியிருந்தாலும் அதைப் பயன்படுத்த வேண்டிய இடம் எது என்பது எனக்கு எப்படித் தெரிய வந்தது? அதை யார் எனக்குச் சொல்லிக் கொடுத்தது? ராஜவீதியில் தேர்ப் பட்டறையின் பின்கட்டுக்கு வந்தால் சுரங்கப் பாதையின் கதவு திறக்கும் என்று ஓர் அன்னியனுக்கு, அயலானுக்கு வஞ்சி நகருக்கு மூன்று நாட்கள் முன்னதாகத்தான் வந்து சேர்ந்த ஒருவனுக்கு எப்படித் தெரியும்? இவளன்றி வேறு யார் அந்த ரகசியத்தை என்னிடம் வெளியிட்டார்கள்? சோமேசுவரரே! அதைக் கேளுங்கள் உமது ஆசை நாயகியிடம்!'' என்றான் சிவலோகநாதன் ஆத்திரத்துடன்.

''அதுதானே கேட்கிறேன். ஆச்சரியமாயிருக்கிறதே குழலி! அந்த விவரம் உனக்கும் எனக்கும் மன்னருக்கும் மட்டுமே தெரிந்த ரகசியமல்லவா? அந்தச் செவிட்டு ஊமை ஜாடை மாடையாகக் கூட யாரிடமும் இது பற்றிப் பேசியிருக்க முடியாதே! அவனுக்கு என்னிடம் தேவதா விசுவாசம் ஆயிற்றே!'' என்றார் சோமேசுவரன்.

அவளுடைய அழகிய முகம் கணப்போது விகாரமடைந்தது. அவனை எரித்துவிடுவது போல் பார்த்தாள். இமைக்கும் நேரத்தில் அது மீண்டும் சாந்த சௌந்தரியத்தைக் குறைவறப் பெற்றது.

''நாதா! இதிலிருந்தே தெரியவில்லையா? சோழ தேசத்திலிருந்து வந்திருக்கும் ஒற்றன் இவன் ஒருவன் மட்டுமல்ல வேறு பலரும் இங்கே ஏற்கனவே வலிய வந்து கொண்டிருக்கிறார்கள் என்று? கடந்த மூன்று தினங்களில் அவர்களுடன் தொடர்பு கொண்டு அறிந்த தகவல்கள் இவனுக்கு இந்த இடத்துக்கு வரும் மார்க்கத்தை உணர்த்தியிருக்கும். அந்த மார்க்கத்தில் இவன் வழி நடக்க என்னிடமிருந்து களவாடிய முத்திரை மோதிரம் உதவியிருக்கிறது!''

''பொய், பொய்! அத்தனையும் பொய்! கற்பனைக் கதை அளக்கிறாள்! சோமேசுவரரே உமது ஆசை நாயகியை நம்பாதீர்கள்'' என்று சொல்லும்போதே சிவலோகநாதனுக்குத் தன் வழக்கில் வலுவில்லை என்பது புரிந்தது.

சோமேசுவரர் சிரித்தார். ''என் உயிருக்குயிரான இவளை நான் நம்பாமல் ஓர் ஒற்றனையா நம்ப முடியும்?''

''நாதா!'' என்று குழைவாக அழைத்தாள். ''இன்னும் ஏன் தாமதம்? இவனைக் கைது செய்து விசாரிக்கிறபடி விசாரித்தால் இவனைத்தவிர இங்கு ஏற்கனவே உள்ள ஒற்றர்கள் பற்றிய விவரங்களையும் அறியலாம். அத்தனை பேரையும் ஒழித்துக்கட்ட அருமையான சந்தர்ப்பம்!''

சிவலோகநாதனை நோக்கி ஒரு வெற்றிப் புன்னகையை வீசினாள் வண்டார் குழலி.

''அடிப் பாவி! மோசக்காரி! சண்டாளி! சூனியக்காரி! என்ன சூழ்ச்சி இது? எதற்கு என்னை இப்படிப் பலியிடுகிறாய்?'' என்று இரைந்து ஏசினான் சிவலோகநாதன். அது துரிதமாக ஒரு முடிவுக்கு வர சோமேசுவரனுக்கு உதவியது. ''யார் அங்கே?'' என்று அழைத்தார் அவர். ஒற்றனைக் கைது செய்யக் குஞ்சர மல்லன் ஒருவன் மட்டும் போதாது என்ற முன்னெச்சரிக்கையோடு!

சிவலோகநாதனின் கண்ணெதிரே அடுத்தடுத்துப் பல காட்சிகள் மின்னல் வேகத்தில் தோன்றின. ராஜ சபை — பாஸ்கர ரவிவர்மன் — வழக்கு, விசாரணை — குஞ்சர மல்லன் வண்டார் குழலியின் சாட்சியங்கள்— சோமேசுவரனின் அறிவுரை — தீர்ப்பு— சிறைச்சாலை — சித்திரவதை — இல்லாத பிற ஒற்றர்களைப் பற்றி அறிய முயற்சி — அது பலனளிக்காமல் போக மேலும் கடுமையான சித்திரவதை — வேதனைகளை அனுபவித்துக் கொண்டு துடிதுடித்தபடி மரணம்!

''அருள்மொழி வர்மரே! என்னை உங்களால் மன்னிக்க முடியுமானால் மன்னித்துவிடுங்கள்!'' என்று மனசுக்குள் அவன் இறைஞ்சினான்.

## 7

''அரசே! சேரனிடமிருந்து வந்த தூதர்கள் காத்திருக்கிறார்கள்'' என்று அமைச்சர் அறிவிக்க வரட்டுமே என்றான் அருள்மொழி வர்மன்.

நான்கு பேர் வந்தார்கள். முன்னால் ஒருவன் கம்பீரமாக நடக்க இடையில் பெரிய தாம்பாளத்தைச் சுமந்து கொண்டு இருவர் வர அவர்களுக்குப் பின்னால் ஒருவன் பாதுகாப்பாக வந்தான்.

''இராஜகேசரி அருள்மொழி வர்மர் வாழி. சேரமான் பாஸ்கர ரவிவர்மனின் தூதர்கள் நாங்கள்!''

''நல்லது'' என்றான் அருள்மொழி. ''செய்தி என்னவோ?''

"எங்கள் மன்னர் தங்களிடம் இவற்றைச் சேர்ப்பித்துவிட்டு வரச் சொன்னார்."

'பார்ப்போமே" என்றான் அருள்மொழி வர்மன்.

இருவர் சுமந்து வந்த பெரிய தட்டின் மீது மூடியிருந்த பட்டினை முன்னாலிருந்தவன் விலக்கியதும்—

சிலிர்த்தெழுந்தான் அருள்மொழி.

"என்னது!"

'உங்களுக்கு இவற்றை அடையாளம் கண்டுகொள்ள முடியும் என்று எங்கள் மன்னர் கூறி அனுப்பினார். அவர் ஊகம் பிசகவில்லை என்று தெரிகிறது."

உடைவாள், இடைக்கச்சு, கங்கண குண்டலங்கள், சில பொற்காசுகள் அனைத்தையும் அருள்மொழி அடையாளம் கண்டுகொள்ளத்தான் செய்தான். ஒருவேளை அவற்றை அவன் மறந்திருந்தாலும் பொன் சரட்டிலே கோக்கப்பெற்ற புலிச் சின்னப் பதக்கத்தையுமா மறக்க முடியும்? அதை அவன் தன் கரத்தாலேயே அணிவித்தல்லவா சிவலோக நாதனை அனுப்பி வைத்தான்! உணர்ச்சிகளை அவன் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான்.

"அடையாளம் தெரிகிறது. இவற்றை அணிந்திருந்த சிவலோக நாதனுக்கு ஏதோ ஆபத்தென்றும் புரிகிறது. என்ன ஆனான் என் தூதன்? என்ன நேர்ந்தது அவனுக்கு?"

"தாங்கள் தூதனை அனுப்பவில்லை என்பதும் ஒற்றனை ஏவியிருந்தீர்கள் என்பதும் எமது மன்னர் பாஸ்கர ரவி வர்மனின் துணிபு. அதனால் அவனைக் கைது செய்து சிறை வைத்திருக்கிறார். இதனைத் தங்களுக்குத் தெரிவிப்பதுடன் சிறையில் இருப்போனுக்கு இனி இவ்வுடைமைகள் தேவையில்லை என்பதால் தங்களிடமே சேர்ப்பித்துவிட்டுத் திரும்புமாறு கூறி அனுப்பினார்."

"அபத்தம்" என்று அதிர்ந்தான் அருள்மொழி. அவையில் விசும்பல் ஒலி எழுவதையும் குந்தவை ஆறுதலாக உதயபானுவைக் கட்டி அணைத்துத் தட்டிக் கொடுப்பதையும் அவன் செவிகள் நுகர்ந்தன. தனக்கே பேசவும் முடியாமல் நெஞ்சை அடைக்கும்போது உதயபானு கண்ணீர் பெருக்குவதில் வியப்பென்ன?

"நான் அரியணை ஏறியதை யொட்டிச் சில காலத்துக்கெல்லாம் பல்வேறு நாட்டரசர்களுக்கு நல்லெண்ணத் தூதர்களை அனுப்பினேன். அவர்களில் சேரமானிடம் அனுப்பப்பட்டவன் சிவலோகநாதன்."

"தூதனல்ல; ஒற்றன் என்று நம்பப் போதிய முகாந்திரம் இருக்கிறதென்பது எமது மன்னரின் தீர்ப்பு."

"தீர்ப்பு பிழையானது" என்றான் அருள்மொழி கம்பீரமாக.

"விதி தவறினாலும் சேரமானின் நீதி தவறாது. நீங்கள் மெய்யாலுமே நல்லெண்ணத்துடன் செயல்பட்டிருந்தாலும் உமது தூதன் தவறாக நடந்து கொண்டிருக்கலாம் அல்லவா, உங்கள் சொல்லை மீறி?"

"நானறிந்த சிவலோகநாதன் அப்படி ஒரு காலும் நடந்து கொண்டிருக்கவே மாட்டான்!"

"தம்பி! தூதர்களிடம் மேலும் பேசவேண்டியது அவசியம்தானா?" என்று இடைபுகுந்து கேட்டாள் குந்தவைப்பிராட்டி, தன் தோளில் சாய்ந்திருந்த உதயபானுவின் முதுகை வருடியபடியே. அவள் விம்மல்கள் இன்னும் அடங்கவில்லை.

சகோதரியின் சொல்லில் இருந்த நியாயத்தை ஏற்றான் அருள்மொழி. 'இவர்களிடம் வாதாடி என்ன பயன்? இவர்கள் அம்புகள். எய்தவனை அல்லவா நாம் குறி வைக்க வேண்டும்!

"அமைச்சரே! தூதர்களுக்கு உரிய மரியாதை செய்து அனுப்புங்கள். சேரன் செய்த பிழையை நாமும் செய்ய வேண்டாம்" என்று கூறி அரியாசனத்திலிருந்து எழுந்து நடந்தான். சபை கலைந்தது.

• • •

"**ப**ரிசில்களுடன் நல்லெண்ணத் தூதனை நான் அனுப்புவதாம். பாஸ்கர ரவிவர்மன் அவனுக்கு ஒற்றன் என்ற முத்திரை குத்தி சிறையில் தள்ளுவதாம்! என்ன இறுமாப்பு அவனுக்கு! சிவலோகநாதனின் உடைமைகளை என்னிடமே திருப்பி அனுப்ப என்ன துணிச்சல்! எங்கே அவை?"

"உதயபானு அவற்றைத் தனக்களிக்குமாறு வேண்டினாள். தந்துவிட்டேன். நீ மறுக்க மாட்டாய் என்று தெரியும்" என்றாள் குந்தவை. "பாவம்! அந்தப் பெண் எத்தனை இனிய கோட்டைகளைக் கட்டிக் கொண்டிருந்தாள்!"

"அக்கா! நானும்தான் மனக்கோட்டைகளை எழுப்பினேன். அரியணை ஏறிய சில காலத்தில் பல்வேறு மன்னர்களுக்கும் நல்லெண்ணத் தூதர்களை அனுப்பினேன். அவர்களின் மூலம் எனது நட்புக் கரங்களை நீட்டினேன். போர் தவிர்த்து அமைதி நாடி இறை பணியில் கலை உணர்வோடு ஈடுபட எண்ணினேன். ஆனால் ஈசன் விட்ட வழி வேறாக இருக்கிறது. சோழ நாட்டுக்கு இவ்வளவு பெரிய அநீதியைச் சேரன்



"வோய், எங்கிட்டே ரொம்பச் சண்டை போடாதேயும்! அப்புறம், நான் ஒரு டி. வி. வாங்கிடுவேன்!"

"என்னவே உளர்றீர்? நீர் டி.வி. வாங்கினா எனக்கென்னவே?"

"நான் வாங்கிட்டா, அப்புறம் உம் மனைவி உம் வீட்டிலேயும் ஒன்னு வாங்கச் சொல்லி, உம்மைக் கொன்னுடமாட்டாளா?"

- சிவசக்தி



இழுத்த பிறகு பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதா? நாடு நகரம் ஊர் உலகமெல்லாம் சிரிக்காதா? படை கிளம்பட்டும் அக்கா! சேரனை வென்று எனது இனிய நண்பன் சிவயோகநாதனைச் சிறை வைத்திருக்கும் நகரையே தரை மட்டமாக்கி அவனை மீட்டு வந்து உன் உயிர்த்தோழி உதயபானுவிடம் ஒப்படைப்பேன்.''

''தம்பி! சோழ முன்னவர்கள் என்றுமே பக்திமான்களாக வாழ்ந்தவர்கள்; கலைஞர்களாக இருந்தவர்கள்; வீரர்களாக விளங்கியவர்கள். அந்த மரபில் வந்த நீ மட்டும் வேறு விதமாகவா பேசுவாய்? ஆனால் ஒன்று! முரசு முழங்கட்டும், படை கிளம்பட்டும் என்றால் ஆயிற்றா? நடக்கப் போவது என்ன என்பதை அமைதியாக ஆராய வேண்டாமா? பாஸ்கர ரவி வர்மனை நீ எதிர்க்கிறாய், வெல்கிறாய் அதில் ஐயமில்லை. ஆனால் உன் நோக்கம் என்ன? சிவயோக நாதனை விடுவிக்க வேண்டும் என்பது. அது சாத்தியமாகுமா இம்முறையில்? போரில் தோற்கப் போகிறோம் என்று அறிந்த அடுத்த கணமே பாஸ்கர ரவி வர்மன் என்ன செய்வான்? நீ வென்றாலும் உன் நோக்கம் நிறைவேறக் கூடாது என்ற கருத்தில் சிவயோகநாதனைச் சிறையிலேயே கொன்றுவிட உத்தரவு அனுப்புவான். நீ அவன் பிணத்தைத்தான் காண்பாய்; மீட்டு வருவாய்.''

''அக்கா! அக்கா! அரியணையில் வீற்றிருக்க வேண்டியவள் நீதான்! எவ்வளவு சரியாகக் கூறினாய்! எனக்கிருந்த ஆத்திரத்தில் இது பற்றிச் சிந்திக்கவே தவறிவிட்டேனே! என்ன உபாயம் அக்கா? அதையும் கூறு!''

''பரிசுகளை அறிவித்து ஒரு வீர விளையாட்டுப் பந்தயத்துக்கு ஏற்பாடு செய்! மல் யுத்தம், ஈட்டி எறிதல், மலை ஏறுதல் போன்ற பல போட்டிகளில் முதலில் வருகிறவர்களைக் கொண்ட ஒரு சிறிய தனிப் படை திரட்டு. உன்னிடம் தேவதா விசுவாசமுடைய இருபது முப்பது வீரர்கள் போதும். அவர்கள் எப்படியாவது ரகசியமாகச் சேர நாட்டை அடைய வேண்டும். சிவயோக நாதன் சிறை வைக்கப்பட்டிருக்கும் இடத்தை அறிய வேண்டும். நீ சேரனுடன் நேரடி யுத்தம் நடத்தும்போதே இவர்கள் மின்னல் வேகத்தில் திமிர்த்து தாக்குதலை நடத்தி மீட்புப் பணியில் ஈடுபட வேண்டும். சோழ நாட்டின் மானம் காக்க உயிரைக் கொடுக்கவும் இவர்கள் சித்தமாக இருக்க வேண்டும்!''

''அருமையான யோசனை அக்கா! அது மட்டுமல்ல. சேர நாடு நோக்கி நான் தரை மார்க்கமாகப் படை யெடுக்கிறேன், அனைவரும் அறிய. அதே நேரத்தில் நமது கடற்படை ரகசியமாகப் புறப்பட்டு குமரியைச் சுற்றிக் கொண்டு சென்று காந்தளூர்ச் சாலையைத் தாக்கும்! இந்த இரு முனைத் தாக்குதலுக்கிடையில் சேரன் தடுமாறும் போது மீட்புப் படையினரின் மின்னல் தாக்குதலும் சிவாவை விடுவிக்க நடக்கும். சரிதானே?''

''வெற்றித் திருவை மணந்துவா தம்பி!'' என்று ஆசிகூறித் திலகமிட்டாள் குந்தவை.

## 8

என்றைய தினம் அருள்மொழி வர்மனின் தரைப் படை சேர நாட்டின் எல்லையைக் கடந்து முன்னேறுமோ அதற்கு இரு தினங்களுக்குப் பிறகு சோழக் கடற்படைத் தளபதி காந்தளூர்ச் சாலையில் தாக்குதல் நடத்த வேண்டும் என்று ஏற்பாடாகியது. இந்த இரு முனைத் தாக்குதல்களுக்குமே காலக் கெடுக்கள் நிர்ணயிக்கப்பட்டன. அந்தக் காலக் கெடு தவறாமல் இருப்பதுதான் முக்கியம் என்று அனைவரும் உணர்ந்திருந்தனர். ஆனால் அதன்படி நடக்கமுடியாதுபோகுமோ என்ற ஐயம் ஏற்பட்டது அருள்மொழி வர்மனுக்கு. தரை மார்க்கமாகப் பயணப்பட்ட அவனது பெரும் படை இடையில் பாண்டியன் அமரபுஜங்கனின் எதிர்ப்பினைச் சந்திக்க நேர்ந்தது.

அருள்மொழி படையெடுத்து வருகிறான் என்று அறிந்ததுமே நண்பன் அமரபுஜங்கனுக்குத் தூது அனுப்பினான் பாஸ்கர ரவி வர்மன். ''நான் ஆயத்த நிலையில் இல்லை. முன்னேற்பாடுகளுக்கு எனக்கு இன்னும் சில காலம் தேவை. சோழனைத் தாமதப்படுத்த முடியுமா பார்க்கவும்.''

நண்பனின் கோரிக்கையை மறுதளிக்க முடியாமல் படையுடன் வந்தான் அமரபுஜங்கன். போரிட்டு வெல்வது நோக்கமல்ல. அது முடியாது; நடவாது என்பது அவனுக்குத் தெரியும். கூடியவரை தாமதப்படுத்துவதுதான் எண்ணம்.

இதனைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை அருள்மொழி. ஏற்கனவே நிர்ணயித்த காலக் கெடுத் தவறக் கூடாது என்பதில் குறியாக இருந்த அவன், அதே நேரத்தில் தன் படையினரை முழுமையாகப் பாண்டியனை முறியடிக்கப் பயன்படுத்தவும் விரும்பவில்லை. அதற்கு அவசியமும் இல்லை என உணர்ந்து ஒரு பகுதியினரைப் பயன்படுத்தினான். இன்னும் நீண்ட தூரப் பயணம் பாக்கியிருந்தது. அதன் பின் பெரும் போர் நடத்த வேண்டியிருந்தது. அனைத்துப் படையினரையும் களைப்புறச் செய்வதில் அர்த்தமில்லை.

அமரபுஜங்கனை எதிர்க்கின்ற படைக்குத் தலைமை தாங்கத் தனக்கு வாய்ப்பளிக்குமாறு வேண்டினான் கம்பன் மணியன்.

''பிரபோ! நீங்கள் நடத்திய வீர விளையாட்டுப் போட்டிகள் பலவற்றில் கலந்துகொண்டு அனைவரிலும் சிறந்த வீராதி வீரன் என்று பெயரெடுத்தேன். இருப்பினும் என்னையும் இப்போட்டிகளில் பரிசுகளும் பட்டங்களும் பெற்ற வேறு முப்பதின்மரையும் தாங்கள் நடத்துகின்ற விதம் எங்களுக்குப் புரியவேயில்லை. எங்களைக் கண்ணே போல்



Dr. S. R. சிவராஜ்

**வாலிபர்கள் !** **மணமானவர்கள் !!**

**வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி,**
**தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ,**
**இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்'**
**ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'**

# 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

* **குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்**
* **கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்**

சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1-ம் நெம்பர் | நேரில் பெறலாம். |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.மூலம் பெறலாம் |

மாதாந்திர சுற்றுப் பயண விவரம்: ஒவ்வொரு ஆங்கில தேதிகளிலும்

**பிரதம வைத்தியர் தங்குமிடங்கள்**

சென்னை-600 001. 1-ந் தேதி ஹோட்டல் ரோலக்ஸ். போன்: 24238. 90, NSC போஸ் ரோடு, பூக்கடை அருகில். காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

சென்னை-600 002. 2 முதல் 5ந் தேதி வரை. ராமச்சந்திரா லாட்ஜ். போன்: 846526 6, அத்திப்பட்டன் தெரு. அண்ணாசாலை சமீபம். காலை 7 முதல் இரவு 7 மணி வரை.

சென்னை-600 004. 6ந் தேதி முதல் 8ந் தேதி வரை நியூ உட்லண்ட்ஸ். போன்: 83111. எட்வர்ட் எலியட்ஸ் ரோடு, மயிலாப்பூர். காலை 8 முதல் பகல் 1 மணிவரை. மாலை 3 முதல் இரவு 7 மணி வரை.

சேலம் தலைமை அலுவலகம்: 11, 16, 17, 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள்.

திருச்சி: 9, 10 தேதி. அசோக் பவன், ஜங்ஷன் ரோடு. போன்: 25783. காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கோவை: 12, 13ந் தேதி. ஸ்ரீ லக்ஷ்மி லாட்ஜ், ராஜ வீதி. போன்: 33330.

பொள்ளாச்சி: 14ந் தேதி. மாடர்ன் லாட்ஜ். தாலுகா ஆபீஸ் எதிர் சந்து. காலை 8 மணி முதல் 12 மணி வரை.

திருப்பூர்: 14ந் தேதி. ராமகிருஷ்ணா லாட்ஜ். ஈஸ்வரன் கோவில் வீதி. மாலை 3 மணி முதல் 5 மணி வரை.

ஈரோடு: 15ந் தேதி. ஆனந்த் லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

மதுரை: 21, 22, 25, 26 தேதி: மணீஸ் கேப் (டவுன் ஹால் ரோடு) போன்: 22019. காலை 7 மணி முதல் இரவு 7 மணி வரை.

தூத்துக்குடி: 23ந் தேதி: ராதா லாட்ஜ், ஜி.சி. ரோடு. காலை 9 முதல் பகல் 12 மணி வரை.

திருநெல்வேலி: 23, 24, தேதி. நெல்லை லாட்ஜ் காலை 7 மணி முதல் இரவு 8 மணி வரை.

**உதவி வைத்தியர் தங்குமிடங்கள்:**

விழுப்புரம்: 3ந் தேதி. வாசவி விஹார் ஹோட்டல், எம். ஜி. ரோடு, காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கடலூர் என்.டி. 3ந் தேதி. ஹோட்டல் பிருந்தாவன். மாலை 3 முதல் இரவு 8 மணி வரை.

சிதம்பரம்: 4ந் தேதி. ஜெயராம் லாட்ஜ். (மேல வீதி) காலை 7 முதல் பகல் 3 மணி வரை.

கும்பகோணம்: 5ந் தேதி. தாஜ்மஹால் லாட்ஜ் பொற்றாமரைக் குளம் (போன்: 1423) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

தஞ்சாவூர்: 6ந் தேதி. அசோகா லாட்ஜ், (ராஜா கலை அரங்கம்) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

தேனி: 21ந் தேதி. பாண்டியன் லாட்ஜ். காலை 8 மணி முதல் பகல் 1 மணி வரை.

பெரியகுளம்: 21ந் தேதி. உடுப்பி ஸ்ரீ லக்ஷ்மி விலாஸ். மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

திண்டுக்கல்: 22ந் தேதி. ஆரிய பவான் லாட்ஜ் பழனி ரோடு. காலை 8 மணி முதல் மாலை 6 மணி வரை.

விருதுநகர்: 23ந் தேதி. ஹோட்டல் ஆர்ச தேயா. காலை 7 மணி முதல் 12 மணி வரை.

இராஜபாளையம்: 23ந் தேதி. அசோகா லாட்ஜ். மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

நாகர்கோவில்: 24ந் தேதி. உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண பவன், போஸ்டாபீஸ் ஜங்ஷன் ரோடு. காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

தென்காசி: 25ந் தேதி. பார்வதி லாட்ஜ் காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

**தலைமை அலுவலகம்:**

## சிவராஜ் சித்த வைத்தியசாலை

**C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்**
*(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)*
**காந்தி ஸ்டேடியம் - சேலம்-636007**

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே!
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே!
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே!
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே!
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே!
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலம்கொடுக்கும் நலமே!
எல்லார்க்கும் பொதுவில்நடம் இடுகின்ற சிவமே!
என்அரசே யான்புகலும் இசையும்அணிந்து அருளே!

— திருஅருட்பா







காத்துப் பொன்வே போல் போற்றவா அழைத்து வந்தீர்கள்? படைகளுக்குத்தலைமை தாங்கிக் களம் புக அனுமதியுங்கள்!'' என்றான் கம்பன் மணியன்.

''வீரனுக்குரிய மணியான வார்த்தைகளைப் பேசினாய்'' என்று கம்பன் மணியனை மெச்சினான் அருள்மொழி. ''நீ வீராதி வீரன் மட்டுமல்ல. புத்திசாதுர்யமும் உள்ளவன் என்பதை அந்த வீர விளையாட்டுக்களின்போதே நான் உணர்ந்து விட்டேன். அதனால்தான் அனைத்து வீரர்களிலும் நீயே ஒப்பற்றவன் என்று தேர்ந்தெடுத்தேன். மணியா! நீ மறந்திருக்க மாட்டாய். அன்றைய வீர விளையாட்டில் பல மல்யுத்த வீரர்களை மண்ணைக் கவ்வச் செய்த நீ கடைசியாக என்னையே சந்திக்க வேண்டியிருந்ததல்லவா?''

''ஆம் பிரபு! மன்னரே வீர விளையாட்டில் பங்கேற்க வருகிறார் என்று அறிந்தபோது நான் கொஞ்சம் கலங்கித்தான் போய்விட்டேன். மல்யுத்தத்தில் யாரை வென்றாலும் உங்களை வெற்றி காண முடியாதென்பது மல்லர்கள் அனைவருக்கும் தெரிந்த செய்திதானே! அந்தக் கலையில் சிறப்புத் தேர்ச்சி பெற்றுத் தன்னிகரற்று விளங்குபவராயிற்றே நீங்கள்!''

''கம்பன் மணியா! இங்கு நாம் தனித்திருக்கிறோம். தயங்காமல் பேசலாம். நீ அன்று மெய்யாலுமே என்னிடம் தோற்றாயா? தோற்றுப் போவது போல் நடித்தாய் அல்லவா? என்னை வீழ்த்திவிடுகிற நிலைக்கு வந்துவிட்ட நீ கடைசிக் கட்டத்தில் சோர்ந்து விட்டது போல் காட்டிக் கொண்டு சரிந்து விடவில்லையா? உண்மையைச் சொல்!''

''பிரபோ! தாங்கள் கூர்மதி கொண்டு அறியாத எந்த உண்மையை நான் கூறப் போகிறேன்'' என்றான் கம்பன் மணியன்.

''அந்தக் கணத்திலேயே உன் வீரத்தையும் புஜபல பராக்கிரமத்தையும் மட்டுமின்றி புத்திசாதுர்யத்தையும் நான் புரிந்துகொண்டேன். முரட்டு வீரத்துக்கு மட்டுமின்றி அந்த சமயோசித அறிவுக்கும் இந்தப் போரில் தேவையிருக்கிறது என்பதால் அன்றைய வீர விளையாட்டுக்களில் வென்ற முப்பது பேருக்கும் உன்னையே தலைவனாக்கினேன்.''

''பாக்கியசாலியானேன்; நன்றி நவில்கிறேன். ஆனால் அந்த வீரத்தையும் அறிவுக் கூர்மையையும் தாங்கள் பயன்படுத்திக் கொள்ளக் காணோமே!''

''உரிய நேரம் வரக் காத்திருக்கிறேன் மணியா!'' என்ற அருள்மொழி வர்மன் குந்தவையின் திட்டத்தை விவரித்தான். ''வெளிப்படையான போரில் ஈடுபட்டிருக்கும் பல்லாயிரக் கணக்கான வீரர்களை விட மீட்புப் பணியில் ஈடுபடப் போகிற உனது சின்னஞ்சிறு படையின் சாகசம்தான் முக்கியமானது. இந்தப் படையெடுப்பு முழு வெற்றி பெறப் போகிறதா அல்லது வெற்றிக்கிடையேயும் தோல்வியையே தழுவப் போகிறதா என்பது முப்பத்தோரு பேர்களைப் பொருத்திருக்கிறது! புரிகிறதா?''

''முற்றிலும் உணர்ந்து கொண்டேன்பிரபு. தாங்கள் என்னிடமும் என் முப்பது தோழர்களிடமும் வைத்துள்ள நம்பிக்கை வீண் போகாது!''

கம்பன் மணியன் பேசி முடிக்கு முன்னர் அரசருக்கு அவசரச் செய்தியுடன் பாசறைக்குள் நுழைந்தான் ஒரு படைத் தலைவன். ''மன்னா!'' என்று அழைத்துத் தடுமாறி நின்றான்.

''என்ன, சொல்லு!'' ஆணை பிறந்தது.

''பாண்டியன் இரு முனைத் தாக்குதல் நடத்துவதாகத் தோன்றுகிறது. தென் திசையிலிருந்து இன்னொரு படை நம்மை நெருங்குகிறது. அவர்கள் ஏந்தி இருப்பதும் கயல் கொடிகளே! நமது முன்னணிச் சாரணர் அனுப்பிய அவசரச் செய்தி இது.''

''என்னது! அமரபுஜங்கனுக்கு அவ்வளவு வலிமையா?'' என்று ஒரு கணம் திகைத்த அருள்மொழி சட்டென்று ஏதோ யோசனையில் ஆழ்ந்தான். அவனது சுட்டு விரல் நெற்றியைத் தட்டுவது நின்றபோது ''பாண்டியனின் மணிமுடிக்கு உரிமை கொண்டாடுவோர் ஒன்றுக்கு மேற்பட்டவர் உண்டு'' என்ற வார்த்தைகள் அவன் கண்டத்திலிருந்து வெளி வந்தன. ''கம்பன் மணியா! நீ என்ன நினைக்கிறாய்?''

''வரவேற்கப்பட வேண்டியவர்களை அவசரப்பட்டு எதிர்த்து விடக் கூடாது என்றுதான் நானும் கருதுகிறேன் பிரபோ'' என்றான் கம்பன் மணியன். ''தாக்குதலை எதிர்நோக்கி எச்சரிக்கையாகவும் இருக்க வேண்டும். அதே நேரத்தில் கயல் கொடிகள் சிலவேனும் அருகில் நெருங்கும்போது வெள்ளைக் கொடிகளாக மாறுகின்றனவா பார்க்க வேண்டும்!''

''அப்படியானால் நீயே நேரில் சென்று நிலைமை இன்னதென்று அறிந்து வா'' என்று அனுப்பினான் அருள்மொழி.

## 9

அருள்மொழியின் ஊகம் பொய்க்கவில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் அவனும் வீர பாண்டியனும் பாசறையில் உபசரிப்பு முடிந்து உரையாடிக் கொண்டிருந்தார்கள்,





''மன்னா! உமது நல்லெண்ணத் தூதனை ஒற்றனென்று பழி சுமத்தி பாஸ்கர ரவி வர்மன் சிறைப்படுத்தினான் என்பதை அறிந்த கணத்திலிருந்து சோழ நாட்டின் மானம் காக்கத் தாங்கள் நடத்தப் போகின்ற இந்தப் படையெடுப்பை எதிர் நோக்கிக் காத்திருக்கிறேன்'' என்றான் வீர பாண்டியன்.

''எதிர் நோக்கலில் உள் நோக்கமும் இருக்குமே'' என்று மெல்ல நகைத்தான் அருள்மொழி.

சரேலென்று கோபத்துடன் நிமிர்ந்தான் பாண்டியன். ''மன்னவா! பாண்டியர்கள் உதவி புரியக் கூடிய நிலையில் இருக்கும் போதுதான் உதவி கோரவும் செய்வார்கள்!'' என்றான் கம்பீரமாக. ''உள்நோக்கம் இருந்தாலும் அதில் சமநோக்கும் உண்டு.''

''வேடிக்கைதான்'' என்றான் அருள்மொழி. ''கடலனையப் பெரும் படையுடன் பழி வாங்கப் புறப்பட்டிருக்கும் எனக்கு நீர் உதவுவதா? அதுவும் சம நிலையிலிருந்தா? பாண்டியரே! பேசினாலும் பொருந்தப் பேச வேண்டும். அலை கடலுக்கு ஆறு உதவுகிறதா? சிம்மத்துக்கு நரியினால் என்ன உதவி?''

''அரசே? சிறு துளி யில்லையானால் பெரு வெள்ளம் கிடையாது. இரை இருக்கும் இடத்துக்குச் சிம்மத்தை நரி வழி காட்டி அழைத்துப் போவதும் உண்டு; வேட்டை முடிந்த பின்னர் நன்றி காரணமாக சிங்கம் தான் உண்டது போக மீதியை நரிக்கு வெகுமதியாக விட்டுச் செல்வதும் உண்டு. அந்தக் கட்டத்தில் சிங்கம் தான் உயர்ந்தது நரி தாழ்ந்தது என்று எண்ணுவதில்லை. ஒன்றுக்கொன்று உதவி இரண்டுமே பயனடைகின்றன.''

''மீனக் கொடியோனுக்குத் தூண்டில் போடவா தெரியாது! பாண்டியரே அழகாகப் பேசினீர்! நீங்கள் எதிர்பார்க்கும் வெகுமதி?'';

''பாண்டிய நாட்டின் அரியணை! அமரபுஜங்கனைப் புறமுதுகிடச் செய்யுங்கள்; சேரனையும் வென்று வாருங்கள்! பிறகு, உங்களுக்கு உதவிய எனக்கு உமது திருக்கரத்தாலேயே தொன்மையான பாண்டிய நாட்டின் மணி முடியைச் சூட்டுங்கள்!''

''அடேயப்பா! பெரிய விலையைத்தான் கோருகிறீர்கள்! அதற்கேற்ப விற்பனைக்கு வரும் பண்டத்தின் மதிப்பும் உயர்வாயிருக்க வேண்டுமே!''

''சேரனின் படை பலம் பற்றிய உண்மையான முழு விவரங்கள். அவனது பாதுகாப்பு ஏற்பாடுகளில் உள்ள பலவீனங்கள் பற்றிய குறிப்புக்கள். சேர நாட்டில் எந்தெந்த இடத்தில் எந்தெந்த அளவில் எத்தகைய பாதுகாப்புக்கள் உருவாகியுள்ளன என்பது பற்றிய தகவல்கள், அரண்களின் நிலவரம், கோட்டை கொத்தளங்களின் ரகசியங்கள்... மன்னா எதிரியின் பலத்தை முழுமையாக அறிந்தவன் பாதி யுத்தத்தை வென்றது போலத்தான் என்பதை உங்களுக்கு நானா கற்றுத் தர வேண்டும்?''

''நீங்கள் தரப்போகும் தகவல்கள் மெய்யானவை என்பதற்குச் சாட்சியம்?''

''எனது வார்த்தைகள்தான்.''

''இவ்விவரங்கள் அறியப்பட்ட விதம்?''

ஒரு கணம் பாண்டியன் தயங்கினான். பிறகு இனியும் ஒளிவு மறைவென்ன என்று தீர்மானித்தவன் போல் வண்டார் குழலி பற்றிப் பேசினான்.

கடைசியாக அவள் வீர பாண்டியனுக்கு அனுப்பிய ரகசிய ஓலையில் 'அருள்மொழி வர்மனின் தூதனை ஒற்றன் என்று பழி சுமத்திச் சேரன் சிறைப்படுத்தி விட்டான். எனது திறமைதான் இதனைச் சாதித்தது. அருள்மொழி கொதித்தெழுந்து சேரன் மீது படையெடுத்து வருவது நிச்சயம். அக்கணத்தில் அவனைச் சந்தியுங்கள். நான் கொடுத்திருக்கும் தகவல்களை யெல்லாம் அவனுக்கு அளித்து உதவுங்கள். அதற்குப் பிரதிபலனாக பாண்டிய நாட்டின் அரியணையை நீங்கள் கோரிப் பெறுங்கள். முடி சூட்டிக் கொண்டபின் அடியாளை மறவாதீர்கள்' என்று எழுதியிருந்தாள்.

இந்தக் கடைசி வரியையும் சிவலோக நாதன் சிறைப்பட வண்டார் குழலிதான் தந்திரம் செய்தாள் என்ற விவரத்தையும் மட்டும் மறைத்து மற்ற அனைத்தையும் அருள்மொழி வர்மனுக்கு வீர பாண்டியன் தெரியப்படுத்தினான்.

சற்று நேரம் மௌனமாக இருந்த இராசகேசரி, ''பாண்டியரே! அந்த நங்கை வண்டார் குழலி இன்னமும் சேரன் அவையில் சோமேகலை எனும் நம்பிக்கைக்குரியவளாகத் தானே இருக்கிறாள்?'' என்று வினவினான்.

''ஆம்'' என்று பதிலிறுத்தான் பாண்டியன்.

''அப்படியானால் அவளுக்குச் சிவலோக நாதன் சிறைப்பட்டிருக்கும் இடமும் தெரியுமல்லவா?''

''தெரியாவிடினும் தெரிந்து கொள்வது அவளுக்குக் கடினமல்ல.''

''நல்லது. பாண்டிய நாட்டுப் பொன் ஆபரண வியாபாரி போல் மாறு வேடத்தில் ஒருவன் சென்று அவளை விரைவில் சந்தித்து விவரங்கள் அறிவான். அவனோடு சேர்ந்தாற் போல் அல்லது தனித் தனியாக வேறு முப்பது பேர் சேர நாட்டுக்குள் பாண்டிய நாட்டு மக்களாக நுழைவார்கள். வியாபாரியாகவோ, பண்டிதராகவோ, பிழைப்பு நாடி வந்த பாமரனாகவோ செல்வார்கள். அனைவரும் வஞ்சி நகரில் குறிப்பிட்ட ஓரிடத்தில் குறிப்பிட்ட தினத்தில் சந்திப்பார்கள். இதற்கு நீங்கள் வழி காட்ட வேண்டும். முக்கியமாக அவர்கள் தலைவன் கம்பன் மணியன் வண்டார் குழலியைச் சந்திக்கவும் அவளிடமிருந்து சிவலோக நாதன் சிறைப்பட்டிருக்கும் இடத்தை அறியவும் அச்சிறையைச் சுற்றியுள்ள பாதுகாப்புக்கள் பற்றித் தெரிந்து

கொள்ளவும் நீங்கள் அவனுக்கு ஓலையும் இலச்சினையும் கொடுத்து உதவ வேண்டும். செய்வீர்களா?''

''மகிழ்ச்சியோடு ஏற்கிறேன் அந்தப் பொறுப்பை'' என்றான் வீர பாண்டியன். ''நீங்களும்....''

''உமது கோரிக்கையை மறக்க மாட்டேன்'' என்றான் அருள்மொழி.

அதுவே போதுமானதாக இருந்தது வீர பாண்டியனுக்கு.

## 10

பொற்பாவையின் முன் பொன்னாபரணங்களைப் பரப்பிவிட்டு அவள் தேவையானதைத் தேர்ந்தெடுக்கக் காத்திருந்தான் வியாபாரி. எத்தனையோ விதமான வெம்பழித் தாக்குதல்களை எதிர்த்து வெற்றி கண்டவனுக்கு இந்த எழில் தாக்குதலையும் விழித் தாக்குதலையும் சமாளிப்பது கடினமாகத்தான் இருந்தது. தன்னிடமிருந்த மிகப் பெரிய பலம் தன் அழகுதான் என்பதை உணர்ந்து அந்த ஆயுதத்தைக் கூர் மங்காது காக்கவும் திறம்படப் பிரயோகிக்கவும் அறிந்திருந்தாள் வண்டார் குழலி. அகில் புகையூட்டப்பெற்ற அளகபாரத்தின் மணமும் மதர்த்துப் பொங்கிய நெஞ்சங்களின் கனமும் மதன பாணங்களை அள்ளி வீசிய கண்களின் வளமும் சதா மென்னகையை உதிர்த்த பவள உதடுகளின் குணமும் காலம் காலமாய் ஆராய்ந்தாலும் சிறு குறையும் தென்படாத சிற்ப வடிவத் தோற்றத்தின் உயிர்த் துடிப்பும் மென்மையும் குழைவும் நிறமும் நிறைவும் எல்லாமாகச் சேர்ந்து அவனை நொடிப் பொழுதில் வீழ்த்திவிட்டன! வீர பாண்டியன் கற்றுத் தந்திருந்த சமிக்ஞைச் சொற்களை நினைவுக்குக் கொண்டு வரவே அரும்பாடுபட்டான் அவன். நல்ல வேளை ஒரு பெரு முயற்சிக்குப் பிறகு அதனை ஞாபகப்படுத்திக்கொண்டு கூற. புரிந்து கொண்டாள் வண்டார் குழலி. அந்தக் கணத்திலேயே அவள் போக்கு அடியோடு மாறிவிட்டது. காமனை விடை கொடுத்து அனுப்பி விட்டுக் காரியத்தில் கண்ணானாள். ''பேசுங்கள், அருகிலிருக்கும் சேடிப் பெண் செவிடு,ஊமை. ஆனால் கூர் மதி படைத்தவள். வியாபார நிமித்தமாகவே பேசுவது போல் நடந்து கொள்ளுங்கள்'' என்றாள்.

அவ்வாறே நடித்தபடி உரையாடலை மட்டும் வேறு திசையில் திருப்பினான் வியாபாரி. ''எனக்கு நீங்கள் உதவ வேண்டும் என்று ஓலையும் இலச்சினையும் தந்துள்ளார் வீரபாண்டியன். நாம் தனித்திருக்கும்போது அவற்றைத் தங்களுக்குக் காண்பிப்பேன்'' என்று சொல்லித் தன் தேவைகளையும் வெளியிட்டான். சிவலோகநாதன் சிறைப்பட்டிருக்கும் ஊர், இடம், அங்குள்ள காவல் ஏற்பாடுகள் முதலிய விவரங்கள் தெரிய வேண்டும் என்றான். போர் முயற்சி தவிர மீட்பு முயற்சியின் அவசியத்தை விளக்கினான்.

துணுக்குற்றாள் வண்டார் குழலி. ஆனால் அதனை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. 'இதென்ன கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாய் இருக்கிறதே! சிவலோகநாதனைச் சிறை வைக்கக் காரணமாயிருந்த நானே அவனை விடுவிக்கவும் உதவுவதா? அவன் விடுதலை பெற்று வந்த பின் அருள்மொழி வர்மனிடம் நடந்த உண்மைகளைக் கூறாதிருப்பானா? பிறகு என் கதி என்ன? வீர பாண்டியனின் நிலைதான் என்ன? இதையெல்லாம் வீர பாண்டியனும் யோசியாமலா இருந்திருப்பான்? மீட்பு முயற்சிக்கு உதவினால்' அன்றி அருள்மொழியின் அன்பைப் பெற முடியாது என்ற சூழ்நிலை தோன்றியிருக்க வேண்டும் வீர பாண்டியனுக்கு. என்னுடைய திறமையில் நம்பிக்கை வைத்து நான் எப்படியாவது இந்த இக்கட்டைச் சமாளிப்பேன் என்று கருதி கம்பன் மணியனை என்னிடம் ஓலை, இலச்சினையுடன் அனுப்பியிருக்கிறான் என்று முடிவுக்கு வந்தாள். இப்போது என்ன செய்வது? இவனுக்கு — கம்பன் மணியனுக்கு — நிச்சயம் உதவ வேண்டியதுதான். அப்போதுதான் அருள்மொழியும் வாக்குத் தவறாமல் வீர பாண்டியனுக்குப் பாண்டிய தேசத்தைக் கொடுப்பான். நானும் வீர பாண்டியனின் அரியாசனத்தைப் பகிர்ந்து கொள்ள முடியாவிடினும் பாண்டியப் பேரரசின் மெய்யான அரசியாக விளங்கலாம். வீர பாண்டியனே என் வயப்பட்ட பின் அனைத்து அதிகாரங்களும் என்னிடம்தானே! எனவே சிவலோகநாதனை மீட்கும் பணியில் உதவ வேண்டும்தான். ஆனால் அதே நேரத்தில் சிவலோகநாதன் தான் சிறை புக நேர்ந்ததற்கான உண்மைக் காரணத்தை உடைத்து விடாதிருக்க அவனைக் கொன்றுவிடவும் வேண்டும்! அவன் மரணம் மீட்புப் பணி நடக்கும் போதே ஒரு சேர வீரனால் சம்பவித்து விட்டது போலத் தோற்றமளிக்கச் செய்ய வேண்டும்!'



''இந்த இரு ஆரங்களையும் வங்கிகளையும் எடுத்துக் கொள்கிறேன். இவற்றுக்கு எடைக்கு எடை பொற் கழஞ்சுகளைத் தந்துவிட முடியும். ஆயின் இவற்றின் கலை வேலைப் பாடுகளின் மதிப்பை நமது அரசவை பொற் கொல்லரின் யோசனை கேட்டே அறிய வேண்டும். நீங்கள் இரு தினங்கள் சென்று நண்பகலில் வாருங்கள். அப்போதுநான் தனியே இருப்பேன். வீர பாண்டியன் அனுப்பிய ஓலை,



இலச்சினையைக் காட்டுங்கள். நானும் உங்களுக்குத் தேவையான விளக்கங்களைக் கூறுகிறேன்'' என்றாள் வண்டார்குழலி.

குறிப்பிட்ட இடத்தில் அவர்கள் ஒன்று கலந்து பேசித் திட்டம் தீட்டினர். மாபெரும் மதில்கள் சூழ்ந்ததாய் மாளிகைகளும் சூளிகைகளும் தன்பாற்கொண்டு உயரிய கோபுரங்களை உடைய வாயில்களைக் கொண்டதாய் சேரர்க்குரிய சிறந்த நகரங்களுள் ஒன்றான உதகையில் அதன் செல்வச் சிறப்புக்களும் மகிழ்ச்சி ஆரவாரங்களும் எழில் தோற்றங்களும் எட்டிப் பார்க்கமுடியாத சிறைக் கூடத்தில் பாதாள சிறை யொன்றில் பெரும் பாதுகாப்புடன் வைக்கப் பட்டிருந்தான் சிவலோக நாதன். இந்த விவரத்தைக் கூறிவிட்டு வண்டார் குழலி தொடர்ந்தாள்: ''நான் சொல்வதை நன்றாக மனத்தில் பதிய வைத்துக்கொள்ளுங்கள். அமரபுஜங்கனை முறியடித்துப் புறமுதுகிடச் செய்தபின் அருள்மொழி வர்மனின் பெரும்படை புயலென விரைந்து சேரநாட்டின் எல்லை தாண்டியாகி விட்டதென்றும் வெகு வேகமாக மேலும் முன்னேறிக் கொண்டிருக்கின்றதென்றும் செய்தி வந்துவிட்டது. யுத்தகாலம் என்ற அறிவிப்பும் இங்கு செய்தாகிவிட்டது. அயல் நாட்டவரெல்லாம் வெளியேற்றப்படுகிறார்கள். இப்போது நீங்கள் வஞ்சி நகரை விட்டு வெளியேறத் தடை ஏதும் இராது. ஆனால் உதகை நகருக்குள் நுழையவே முடியாது. கோட்டைக் கதவுகள் மூடியே இருக்கும். உங்கள் அனைவருக்குமாக முப்பத்தோரு இலச்சினைகளைப் பெற்றுத் தருவதும் எனக்கு முடியாத காரியம். ஆனால் ஓர் உபாயம் இருக்கிறது'' என்று நிறுத்தினாள்.

''என்ன அது?'' என்று ஆர்வத்துடன் வினவினான், கம்பன் மணியன்.

''உதகை நகருக்குப் புறம்பாக மேற்கே மரகதத் தேவர் கோயில் ஒன்றிருக்கிறது. அங்குள்ள மரகதத் தேவர் சிலையை வலப்புறமாக நகர்த்திப் பிறகு பின்னுக்குத் தள்ளினால் ஒரு சுரங்கப் பாதை தெரியும். அதன் வழி புகுந்து வந்தால் கோட்டை மதில்கள், அகழிகள், அரண்மனைகள் எல்லாவற்றையும் பூமிக்கடியிலேயே கடந்து செல்லலாம். அப்பாதை சிறைக் கூடத்தின் பாதாளச்சிறை பகுதியில்தான் முடிவடைகிறது. ஆபத்துக் காலத்தில் சேர நாட்டின் மிக உயர்ந்த குடிமக்கள் பயன்படுத்த ஏற்பட்ட அந்தப் பாதையை நாம் நம்மை எதிர் நோக்கியுள்ள ஆபத்தைக் கடக்கப் பயன்படுத்திக் கொள்ளலாம்!''

''உங்களுக்கு எப்படி நன்றி கூறுவதென்றே தெரியவில்லை'' என்றான் கம்பன் மணியன் மெய்யான நெகிழ்ச்சியுடன்.

''அதெல்லாம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். கால தாமதத்துக்கு இடமில்லை'' என்றாள் வண்டார்குழலி. ''எச்சரிக்கையாய் இருங்கள்! பலத்த பாதுகாப்பு சிறைக்கூடத்துக்கு மட்டுமல்ல. மரகதத் தேவருக்கும் உண்டு! மரகதத் தேவரை நெருங்க இருளைத் துணைக் கொள்ளுங்கள். பாதாளச் சிறைக் கூடத்தில் ஒருவேளை என்னையும் நீங்கள் சந்திக்கலாம். ஆண் வேடத்தில் சேர நாட்டின் உயர் அரசு அதிகாரி போல் நான் தோற்றமளித்தாலும் வியப்படையாதீர்கள்! நீங்கள் வீர பாண்டியனிடம் கற்று என்னிடம் பயன்படுத்திய அதே சமிக்ஞைச் சொற்களை நானும் பயன்படுத்தி உங்களுக்கு மட்டும் நான் யார் என்பதைத் தெரியப்படுத்துவேன்.''

''நீங்கள் அங்கு வரவேண்டுமா? எதற்கு இந்த ஆபத்தான காரியத்தில் நீங்கள் பங்கேற்க வேண்டும்?'' என்றான்.

''வீர பாண்டியனுக்காக நான் எதையும் செய்வேன். மேலும் என் நேரடி உதவியின்றி உங்களால் வெற்றி காண முடியுமா என்பது சந்தேகம்தான். ஏனென்றால் சிவலோக நாதன் தப்பிக்கவோ அல்லது அவனைத் தப்புவிக்கவோ முயற்சி நடந்தால் அந்தக் கணமே அவனைக் கொன்றுவிடலாம் என்று சிறைக் காவலர்களுக்கு உத்தரவாகியிருக்கிறது. வேறொன்றும் வேண்டாம். அவன் சிறை வைக்கப்பட்டுள்ள கொட்டடியின் வெளியே உள்ள ஒரு விசையைத் திருகினால் போதும். கொட்டடியின் தரை பின்னுக்கு நகர்ந்து மறையும். இவன் கீழே இருள் குகையில் விழுவான். அங்கே பசியோடு பல புலிகள் காத்திருக்கும்!''

''ஐயோ! என்ன கொடுமை!'' என்றான் கம்பன் மணியன்.

''அதற்காகத்தான் நான் அங்கு வருகிறேன் என்கிறேன். முத்திரை மோதிரத்தைக் காட்டி அதிகாரம் தூள்பறக்க காவலர்களின் கவனத்தைத் திருப்பிக் கொண்டிருப்பேன். அந்த வேளையில் நீங்கள் அவனை விடுவித்து அழைத்துப் போய்விடுங்கள்! சிவலோக நாதனை விடுவிக்க முயற்சி நடப்பதாகச் செய்தி கிடைத்துள்ளதாகவும் அப்படி ஏதும் நடந்துவிடக் கூடாது என்பதற்காகவே சேர மன்னன் என்னை அனுப்பி வைத்திருப்பதாகவும் கூட நான் சிறை அதிகாரியையும் காவலர்களையும் மிரட்டிக் கொண்டிருப்பேன். அதைக் கேட்டு நீங்கள் கலவரமடையாதீர்கள். அங்கு நடக்கும் களேபரத்துக் கிடையில் உங்கள் காரியத்தைச் சாதித்துக் கொள்ளுங்கள்.''

தரையிலே நீர்க்கோலம் இட்டுக் காண்பித்தாள் வண்டார் குழலி. அந்த வரைபடம் சுரங்கப் பாதை முடியும் இடத்தையும் அங்கிருந்து சிவலோகநாதன் சிறைப்பட்டிருக்கும் பகுதியை அடையும் வழியையும் தெற்றென விளக்கியது. நீர்க் கோலத்தை நெஞ்சில் நிழற்கோலமாக்கிக் கொண்டு புறப்பட்டான் கம்பன் மணியன்.

## 11

திட்டமிட்டபடியே மறுநாள் நள்ளிரவுக்கு மேல் முப்பதின்மரும் அவர்கள் தலைவனும் மரகதத் தேவர் கோயில் அருகே இருந்தனர். முன் வாசல் பூட்டப்பட்டிருந்தது. அங்கும் வெளி மதிலின் நான்கு மூலைகளிலும் காவலர்கள் நின்றனர். அவர்கள் இவர்களைப் பார்த்துவிடாதிருக்க அமாவாசை இருள் துணை செய்தது: ஒருவர் முதுகில் ஒருவராக ஏறி மதிலைத் தாண்டி உள்ளே பூனை போல் குதித்தார்கள்.

'ஆகா! சிவலோக நாதன், மட்டுமல்ல; மரகதத் தேவரும்தான் சிறை வைக்கப்பட்டிருக்கிறார்' என்று எண்ணினான் கம்பன் மணியன். மரகதக் கல்லால் உருவாகியிருந்த திருமால் குடியிருந்த கருவறையின் பூட்டைத் தகர்க்க உடன் எடுத்து வந்திருந்த கடப்பாறையைப் பயன்படுத்தப் போனான் ஒருவன். அரவம் எழாதிருக்க அவனைத் தடுத்து நிறுத்தி வேறொரு தோழனுக்கு கம்பன் மணியன் சமிக்ஞை செய்ய, அவன் தனது குத்து வாளின் கூர் முனையைச் சாவித் துவாரத்தில் நுழைத்து இயக்க, ஓசைப்படாமல் பூட்டு திறந்து கொண்டது! உள்ளே நுழைந்த கம்பன் மணியன் மரகதத் தேவர் முன் சில கணங்கள் வணங்கி நின்று கண் மூடித் தியானித்தான். 'மரகதத் தேவரே! அறத்துக்குத் தாங்கள் துணை நிற்பது உண்மையானால் இந்த முயற்சி வெற்றி பெறட்டும். பெருமையானால் அருள்மொழி வர்மரின் அனுமதி பெற்று உம்மை இந்த அறம் பிறழ்ந்த நாட்டிலிருந்து சோழ தேசத்துக்கு எடுத்துச் செல்வேன். எனது சொந்த ஊரான திருப்பழனத்தில் உள்ள சிவன் கோயிலில் உம்மையும் எழுந்தருளச் செய்து அரியும் அயனும் ஒன்று என்று அனைவரும் உணரச் செய்வேன். நானும் அவ்வாறே நம்பி சிவனாரை மட்டுமின்றி உம்மையும் இன்று முதல் என்றும் துதிப்பேன்' என்று பிரார்த்தித்தான்.

மரகதத் தேவர் வழி விட்டார். சுரங்கப் பாதையின் தொடக்கமும் முடிவும் கண்டான் கம்பன் மணியன். வண்டார்குழலி எழுதித் தன் மனத்தில் பதிந்திருந்த சித்திரத்தின்படி பாதை கண்டுபிடித்து முன் சென்றான். மற்ற தோழர்கள் பின்தொடர்ந்தனர். பூனைக் கால்களும் கண்களும் கொண்டவர்களாய் முன்னேறினர்.

சிறைக்கூடத்தின் பாதாளச் சிறைச்சாலைப் பகுதியில் காவல் பலமாக இருந்தது. எட்டிப் பார்த்ததில் குறைந்தபட்சம் பத்துப் பேரை எண்ண முடிந்தது. தீப்பந்தங்களின் ஒளி அதிகமில்லை யானாலும் காவலருக்குப் போதிய அளவில் இருந்தது. மீட்க வந்தவர்களுக்கு மிகையாகத் தோன்றியது. ஓசைப்படாமல் இவர்களைத் தாக்கித் தீர்த்துக்கட்டலாம். ஆனால் இந்தக் கொட்டடிகளுள் எதில் சிவலோக நாதன் இருக்கிறான் என்பதை எப்படித் தீர்மானிப்பது? மிருதுவாக அழைத்துப் பார்க்கத்தான் வேண்டும்.

அச்சமயம் வெளியே அரவம் கேட்டது. ''எங்கே அந்த அயோக்கியன்? பாதுகாப்பாய் இருக்கிறானா? அந்தத் திருட்டுப் பயலை விடுவிக்க முயற்சி நடப்பதாக மன்னருக்குச் செய்தி கிடைத்திருக்கிறது. அவனை நேரில் பார்த்துத் தப்பிவிடவில்லை என்று நான் உறுதி செய்துகொண்டு மன்னரிடம் திரும்ப வேண்டும்!'' சிறையதிகாரி ஒருவனுடன் வெகு வேகமாய்ப் படி இறங்கி வருவது வண்டார் குழலிதான். குரலை மாற்றிக் கொண்டிருந்தாலும் கம்பன் மணியனுக்குப் புரிந்தது. குறித்த நேரத்தில் ஆண் உடையில் வந்துவிட்டாள். உயர் அதிகாரிக்குரிய முத்திரை மோதிரத்தைக் காட்டிச் சிறைச்சாலைத் தலைவனை ஆட்டுவித்துக் கொண்டிருக்கிறாள்!

''இதோ இந்தக் கொட்டடியில்தான் இருக்கிறான்'' என்றான் சிறைச்சாலைத் தலைவன்.

''எங்கே! கதவைத் திறவுங்கள்! அவனை வெளியே இழுத்து வாருங்கள்! தீபத்தின் ஒளியில் பார்ப்போம்! ஆள் மாறாட்டம் நடந்திருக்கப் போகிறது!''

உத்தரவுக்கிணங்கி கதவு திறக்கப்பட்டது. தள்ளாடிய ஒருவனைத் தரதரவென்று வெளியில் இழுத்து வந்தனர். தீப்பந்தங்களின் ஒளி கைதியின் கண்களைக் கூச வைத்தது. 'இவனா சிவலோகநாதன்! பரதேசிக் கோலமும் அல்ல; பஞ்சத்து ஆண்டியுமல்ல. அதைவிடக் கேவலம்! பஞ்சடைந்த கண்கள், சிக்குப்பிடித்த கேசம், ஒடிந்து விழும் தேகம்; கிழிந்து நார் நாராகிக்கிடந்த ஆடை, சதைப் பற்றே சிறிதும் இல்லாது, எலும்பும் தோலுமாக இன்றோ நாளையோ மரணத்தைத் தழுவப் போகிறவனாக... என்ன பரிதாபம்!'

கையை உயர்த்தி விரலைச் சொடுக்கிச் சமிக்ஞை செய்துவிட்டுப் பாய்ந்தான் கம்பன் மணியன். தீப்பந்தங்களின் ஒளியில் உருவிய வாள்கள் பளபளத்தன! இவர்களைக் கண்டதும் வண்டார் குழலி, ''நான் சொன்னேனல்லவா! வந்துவிட்டார்கள்! தப்புவித்துக் கொண்டு போய்விடப் போகிறார்கள்!'' என்று கத்தினாள். சிறைச்சாலைத் தலைவன் ஒரு கணம் குழம்பி நின்றவன் பிறகு தன் நிலை அடைந்தவனாய், ''அடேய்! ஓடி வாருங்கள்!'' காவலர்களா! சீக்கிரம் ஓடி வாருங்கள்! என்று மேலும் பலரை உதவிக்குக் கூவி அழைத்தான். பிறகுதான் நினைவு வந்தவன் போல் தன் தோளிலிருந்து தொங்கிய சிறு கொம்பு வாத்தியத்தை எடுத்து ஊதினான். இடிஇடியென்று வேறு பலரும்



அவன்: ''பத்திரிகை அலுவலகத்தில் ஆசிரியர் தூங்கி எழும் வரை மூன்று மணிநேரம் பொறுமையாகக் காத்திருந்தேன்!''

இவன்: ''எதற்கு...?''

அவன்: ''விழிப்புணர்வு என் சிறுகதை என்ன ஆச்சென்று கேட்கிறதுக்கு!''

உ., ராஜாஜி

கூடியும் பொறி பறக்கச் செய்து கொன்டிருந்தன. இந்த ஆரவாரம் கேட்டு வேறு பல வீரரும் வரக்கூடும். தப்ப வேண்டியதுதான் என்று தீர்மானித்த கம்பன் மணியன், "ஒவ்வொருவராக இயன்றவரை என்னைப் பின்தொடருங்கள். எதிர்த்தபடியே பின்வாங்குங்கள்" என்று உத்தரவிட்டுவிட்டு மனிதச் சுமையை முதுகில் தாங்கியபடி சுரங்கப் பாதையை நோக்கி ஓடினான்.

மரகதத் தேவர் படிமத்தை மீண்டும் நகர்த்திச் சுரங்கப் பாதையை அடைக்கு முன்னர் மாண்டவர் போக மீண்டவர் தன்னையும் சேர்த்து இருபத்தைந்து பேர் என்று கணக்கெடுத்தான் கம்பன் மணியன். இவர்கள் தப்ப மற்ற ஆறு பேரும் அரணாய் நின்று உயிர்த் தியாகம் செய்து வீர சொர்க்கம் புகுந்திருந்தனர்.

## 12

**கா**ந்தளூர்ச் சாலை இருந்த இடம் தெரியாமல் அழிக்கப்பட்டிருந்தது. ஒரு பக்கம் சோழனின் கடற் படையும் மறுபக்கம் தரைப் படையும் நிகழ்த்திய இரு முனைத் தாக்குதலில் மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் மரக் கலங்கள் பலவும் கொண்ட சேரனின் அந்த அழகிய கடற்கரைப் பட்டினம் நிர்மூலமாகி விட்டிருந்தது. எங்கேயும் அதிக தாமதமின்றி வெற்றியைத் தவிர வேறொன்றும் அறியாமல் திட்டமிட்ட காலக் கெடுக்களில் மாறுதலேதுமில்லாமல் முன்னேறி வந்திருந்த அருள்மொழி வர்மனுக்கு ஒரே கவலை, பெருங் கவலை கம்பன் மணியன் சிவலோகநாதனை விடுவிப்பதில் வெற்றி பெற வேண்டுமே என்பதுதான். அதுமட்டும் நிறைவேறாது போனால் இந்தப் படையெடுப்பே பயனற்றதாகுமல்லவா?

அதற்காகத் தன் பாசறையிலேயே ஒரு பிரிவில் சிவ பூஜை நடத்திப் பிரார்த்தித்து விட்டு திரை விலக்கி வெளிப்பட்டவன் பூசனைக்கு உடனடிப் பலன் கிட்டியது போல் கம்பன் மணியன் தனக்காகக்காத்திருப்பதைக் கண்டு வியந்தான்.

மன்னரைப் பணிவுடன் வணங்கி எழ முற்பட்டான் கம்பன் மணியன். அதற்குள் பொறுமை இழந்தவனாய், "கம்பன் மணியா செய்தி என்ன? அதைச் சொல் முதலில்!" என்று கட்டளையிட்டான் அருள்மொழி.

"மரகதத்தேவர் அருளாலும் தங்கள் ஆசியாலும் காரியம் வெற்றிகரமாய் முடிந்தது பிரபோ! ஆனால் அம்முயற்சியில் என் உயிருக்குயிரான தோழர்கள் ஆறு பேரைக் காவு கொடுத்து விட்டேன்!" என்று கலங்கினான் கம்பன் மணியன்,



அவன் தோள்களைத் தட்டி ஆறுதல் அளித்தான் அருள்மொழி. "மணியா! உன் மனநிலை எனக்குப் புரிகிறது. அறுவர் குடும்பங்களுக்கும் ஆறுதல் அளிக்கும் பொறுப்பை உனக்கே அளிக்கிறேன். நமது அவைப் புலவர்கள் அவர்கள் வீரத்தைப்பாடுவார்கள். அவர்களின் வீரக் கதையைக் குறவைக் கூத்தாக்கிச் சோழ நாடெங்கும் அரங்கேற்றி அவர்கள் இறவாப் புகழ் பெறச் செய்வோம். அவர்கள் குடும்பங்கள் ஒவ்வொன்றுக்கும் ஆயிரம் பொற்கழஞ்சுகளை வழங்குவோம். அந்த அறுவரின் வீரம் மேலும் அறுபதாயிரம் வீரர்களை உருவாக்கட்டும்" என்றான்.

கண்களிலிருந்து நீரையும் இதயத்திலிருந்து துயரையும் துடைக்க முயன்றவாறே கம்பன் மணியன் கூறினான்: "பிரபோ! உதகைக் கோட்டையிலிருந்து சிறை மீட்கப்பட்ட சிவலோகநாதன் விசித்திரமாக நடந்து கொள்கிறான். தன்னைக் கொன்றுவிடுமாறும் அல்லது தற்கொலைக்கு உதவியாக ஒரு குத்தீட்டியோ விஷமோ—தருமாறும் கெஞ்சிக் கொண்டிருக்கிறான். ஒருவேளை சிறைச் சாலையில் அவன் அனுபவித்த சித்திரவதை காரணமாக சித்தம் கலங்கி விட்டிருக்குமோ என்றுகூடத் தோன்றுகிறது. சிறைவாசம் மட்டுமின்றிச் சித்திரவதைகளையும் அனுபவித்து அவன் உடலும் உள்ளமும் மிகவும் நைந்துவிட்டிருக்கின்றன."

"எங்கே அவன்? எங்கே?" என்று கேட்டுக்கொண்டே மகிழ்ச்சியும் கவலையும் போட்டியிட்டுப் பொங்க கம்பன் மணியன் பின்தொடர மருத்துவப் பாசறைக்குச் சென்றான் அருள்மொழி வர்மன்.

அப்பாசறையில் போரில் அடிபட்டு வேதனையில் துடித்துக் கொண்டிருந்த பல வீரர்களுக்கும் அன்பு மொழியும் ஆறுதல் வார்த்தைகளும் கூறியபடியே இலேசான பரபரப்பு எட்டிப் பார்க்க சிவலோகநாதனைச் சென்றடைந்தான் அருள்மொழி.

மன்னரைப் பார்த்ததும் பொல பொல வென்று கண்ணீர் உகுத்துக் கதறினான் சிவலோக நாதன். "அரசே! தாங்கள் அளித்த பொறுப்பைச் சரிவர நிறைவேற்றாத இந்தப் பெரும் பாவிக்கு உரிய தண்டனை கொடுங்கள்" என்று புலம்பினான்.

மன்னன் நெற்றியில் சிந்தனை ரேகைகள் படர்ந்தன. "மருத்துவரே இவன் மனநிலை சரியில்லை. இவனுக்குத் தனிப் பாசறை ஒதுக்குங்கள். அங்கு வந்து காண்பேன்" என்றான்.

அவ்வாறே சிவலோக நாதன் தனிமைப் படுத்தப் பட்ட பின்னர் கம்பன் மணியனை மட்டும் உடன் வைத்துக் கொண்டு அவனை விசாரித்தான் அருள்மொழி. ஆறுதலும் கூறி



னான்: ''கவலை வேண்டாம் சிவலோகநாதா! சேரன் உனக்கு இழைத்த அநீதிக்குப் பழிவாங்கியாகி விட்டது. உன்னைச் சிறை வைத்திருந்த உதகையையும் இனி தாக்கி மண்ணோடு மண்ணாக்குவேன்'' என்று வீரம் பேசினான்.

''பிரபோ! இத்தனை அன்புக்கும் நான் தகுதி வாய்ந்தவன் அல்ல என்பதுதான் என் குறை'' என்று அழுதான் சிவலோகநாதன். ''என் சொல்வேன்? வண்டார் குழலியின் கயல் விழிகளில் மயங்கி மோசம் போனேன். நல்லெண்ணத் தூதுவனாக வந்தவன் ஒற்றன் எனப் பெயர் பெற்றேன்'' என்று தொடங்கி நடந்தவற்றை யெல்லாம் மெல்ல மெல்ல கண்ணீர்ப் பெருக்கினூடே விம்மல் விசும்பலுக்கிடையில் கூறி முடித்தான். கடைசியில், உங்களைச் சேர நாட்டின் மீது படையெடுக்கச் செய்வதுதான் அவள் என்னை ஒற்றனாக்கிச் சிறைப்படுத்தியதற்கு உள்நோக்கமாக இருக்க வேண்டும் என இப்போது உணர்கிறேன் பிரபோ'' என்றான்.

இதையெல்லாம் கேட்டு வந்த கம்பன் மணியன் தன் அனுபவங்களையும் மன்னருக்கு எடுத்துரைத்து, இறுதியில், ''எனக்கு உதவுவது போலும் நடந்து கொண்டு அதே நேரத்தில் சிவாவைப் புலிக்கு இரையாக்கி விடவும் முயன்ற வண்டார்குழலியின் நடத்தைக்குக் காரணம் இப்போது புரிகிறது'' என்றான். ''சோழன் வென்றால், சிவலோகநாதனைச் சிறைமீட்க மனப்பூர்வமாய் உதவினேன். ஆனால் கணக்குப் பிசகிவிட்டது. எந்தக் கோட்டையில் அவன் இருக்கிறான் என்பதில் குழப்பம் ஏற்பட்டுவிட்டது எனலாம்.. சேரன் போரில் ஒருவேளை வென்றுவிட்டால், சிவலோகநாதனைச் சோழர்கள் மீட்புப் படையை ஏவி சிறை மீட்க முயன்றனர். அவர்கள் முயற்சியை நான்தான் முறியடித்தேன் என்று பெருமையாகக் கூறலாம். இரு தரப்பிலும் நற்பெயரெடுத்து அதே நேரத்தில் சிவா ஒற்றன் எனக் கருதப்படத் தான்தான் காரணம் என்ற ரகசியமும் வெளிபடாமல் காக்கலாம்!''

ஆதியோடு அந்தமாக அனைத்தையும் தெரிந்துகொண்ட அருள்மொழி வர்மன், ''ஆகா! அவள் வஞ்சம் மட்டும் வெற்றி பெற்றிருந்தால்...'' என்று நிறுத்தினான்.

''நான் ஏமாந்தவனாகி விட்டிருப்பேன். சிவாவுக்குப் பதில் எவனையோ விடுவித்து அழைத்து வந்திருப்பேன். எவ்வளவு அவமானம்!''

''அவமானம் உனக்கு மட்டுமா?'' என்று கர்ஜித்தான் அருள்மொழி. ''எனக்கும் சோழ நாட்டுக்கும் ஏற்பட்ட அபகீர்த்தி!'' நினைக்க நினைக்க அருள்மொழிக்குக் கோபம் கொந்தளித்தது. ''சீச்சீ! ஒரு பெண் நாட்டியக்காரி, ராஜ நர்த்தகி, பேரழகி எத்தனை பெரிய சூழ்ச்சியில் ஈடுபட்டு சேரமானை முட்டாளாக்கி அநீதி இழைக்கச் செய்துவிட்டாள். அதனால் அமைதி காத்து அறப் பணிகளிலும் கலைப் பணிகளிலும் ஈடுபட நினைத்த நானும் அல்லவா படையெடுக்க நேர்ந்துவிட்டது! சேரன்பால் பழிதீர்த்துக்கொள்ள என்னைக் கருவியாக்கி மாபெரும் வெற்றியும் பெற்றுவிட்டாளே! அவள் மடிந்தாள் என்றாலும் அவள் லட்சியம் ஈடேறிவிட்டதே!''

இத்தகைய துரோகியை இனம் கண்டு கொள்ளாமல் தன் அரசவையிலேயே இடம் அளித்து அவளால் வஞ்சிக்கப்பட்டு, பெரும் போருக்கும் வழி வகுத்துவிட்ட சேரன்பால் ஆத்திரம் கட்டுக்கடங்காமல் பொங்கியது அருள்மொழிக்கு. அந்த ஆவேச வெறியில் அவன் சிவலோகநாதன் சிறைப்பட்டிருந்த உதகையை மட்டுமல்ல மற்றொரு கடற்கரைப் பட்டினமாம் விழிஞத்தையும் இடித்துத் தகர்த்துத் தரை மட்டமாக்கி அழித்தான்.

வெற்றித் திருவை மணந்து சேர நாட்டில் தங்கியிருந்த நாளில் தான் பிறந்த சதய நாள் விழாவைக் கொண்டாடினான். ஆண்டுதோறும் கொண்டாடவும் உத்தரவிட்டான். பின்னர் பொன்னும் மணியும் பவழமும் முத்தும் களிறும் சந்தனமும் வேறு பலவும் பெருமளவில் வெற்றிப் பரிசாகப் பெற்றுத் திரும்பினான்.

சோணாடு திரும்புகையில் வீர பாண்டியன் எதிர்ப்பட்டான். வணங்கிக் கூறினான்: ''என் கோரிக்கையை மறக்க மாட்டேன் என்றீர்கள்!''

''மறக்கவில்லை வீர பாண்டியரே!'' என்றான் அருள்மொழி. ''அமரபுஜங்கனிடமிருந்து நான் போரிட்டுப் பெற்ற இந்தப் பாண்டியப் பேரரசை வாக்களித்தபடி உமக்கே அளிக்கிறேன். ஆனால் அதனை மீண்டும் யுத்தம் செய்து நானே பறித்துக்கொள்ளவும் போகிறேன்! தனது ஒரு சொந்தப் பழிதீர்ப்புக்காக வஞ்சனை புரிந்த ஒருத்தியின் சாகசத்தில் மயங்கி இரு பேரரசர்களை மோதவிட்டு இடையில் ஆதாயம் காண நினைத்த நீர் மன்னராயிருக்கவே தகுதியற்றவர். எங்கே உமது படை பலம்? அதற்கேற்ப என் சேனையையும் குறைத்துக் கொண்டு உம்முடன் பொருதுகிறேன். அல்லது நாம் இருவர் மட்டுமே கைகலக்கலாம். என்னுடன் நேருக்கு நேர் சண்டையிட்டுப் பாண்டிய நாட்டைக் காத்துக் கொள்ளுங்கள்! வாளா? வில்லா? வேலா? அல்லது வெறுங் கையா எதைத் தேர்ந்தெடுக்கிறீர்கள்?''

வீர பாண்டியனுக்கு வேறு வழி இல்லாது போய்விட்டது. நேருக்கு நேர் நிற்கத் துணிவில்லாத கோழையாகித் தன் படை பலத்தை உணர்த்தினான். அதற்குச் சம பலத்துடன் மட்டுமே முன்னேறி ஏனையோரை ஒதுங்கி இருக்கச் செய்தான் அருள்மொழி. நிகழ்ந்த யுத்தத்தில் பாண்டியப் படை நிர்மூலமாகியது.

அமரபுஜங்கனை மட்டுமின்றி அவனுக்குப் போட்டியாகப் பாண்டிய நாட்டின் மீது உரிமை கொண்டாடிய வீர பாண்டியனையும்

வென்றதால். 'செழியரை தேசுகொண் கோவி ராசகேசரி வர்மன்' ஆனான் அருள்மொழி.

தஞ்சை திரும்பியபோது "சேரனையும் பாண்டியனையும் ஒருசேர வென்ற சோழன் என்ற அளவில் "மும்முடிச் சோழரே வருக" என்று தம்பியை வரவேற்றாள் குந்தவை. "அரசர்க்கரசன் என்று பொருள் பட, "ராஜ ராஜனே! வருக!" என்றாள் பட்டமகிஷி வானவன்மாதேவி.

"பிரபோ! என் காதலன் எங்கே?" என்று வினவினாள் உதயபானு.

"மீட்டு வந்தேன் நங்காய்! ஆனால் அவன் தவறிழைத்திருக்கிறான். ராஜ நீதிப்படி அவனுக்கு நான் தண்டனை வழங்க வேண்டியவனாய் உள்ளேன்" என்றான் ராஜராஜன். "சிறையில் நீ அவனைச் சந்திக்கலாம்; சந்திப்பதென்ன? உன் காதல் உறுதியானதாயிருந்தால் சிறைச்சாலையிலேயே அவனைத் திருமணம்கூடச் செய்து கொள்ளலாம். ஆனால் சேர்ந்து வாழ முடியாது."

"என்ன தம்பி இது?" என்று கலக்கத்துடன் வினவினாள் குந்தவை. நடந்ததையெல்லாம் அறிய வேண்டியவர்களுக்கு மட்டும் விவரித்தான் அருள்மொழி.

"நான் அஞ்சமாட்டேன் அக்கா! எங்கள் திருமணம்சிறைச்சாலையிலேயேநடக்கட்டும்!" என்றாள் உதயபானு. "சேர்ந்து வாழ்ந்தாலும் பிரிந்து வாழ்ந்தாலும் என் கணவர் அவரே! அவர் எனக்குத் துரோகம் இழைத்திருக்கலாம். ஆனால் சோழ நாட்டுக்குத்துரோகம் எண்ணியிருக்கவே மாட்டார். தவறுவது மனித இயல்பு. திருந்துவது தெய்வ இயல்பு. என் காதலரின் கண்ணீர் அவரைத் தெய்வமாக்குகிறது அக்கா!"

"அப்படியானால் சரி. திருமணத்துக்கு நாள் குறிக்கலாம்" என்றான் ராஜராஜன்.

திருமணம் அடக்கமாக, அமைதியாக நடந்தது. துயரமும் மகிழ்ச்சியும் வியப்பும் நெகிழ்ச்சியும் ஒன்றோடொன்று போட்டியிட, கூடியிருந்தவர்கள் திக்கித் திணறியபடியே, உறுதியாய் நின்ற அந்த விசித்திரமான இளம் தம்பதிக்கு ஆசி நல்கினர்.

"தம்பி! ஏதோ திருமணப் பரிசு அளிக்கப் போவதாய்ச் சொன்னாயே?" என்று நினைவூட்டினாள் குந்தவை.

"ஆம் அக்கா! இதோ! உன் கரத்தினாலேயே இதனை மணமகளிடம் கொடு" என்றான் அருள்மொழி வர்மன்.

ராஜ முத்திரையுடன் கூடிய நறுக்கோலையை சிவலோகநாதனிடம் அளித்தாள் குந்தவை. "உரக்கப் படி சிவா" என்றாள்.

பிரித்துப் படித்தான் அவன்.

"செய்த தவறுக்கு உரிய தண்டனையை சேர நாட்டிலேயே சிறை வாசமாகவும் சித்திர வதையாகவும் ஏற்கனவே போதிய அளவு அடைந்து மனம் வருந்தித் திருந்திவிட்ட சிவலோகநாதனுக்கு இன்று முதல் பூரண மன்னிப்பு. இதுவே ராஜ ராஜன் அவனுக்கு வழங்கும் திருமணப் பரிசு!"

ஆனந்தக் கண்ணீர் பெருகத் தன் கால்களில் விழுந்து வணங்கிய இளம் தம்பதிக்கு மனப்பூர்வமான ஆசிகளை நல்கினான் மும்முடிச் சோழன்.

[முற்றும்]

---

# தனிமரம்



சத்யகலா அறிமுகமாகிறார். இவ் வண்ணப் படத்தில் பாராட்டுப் பெறுபவர் அவர் ஒருவர்தான். படமும் பாதி வரையில் சுவையாயிருக்கிறது.

மார்க்கெட் ரௌடி சின்னத்துரையாக வரும் விஜயன், செல்லம்மாளின் தைரியத்தினால் நல்லவனாகிவிடுகிறார். அவரது நடிப்பு இந்தப் படத்தில் பரவாயில்லை.

மிக நல்லவனைப் போல் தோற்றம்கொண்ட பொல்லாதவன் ராஜ். அந்தப் பாத்திரத்தைப் புரிந்துகொண்டு சிறப்பாகச் செய்திருக்கிறார் ராஜேஷ்.

சுருளிராஜன் காமெடிக் காட்சிகளில் வசனம் மிகவும் விரசம். சென்ஸாரில் இதையெல்லாம் கண்டுகொள்ள மாட்டார்களா!

ராஜிடம் செல்லம்மா தன்னை இழக்கும் காட்சியை அத்தனை நேரம் வளர்த்திருக்க வேண்டுமா?

தயாரிப்பாளர் கே. பி. கொட்டாரக்காராவின் கதைக்குத் தூயவன் வசனம் எழுதியிருக்கிறார்.

வண்ண ஒளிப்பதிவு படத்தின் தனிச் சிறப்பு.

தனி மரம் தோப்பாகாதுதான். தனி மரமானாலும் தென்னை மரமானால்நல்லது. முகக் கட்டை ஏறிய முருங்கை மரமாயிருந்தால் என்ன செய்ய?

—சாந்தன்






# கடுகு பதில்கள்!

⌘ வி. நாககந்தரம், உசிலம்பட்டி

கே. ஜெயகாந்தனின் சில கருத்துகள் முன்னுக்குப் பின் முரணாக இருக்கின்றனவே?

ப: ஸ்பெயினின் முக்கிய இலக்கியவாதிகளில் ஒருவராகக் கருதப்படும் ஜெரால்ட் ப்ரேனன் என்பவர் 'வறட்சி காலச் சிந்தனைகள்' என்று கதம்பத் தொகுப்பை எழுதியிருக்கிறார். அதன் முகவுரையில் எழுதியிருப்பது ''நான் எழுதியிருக்கும் துண்டு துண்டு கருத்துக்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இருக்கும். காரணம், நான் வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறுமாதிரி சிந்திக்கிறேன். ஒரே சமயம் எதிர் எதிரான கருத்துக்களும் எனக்குத்தோன்றுகின்றன. இவைகளை நான் மாற்றவில்லை. என் மனத்தில் தோன்றியவைகளை எழுதுகிறேன்..... நான் சொல்வதுதான் உண்மை என்றோ சரியானவை என்றோ கூறவில்லை. வாசகர்கள் தங்கள் இஷ்டப்படி அவைகளை எடுத்துக் கொள்ளலாம்.'' இதுவே ஜெயகாந்தனின் வாதமாக இருக்கலாமில்லையா?

⌘ வி. ராதாகிருஷ்ணன், சென்னை-3

கே. கேள்வி - பதில் சொல்பவர்கள் புத்திசாலியாகத்தான் இருக்க வேண்டுமா? அல்லது உங்களைப் போல் இருந்தாலே போதுமா?

ப: ஒரே அம்பால் ஏழு மரங்களைத் துளைத்த மாதிரி, ஒரே கேள்வி மூலம் கேள்வி—பதில் சொல்பவர்கள் எல்லோரையும் ஒட்டு மொத்தமாகத் தாக்குகிறீர்களே. இது சரியா?

⌘ மீனாக்ஷி வேணுகோபால், பெங்களூர்

கே. தோல்வியை வெற்றியாக ஆக்க முடியுமா?

ப: முடியும். தீவிர உழைப்பும் முயற்சியும் ஆர்வமும் இருந்தால்! ஒரு உதாரணத்தைக் கூறட்டுமா? ரயில்வேயில் சாதாரண ஊழியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தவரை அவரது அரசியல் ஈடுபாடு காரணமாக வேலை நீக்கம் செய்து விட்டார்கள். எத்தனையோ மனுக்கள் அனுப்பினார். தோல்விதான். அந்தத் தோல்வி அவருக்கு மன உறுதியைத் தந்தது. இராஜாஜிலிடி போன்ற வகையில் கிடைத்த பணத்தில் ஒரு மிலிடிரி ஓட்டல் ஆரம்பித்தார். அந்த ஊரின் மிகப் பிரபலமான ஓட்டலாக அது மாறிற்று. மாடி வீடு கட்டினார். லாரிகள் வாங்கினார். முனிசிபல் கவுன்சிலர் ஆனார்.

⌘ கபில்தாசன், விருத்தாசலம்

கே. சில கிழங்கள் எதற்கெடுத்தாலும் 'அந்தக் காலத்திலே' என்று சொல்வதைக் கேட்கும்போது எரிச்சல் வருகிறதே?

ப: அந்தக் காலத்திலே எனக்கும்தான் உங்கள் மாதிரி எரிச்சலாக வந்தது. அந்தக் காலத்தில் பத்திரிகைகளுக்குக் கேள்வி கேட்டு பதில் பெற வாய்ப்பு இல்லை. ஆகவே அந்தக் காலத்தில் சும்மா இருந்துவிடுவேன்.

⌘ ஆர். மாதவன், திருச்சி-8

கே. அமிதாப்பச்சனுக்கு 50 லட்சம் தரத் தயாராக இருக்கும் தயாரிப்பாளர்கள், இங்கு வேலை இன்றி இருக்கும் நடிகர்களை வைத்துப் படமெடுத்தால் தமிழ்ப்பட உலகம் வளருமே!

ப: வேலை இல்லாமல் இருக்கிற காரணத்துக்காக அவர்களைப் போட்டுப் படமெடுத்தால் பட உலகம் எப்படி சாமி வளர்ந்துவிடும்? சினிமா தயாரிப்பு தர்ம கைங்கரியமா? அது ஒரு பிஸினெஸ். ஏகப்பட்ட முதலீடு போட்டுச் செய்கிற தொழில். விற்காத சரக்கை எந்தக் கடைக்காரர் வாங்கி ஸ்டாக் பண்ணுவார்?

⌘ அசோக்ராஜா, தஞ்சை-1

கே. சஞ்சய் காந்தியின் மரணம் பற்றி...

ப: அரசியலில் சுறுசுறுப்பை ஊட்டியவர். உண்மையில் அவரது மரணம் எல்லாருக்கும் பேரதிர்ச்சி. அதிலும் ஒருபடி அதிகமாக அதிர்ச்சிக்குள்ளாகி யிருப்பவர்கள், 'சஞ்சய் காந்திதான் அடுத்த பிரதமர்' என்று ஜோஸியம் சொன்னவர்கள். இனியும் அவர்கள் ஜோதிட பிஸினஸை நடத்த வேண்டுமா என்பதே கேள்வி.

⌘ நாகலூர் நாககந்தரம், ஏம்பலம்

கே. இன்றைய இந்தியாவின் மிகப்பெரிய பலம் எது? பலவீனம் எது?

ப: அப்பழுக்கற்ற ஜனநாயக நாடாக இருப்பது (இரண்டுக்கும் இதுவே பதில்!)

⌘ லா. ரா. சுந்தரராஜன், சென்னை:28

கே. கம்பனின் வாரிசு யார்?

ப: யாரும் இல்லை. சொத்து பத்து இல்லாத ஆசாமியாயிற்றே கம்பன்! ஆகவே யாரும் சொந்தம் கொண்டாடி வந்ததாகவும் தெரியவில்லை.

பரிசு பெறுபவர் :

**நாகலூர் நாககந்தரம்**
**ஏம்பலம்—605106**




# உறவின் கைதிகள்

7

முன்கதை

திரைப்பட நடிகன் ராஜீவ் முரண்பாடான குண இயல்புகளைக் கொண்டவன். சொந்த இன்பங்களுக்காகவும் ஆசை நாயகிகளுக்காகவும் பணத்தை நீர் போல் வாரி இறைப்பவன். ஆனால் அதேசமயத்தில் எத்தனை எத்தனையோ நல்ல காரியங்களுக்கும் அனாதை விடுதிகளுக்கும் வாரி வழங்கும் நல்லிதயமும் படைத்தவன். ராஜீவின் அந்தரங்கக் காரியதரிசி சுரேஷ். அவனது மனமறிந்து நடந்து கொள்ளும் உதவியாளன்.

அன்று ராஜீவ் மேக்கப்பை முடித்துக் கொண்டு வெளி வந்த போது காரியதரிசி சுரேஷ், ராஜீவைக் காணக் கல்லூரிப் பெண்கள் சிலர் வந்திருக்கும் செய்தியை அறிவித்தான். உள்ளுக்குள் ராஜீவ் கசப்புணர்ச்சி எழுந்தாலும் அதைக்காட்டிக் கொள்ளாமல் அந்தப் பெண்களைச் சந்திக்கவந்தான். அந்தக் கல்லூரிப் பெண்களில் உஷா என்னும் கல்லூரி மாணவி அவன் மனத்தை வெகுவாக ஈர்த்தாள். உஷாவின் வேண்டுகோளுக்காகவே கல்லூரி ஆண்டு விழாவுக்கு ராஜீவ் தலைமை வகிக்க ஒப்புக் கொண்டான். கல்லூரி அவனது வரவால் அமர்க்களப் பட்டது. கண்டிப்புக்குப் பேர் போன பிரின்ஸ்பால் மிஸ் மைத்ரேயி அன்று கலகலப்பாகக் காணப்பட்டாள். ஆண்டு விழாவில் ராஜீவின் கண்கள் உஷாவின் பேரழகைத் தரிசிக்கவே பரபரத்தன. சாகுந்தலம் நாடகத்தில் உஷா வந்து ராஜீவை மெய் சிலிர்க்கவைத்தாள். கல்லூரியை விட்டுச் செல்லும் போது ராஜீவ் தன் காரியதரிசி சுரேஷிடம் நான்கு வரிகளை ஒரு தாளில் கிறுக்கித்தந்து விட்டுப் போனான். சுரேஷ் அதை உஷாவிடம் சேர்ப்பிக்க உஷா திக்கு முக்காடிப் போனாள். அந்தக் கடிதத்தின் விளைவான டெலிபோன் காலுக்காகக் காத்திருந்தான் ராஜீவ். தாங்க முடியாத பொறுமையின்மையோடு தவித்தான். கடைசியில் உஷாவின் இனிய குரல் டெலிபோனில் ஒலித்த போது, "உஷா உன்னை நான் தனியா சந்தித்துப் பேசணும்!" என்று கேட்டுக் கொண்டான். உஷா விடமிருந்து பதில் வரவில்லை. 'தானாகக் கனியவேண்டிய மலரை அச்சுறுத்தித் துரத்தி விட்டோமோ' என்று தவித்தான் ராஜீவ். இனிமேலே தொடர்ந்து படியுங்கள்.

ஜெயலலிதா

Love is a power too strong to be overcome
— by anything but flight
- Cervantes

உஷா ஃபோனை வைத்துவிட்டுப் போய் விட்டாள் என்று ராஜீவ் நினைக்க ஆரம்பித்து விட்டான். "உஷா?" என்று மறுபடியும் அவள் பெயரைச் சொன்னான்.

ஒரு விநாடி தாமதித்து "இங்கேதான் இருக்கேன்" என்றாள் உஷா. ராஜீவுக்கு அப்போதுதான் உயிர் திரும்பின மாதிரி இருந்தது.

"உஷா! நான் சொன்னது கேட்டதா?"

"உம்."

"என்ன 'உம்'?"

"கேட்டது."

"உன் பதில்?"

"நான்... வந்து... என்ன சொல்றதுன்னு எனக்கு.... புரியல்லே" என்றாள் உஷா தயங்கியவாறு.

"உஷா!" அவன் குரல் அழுத்தமாக ஒலித்தது.

"உஷா! உனக்கு என்னைப் பார்க்கணும்னு தோன்றவில்லையா? என்னைச் சந்தித்துப் பேச உனக்கு ஆசை இல்லையா?"

அவன் கேள்வி அவள் ஆசைகளைத் தூண்டி விட்டு அவளை வாட்டி எடுத்து விட்டது. அவன் குரல் அவளை வசீகரித்தது, உருக வைத்தது. அடக்கிக் கொள்ள முடியாத ஒரு சக்தி வாய்ந்த ஏக்கம் அவளுக்குள் தோன்றியது. ஆனால் அவன் கேள்விக்கு அவளால் உடனே பதில் அளிக்க முடியவில்லை. என்ன சொல்வது, எப்படிச் சொல்வது என்று யோசித்துக் கொண்டிருந்த வேளை

யில்— ''உஷா! பதில் சொல்லு!'' என்று ராஜீவ் மீண்டும் வற்புறுத்தினான்.

திணறிப்போய் உஷா பேச முயன்றபோது உணர்ச்சிப் பெருக்கு அவள் தொண்டையை அடைத்தது.

''உஷா! சொல்லு உஷா!''

''ஆ....ஆ....ஆமாம்.''

''என்ன ஆமாம்?''

''எ...எனக்கு...உ....உங்களை... பா... பா.... பார்க்கணுமுன்னு ஆசையா இருக்கு.''

போர்க் களத்தில் ஆயிரம் எதிரிகளை வீழ்த்திய வெற்றி உணர்வும் உற்சாகமும் ராஜீவுக்கு ஏற்பட்டது.

''உன்னை எப்படிப் பார்க்கிறது? ஹாஸ்டலை விட்டு உன்னாலே வெளியே வர முடியுமா?'' என்று கேட்டான்.



பயத்தில் உஷாவுடைய கால்கள் நடுங்கத் தொடங்கி விட்டன. இம்மாதிரியான சூழ்நிலையைச் சமாளிக்க வேண்டிய அவசியம் இது வரை அவளுக்கு ஏற்பட்டிருக்கவில்லை. அவள் மனத்துக்குள் ஒரே கலவரம். ''உஷா! நீ என்ன காரியம் செய்யத் துணிந்திருக்கிறாய்? வேண்டாம்! இதெல்லாம் உனக்கு வேண்டாம். இந்தப் பேச்சை இத்தோடு நிறுத்திவிடு! ஃபோனை வைத்துவிட்டு ஓடிவிடு!' ஆனால் -மனச்சாட்சி கூறிய அறிவுரையைப் பின்பற்ற அவளால் முடியவில்லையே?

வேறு யாரோ பேசுவதை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருப்பதைப் போல் தன் குரல் உரக்க பதில் கூறியதைக் கேட்டுத் தானே வியந்தாள். ''அது ரொம்பக் கஷ்டம். இங்கே எத்தனையோ ரூல்கள் போட்டு வைச்சிருக்காங்க'' என்றாள் உஷா.

கடவுளே! அவள்தான் அப்படிப் பதில் சொன்னாளா? அப்படியானால், அதன் பொருள் முடிந்தால் ஹாஸ்டலை விட்டு வெளியே வந்து ராஜீவைச் சந்திக்க அவள் தயாராக இருக்கிறாள் என்பதுதானே? ''உஷா! நீயா இப்படிப் பேசுகிறாய்? என்ன ஆகிவிட்டது உனக்கு? போ! இங்கிருந்து ஓடிவிடு!'

ஆனால் அதைச் செய்ய அவளால் இயலவில்லை. அவன் குரல் அவளை முழுமையாக மயக்கி, கட்டி இழுத்தது. அந்தக் கம்பீரமான குரலைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும், அவனோடு பேசிக் கொண்டே இருக்க வேண்டும் போல இருந்தது.

விட்டில் பூச்சி நெருப்பை அணுகினால் ஆபத்து என்று தெரிந்தும், வலியப் போய் அதில் விழுவதில்லையா? நெருப்பில் தன்னை மாய்த்துக் கொள்ளுமாறு யார் அதனைக் கட்டாயப்படுத்துகிறார்கள்?

''ஏதாவது ஒரு வேளையில் உன்னால் வெளியே வரமுடியாதா?'' என்று ராஜீவ் கேட்டுக் கொண்டிருந்தான்.

''சனி, ஞாயிறு அன்றுதான் வெளியே போக அனுமதி தருவாங்க. ஆனால், அந்த நாட்கள்கூட, சாயங்காலம் ஆறு மணிக்குள்ளே ஹாஸ்டலுக்குத் திரும்பிடணும்'' என்றாள் உஷா.

''உஷா! உண்மையாகவே உனக்கு இத்தனை நெஞ்சழுத்தமா? கள்ளக் காதல் சந்திப்புக்கு நீ அங்கீகாரம் தந்துவிட்டாயா?' என்று அவள் மனச்சாட்சி அவளைக் கண்டிக்க முயன்றது. உஷா அதனைச் சட்டை செய்ய மறுத்தாள்.

'உஷா, இன்னிக்குச் சனிக்கிழமை ஆச்சே! இன்னிக்கு உன்னாலே வர முடியுமா?'' என்று ஆர்வத்தோடு ராஜீவ் கேட்டான்.

உஷா திடுக்கிட்டாள். ''ஓ நோ! அது அவ்வளவு சுலபமான காரியம் இல்லை. இங்கே



எத்தனையோ கேள்விகள் கேட்பாங்களே? யார் கூடப் போகப் போறேன், எங்கே போகப் போறேன் — எல்லாத்தையும் சொல்லி ஆகணும். நான் இங்கே என்னத்தைச் சொல்வேன்?''

'உஷா, உஷா! சொன்னால் கேளு! இப்போது கூட ஒன்றும் குடி மூழ்கிப் போய்விடவில்லை! இப்போது கூட நீ மனம் வைத்தால் இதிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம்.' அவள் மனச்சாட்சி இறுதி முறையாக அவளை எச்சரிக்கை செய்ய முயன்றது. பாவம்—அதனுடைய வீணான அலட்டலை உஷா பொருட்படுத்தவில்லை.

வேடன் மானைப் பிடிக்க வலையை விரித்துத் தயாராகக் காத்துக் கொண்டிருந்தான். ஆனால் இந்த மானோ அவனுக்குச் சிரமம் ஏதும் தராமல், தானாகவே விரைந்து, வலியப் போய் வலைக்குள் விழுவதற்காகத் துடித்துக் கொண்டு அல்லவா இருந்தது!

உஷாவைச் சந்திக்க ஒரு வழியைக் கண்டு பிடிக்க ராஜீவ் தனது மூளையைப் புரட்டினான்.

''சாதாரணமா சனி, ஞாயிறு அன்று நீ எங்கே போவே?'' என்று கேட்டான்.

''சினிமாவுக்கு, இல்லேன்னா ஷாப்பிங், இல்லே, ஃப்ரெண்ட் வீட்டுக்கு.''

''மெட்ராஸ்லே உனக்கு ரொம்ப நெருங்கிய ஃப்ரெண்ட்ஸ் இருக்காங்களா?''

''ஓ, பூர்ணிமான்னு ஒருத்தி இருக்கா. அவளுடைய அப்பா அம்மாவுக்கு எங்க அம்மாவை நல்லாத் தெரியும். அடிக்கடி அவங்க வீட்டுக்குப் போவேன்.''

''சரி, இந்தப் பூர்ணிமாவைப் பார்க்கப் போவதாகச் சொல்லிவிட்டு நீ வந்துவிட முடியாதா?''

உஷா சற்றுத் தயங்கினாள். ''உம்... முடியும்... ஆனா... அதுக்கு பூர்ணிமாவோட ஒத்துழைப்புத் தேவைப்படும். அப்படின்னா, நான் அவகிட்ட உண்மையைச் சொல்லி ஆகணும். வேறே வழியே இல்லே'' என்றாள்.

''பூர்ணிமாவை நம்பலாமா? இதைப் பத்தி யார்கிட்டயாவது அவள் பேசினால்? எனக்குப் பரவாயில்லே. உனக்காகத்தான் பயப்படறேன்'' என்றான் ராஜீவ்.

''இல்லே, இல்லே. பூர்ணிமாவை நிச்சயம் நம்பலாம். ஒரு ரகசியத்தை அவள்கிட்ட ஒப்படைச்சு வெளியிடக்கூடாதுன்னு சொல்லி வச்சுட்டா, உயிரே போனாலும் அதைப் பத்திப் பேச மாட்டாள். ஆனால்....''

''ஆனால்....?''

''சாதாரணமா பூர்ணிமா எனக்காக எதையும் செய்யத் தயங்க மாட்டாள். அவ என் பெஸ்ட் ஃப்ரெண்ட். ஆனால், இந்த விஷயத்தை அவகிட்டச் சொன்னா, இதை எப்படி எடுத்துக்குவாளோ தெரியாது. அது மட்டுமில்லே. அவளுடைய அப்பா— அம்மாவுக்கு என்னைப் பத்தி துளி சந்தேகம் ஏற்பட்டாலும் உடனே எங்கம்மாவுக்குத் தகவல் கொடுத்துடுவாங்க. அதான் பயமா இருக்கு'' என்றாள் உஷா.

''உஷா, ப்ளீஸ்! எப்படியாவது, நான் உன்னைத் தனியாச் சந்திச்சே ஆகணும்!'' என்று ராஜீவ் மன்றாடிக் கேட்டான். அவனுடைய கரகரத்த குரலில் புதைந்து கிடந்த ஆசையின் வேகம் உஷாவை மெய் சிலிர்க்க வைத்தது. ஆழமான ஓர் ஏக்கம் அவளைத் தனது பிடியில் பற்றிக் கொள்ளவே, அவள் உடல் பலவீனம் அடைந்தது போல் மயக்கம் வருவது போல் ஓர் உணர்வு ஏற்பட்டது. அவள் கால்கள் தள்ளாடின. நிமிர்ந்து நிற்க முடியாமல் டெலிபோன் பூத் சுவரின் மீது சாய்ந்து அதன் ஆதரவை நாடினாள்.

மெல்லிய குரலில் ''எனக்கும் ... அப்படித்தான் இருக்கு.....!'' என்றாள். அவள் தொண்டையும் கரகரத்துப் போயிருந்தது.

''நாளைக்கு?'' என்று வற்புறுத்தினான் ராஜீவ்.

''பூர்ணிமாகிட்டே இன்னிக்குப் பேசறேன். அவள் எனக்கு உதவி செய்யச் சம்மதிச்சா, நான் மறுபடியும் உங்களுக்குப் போன் பண்றேன். அவ மறுத்துட்டா, என்னாலே ஒண்ணும் பண்ண முடியாது. உங்களை நான் சந்திக்கிறதுக்கு வேறே வழியே இல்லே'' என்றாள் உஷா.

''உஷா, ப்ளீஸ், இப்பவே உன் ஃப்ரெண்டைக் கேட்டுப் பாரு. எப்படியாவது அவளை கன்வின்ஸ் பண்ணு. நாளைக்காவது நான் உன்னைப் பார்க்கணும்!'' என்று கெஞ்சினான் ராஜீவ்.

''சரி, அவளோட பேசிட்டு, நான் மறுபடியும் ஃபோன் பண்றேன்.''

''எப்போ போன் பண்ணுவே?'' ராஜீவுடைய பழைய ஆசை நாயகிகள் இதைக் கேட்டிருக்க வேண்டுமே! இப்படி கெஞ்சுவது ராஜீவ்தானா என்று ஸ்தம்பித்துப் போயிருப்

# விநாயகரின் வாகனம்!



# வீட்டுக்குக் காவலன்!

**விநாயகப் பெருமானின் வாகனமாகிய மூஞ்சுறு பற்றிய புராணக் கதைகள் இருக்கட்டும் - விஞ்ஞானம் என்ன கண்டறிந்திருக்கிறது?**

மூஞ்சூறு மெல்லிய அடி பட்டாலும் சுருண்டு மடியும் தன்மையது. அதன் மூக்கு வீட்டு எலியின் மூக்கைவிடச் சற்று நீளமாய் இருக்கும். குட்டி போட்டுப் பாலூட்டும். சுறுசுறுப்பு மிக்க இப்பிராணி, மனிதனை விட 55 மடங்கு அதிகம் சுவாசிக்கிறது. இதன் இதயம் நிமிடத்துக்கு 800 முறை துடிக்கிறது.

இதன் கண்கள் சிறுத்திருப்பதால் முகர்ந்து பார்த்தே இரையைக் கண்டுபிடிக்கிறது. பகாசுரனைப் போல் அடங்காத பசியுடன் எப்போதும் இரை தின்று கொண்டிருக்கும் இது, பட்டினி கிடந்தால் ஆறு மணி நேரத்துக்குள் இறந்துவிடுகிறது. நாளொன்றுக்குத் தன் எடையை விட இரு மடங்கு உணவுண்ணும் மூஞ்சூறு பூச்சி புழுக்களை மட்டுமின்றி தன்னைவிட அளவில் ஒன்றரை மடங்கு பெரிய எலி, சுண்டெலிகளைக் கூட வேட்டையாடிக் கொன்று தின்கிறது. பயமென்பது என்னவென அறியாத சிறு மூஞ்சூறுவைக் கண்டால் எலி, சுண்டெலிகளுக்குச் சிம்மசொப்பனம் தான். அதைக் கண்டாலே பயந்து விரைந்தோடும் எலியை வேகமாக விரட்டிச் சென்று கடித்தவுடன் எலி மயங்கிவிடுகிறது. இதன் காரணம் மூஞ்சூறுவின் உமிழ் நீரில் உள்ள விஷம். இதற்கு நல்லபாம்பின் விஷம் போன்று நரம்புகளைத் தாக்கிச் செயலிழக்கச் செய்யும் திறன் உண்டு. ஒரு மூஞ்சூறுவின் உமிழ் நீர்ச் சுரப்பியிலுள்ள விஷம் 200 சுண்டெலிகளைக் கொல்லும் சக்தி மிக்கது; எனினும் மூஞ்சூறுவால் மனிதனுக்கு ஊறு விளைவிக்க இயலாது.

மூஞ்சூறு தனித்தே வாழும் இயல்புடையது. இரு மூஞ்சூறுகளை ஒரே கூட்டில் அடைத்தால் ஏதாவதொன்று சாகும்வரை சண்டையிட்டுக் கொண்டே இருக்கும். இரண்டே ஆண்டுகள் மட்டும் உயிர் வாழும் இந்தப் பிராணி ஆண்டொன்றுக்கு சுமார் 66 குட்டிகளை ஈன்றெடுக்கிறது.

பிறந்த குட்டிக்கு முடி இருக்காது. ஏழாம் நாளில்தான் முடி வளரும். அடுத்த ஏழு நாட்களில் குட்டி முழு வளர்ச்சி அடைகிறது.

பட்டுப் போன்ற முடியுடைய மூஞ்சூறு தன் உடலில் தூசு படியா திருக்கும் பொருட்டு அடிக்கடி நன்கு சிலிர்த்துக் கொள்ளும்.

உங்கள் வீட்டில் மூஞ்சூறுவைக் கண்டால் அடித்துக் கொல்லாதீர்கள். உங்கள் வீட்டிலுள்ள பூச்சிகளைக் கட்டுப்படுத்தி வீட்டைத் தூய்மையாக வைத்துக் கொள்ள அது உதவும். எலியைப் போல் உங்கள் வீட்டுத் தின்பண்டங்களை அது தின்னாது. மாறாக, அந்த எலிகளை விரட்டும் 'காவலர்களாக' அவை விளங்கும்!

- செ. பாலசுந்தரம்

---

பார்கள். 'எப்போக் கூப்பிடுவீங்க? எப்போ ஃபோன் பண்ணுவீங்க? உங்களை எப்போ பார்க்கிறது?' என்று வழக்கமாக அவர்கள் அல்லவா அவனைக் கெஞ்சிக் கொண்டு கிடப்பார்கள்? "நீங்க எப்போ வீட்டிலே இருப்பீங்க?" என்று திருப்பிக் கேட்டாள் உஷா.

"நீ எத்தனை மணிக்கு ஃபோன் பண்ணுவேன்னு சொல்லு. அந்த டயத்துக்கு கரெக்டா ஃபோன் பக்கத்திலே ஆஜர் ஆயிடுவேன்!" என்றான் ராஜீவ்.

உஷா சிரித்தாள். "நிஜமாவா?"

"நிஜமா."

"சாயங்காலம் ஆறு மணிக்கு ஃபோன் பண்ணா வீட்டிலே இருப்பீங்களா?"

"நான்தான் ஏற்கனவே சொன்னேனே உஷா. நான் எங்கே இருந்தாலும் ஓடிவந்து மணி ஆறு அடிக்கும்போது 'டாண்'ணு இங்கே வந்து நிற்பேன்."

உஷா மீண்டும் கலகலவென்று சிரித்தாள். இதெல்லாம் வெறும் முகஸ்துதியோ, இல்லை உண்மையோ - எதுவாக இருந்தாலும் என்ன? உஷாவைப் பொறுத்த வரையில் தேனாகத் தித்திக்கும் இந்த இனிய பேச்சு, சர்க்கரைப் பாகு போல் இனிக்கும் இந்தக் காதல் வார்த்தைகள் எல்லாமே அவளுக்குப் புதிய, ரம்மியமான அனுபவங்கள்தானே?

"சரி. ஆறு மணிக்கு ஃபோன் பண்றேன்."

"அதுக்காவே காத்துக்கிட்டு இருப்பேன்!"

"பை!"

"பை உஷா! மை ஸ்வீட் உஷா!"

"மை ஸ்வீட் உஷா!" 'மை ஸ்வீட் உஷா!' போன் தொடர்பைத் துண்டித்த பிறகும் இந்த வார்த்தைகள் மீண்டும் மீண்டும் அவள் காதில் இன்ப நாதமாய் ஒலித்துக் கொண்டே இருந்தன.

எப்படியாவது பூர்ணிமாவைத் தனக்கு உதவி செய்யுமாறு ஒப்ப வைக்க வேண்டும்! அவசரமாகப் பூர்ணிமாவுடைய வீட்டு நம்பரை உஷா சுழற்ற ஆரம்பித்தாள்.

(தொடரும்)

விதைப்பதோ ஒரே ரூபாய்
கிடைப்பதோ ஒரு

# பணத்தோட்டம்!



## தமிழ்நாடு பரிசுச் சீட்டு

வாங்கிடுவீர்!

ஒவ்வொரு வரிசைக்கும் 2 முதல் பரிசுகள்

**ரூ. 50,000** வீதம்

சீட்டின் விலை ரூ. 1/- மட்டுமே

குலுக்கல் நாள்: 20.8.1980

இயக்குநர், தமிழ்நாடு பரிசுச் சீட்டுத் திட்டம்
அரசினர் தோட்டம், சென்னை-600 002



# ஒரு வகுப்பறையின் வாய் அடைக்கப்படுகிறது

- தமிழ்ப்பித்தன் -



**எம்.** ஏ. தமிழ் இலக்கிய வகுப்பில் அன்று தொல்காப்பியம் அகத்திணை குறித்துப் பேராசிரியர் விளக்கிக் கொண்டிருந்தார். வழக்கமாக அனைவருக்கும் முன்னதாகவே வகுப்புக்கு வந்துவிடும் சாரங்கனும் வத்சலாவும் அன்று வரவில்லை. அவர்கள் இருவரையும் காணவில்லை என்பதில் ஏனைய மாணவர்களுக்கு மிகுந்த ஆதங்கம். பேராசிரியர் கூட வகுப்பில் சாரங்கனும் வத்சலாவும் அமரும் இடங்களை அடிக்கடி பார்த்துக்கொண்டே இருந்தார்.

ஏற்கனவே அவர்கள் இருவரும் அடிக்கடி சந்தித்துப் பேசுவதைக் கண்ட வகுப்பறை 'அவர்' உரைத்துக் கொண்டிருந்தது. அன்று இருவரும் வகுப்புக்கு வரவில்லை என்றவுடன் மாணவர்கள் அனைவரும் பல்வகையான கற்பனையில் மூழ்கினர்.

இரண்டாவது ஹவருக்காவது சாரங்கனும் வத்சலாவும் வந்துவிடுவார்கள் என்று மாணவர்கள் பெரிதும் எதிர்பார்த்தார்கள். அன்று அவர்கள் இருவரும் வராமலேயே வகுப்பு முடிவடைந்தது.

வத்சலா பி.எஸ்ஸி. பாட்னியில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றவள். எப்படியோ தமிழ் இலக்கியத்தில் ஆர்வம் கொண்டு தமிழ் எம்.ஏ. படிக்க முன்வந்தாள். சாரங்கனும் அது போலவே பி.காம். பாஸ் செய்துவிட்டு எம். ஏ. தமிழ் இலக்கிய வகுப்பில் சேர்ந்தான். இவர்களுக்குள்ளே இந்தப் பொருத்தம் மட்டுமல்ல — வேறொரு பொருத்தமும் இருந்தது. இருவரும் திருவல்லிக்கேணி செல்லப் பிள்ளையார் கோவில் தெருவிலிருந்துதான் கல்லூரிக்கு வந்தனர்; சாரங்கனிடம் ஸ்கூட்டர் இருந்ததால் அதன் பின்பக்க சீட்டு காலியாக இருக்க வேண்டாம் என்ற நல்லுணர்வுடன் வத்சலாவை ஏற்றிக்கொண்டு செல்வான். எப்போதாவது சாரங்கன் கல்லூரிக்கு 'கட்' அடித்துவிட்டால் பாவம் அன்று வத்சலா பாடு திண்டாட்டம்தான். பஸ்ஸைப் பிடித்துக் கல்லூரிக்குச் செல்வதற்குள் போதும் போதும் என்றாகிவிடும். அதுமட்டுமல்ல, அவள் கல்லூரிக்குத் தனியாகச் சென்றுவிட்டால் மற்ற மாணவர்களுக்குப் பேட்டி அளிப்பது பெரும் பாடாகிவிடும்.

"எங்கே ஒங்க ப்ரண்ட்? அவரு இன்னிக்கு வரலியா?" — ஒரு மாணவர் கேட்பார் நடைமுறை வார்த்தைகளில்.

"பொருள்வயிற்பிரிவா? தூதுப் பிரிவா?" இப்படி ஒரு மாணவர் கேட்பார் அகப் பொருள் முறையில்.

அந்தக் கேள்விக் கணைகளைச் சந்திக்கும் சமயத்தில் வத்சலாவுக்குத் தர்ம சங்கடமாக இருக்கும். ஏதோ சொல்லிச் சமாளிப்பாள். அதன் பிறகு சாரங்கனைச் சந்திக்கும்போது "மிஸ்டர் சாரங்கன்! தயவுசெய்து எக்காரணம் கொண்டும் கல்லூரிக்கு வராமல் இருக்க வேண்டாம்! அதனால் அனைவரும் உங்களைப் பற்றி என்னிடம் விசாரித்து என்னைச் சித்ரவதை செய்கிறார்கள்" என்று உரிமையுடனும் உருக்கத்துடனும் வேண்டிக் கொள்வாள். வத்சலாவின் வேண்டுகோளுக்கு இணங்க, தன்னால் இயன்ற அளவுக்கு 'கட்' அடிக்காமல் கல்லூரிக்கு வந்துவிடுவான் சாரங்கன். அது ஏனைய மாணவர்களுக்குத் தெரியும். இரண்டு பேரும் ஒரே நாளில் கல்லூரிக்கு மட்டம் போட்டது மாணவர்களின் மத்தியில் அதிசயத்தையும் ஆச்சரியத்தையும் விளைச்சல் செய்யத் தவறவில்லை. பஸ் ஸ்டாண்டில் பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருந்தபோதும் அதே பேச்சுத்தான் மாணவர்களிடையே நிகழ்ந்தது.

**ம**றுநாள் வழக்கம்போல் சாரங்கனும் வத்சலாவும் ஸ்கூட்டரில் வந்து இறங்கினார்கள். அவர்கள் இருவரையும் பார்த்ததும் சில மாணவர்கள் ஜாடை பேச ஆரம்பித்தார்கள்.

"மிஸ்டர் பிரகாஷ்! இனாக்கு கட் அடிச்சுட்டு நேத்து எங்கே போயிருந்தீங்க! சகா நிவேட்டருக்கா, இல்லே தேன் பாரடைஸுக்கா?" — சோமு கேட்டான்.

"மிஸ்டர் சோமு! தேனியே அவருக்கு பாரடைஸ் மாதிரி! அதை விட்டுட்டு தேன் பாரடைஸுக்குப் போகணுமா?" — சுந்தர் கேட்டான்.

தங்கள் இருவரையும் குறித்துத்தான் இப்படி வம்புப் பேச்சுப் பேசுகிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டனர் சாரங்கனும், வத்சலாவும். அவர்களுக்கு அங்கேயே 'நோஸ் கட்' கொடுக்கத் துடித்தான் சாரங்கன். வத்சலா தடுத்து நிறுத்தி, "வகுப்பு முடிந்ததும் பார்த்துக் கொள்வோம்" என்று சொல்லிவிட்டாள்.

தொல்காப்பியம் சொல்லதிகார வகுப்பு. மாணவர்கள் பேராசிரியரின் விரிவுரை கேட்டு தெளிந்தனர்; சிலர் கருண்டனர்; என்ன செய்வது, உருளுக்குள் தலையை விட்டு விட்டோம், உலக்கைக்குப் பயந்தால் ஆகாது என்று எண்ணியவாறு சகித்துக் கொண்டனர் பல மாணவர்கள்.

அன்றைய வகுப்பு முடிவடைந்தது. தங்களைக் குறித்து ஜாடை பேசிய சோமுவையும் சுந்தரையும் அழைத்தான் சாரங்கன். அவர்கள் தயங்கித் தயங்கி வந்தார்கள்.

"மிஸ்டர் சோமு! மிஸ்டர் சுந்தர்! நேத்து நாங்க ரெண்டு பேரும் சகாவுக்கும் போகலே, தேன் பாரடைஸுக்கும் போகலே! கல்யாண இன்விடேஷன் வாங்குவதற்காக இண்டி மேட் பிரிண்டர்ஸுக்குப் போயிருந்தோம். இந்தாங்க இன்விடேஷன். கண்டிப்பா திருமணத்துக்கு வந்திருங்க" என்று சொல்லியவாறு திருமண அழைப்பிதழை அவர்கள்

இருவருக்கும் கொடுத்துவிட்டு, வகுப்பில் உள்ள அனைத்து மாணவர்களுக்கும் விநியோகம் செய்தனர்.

''களவியல் முற்றுப்பெற்றுக் கற்பியல் தொடங்குகிறதோ— அதாவது காதல் முற்றித்திருமண அளவுக்கு முன்னேறிவிட்டதோ'' என்று எண்ணியவாறு அழைப்பிதழைப் பெற்றுக் கொண்ட மாணவர்கள் அனைவரும் உறையைப் பிரித்துப் பார்த்தவுடன் 'ஆ' என்று வாயைப் பிளந்து நின்றார்கள். காரணம் அவர்கள் நினைத்தபடி திருமணம் சாரங்கனுக்கும் வத்சலாவுக்கும் அல்ல! சாரங்கனின் மகனுக்கும் வத்சலாவின் மகளுக்கும் தான்! சாரங்கனும் வத்சலாவும் மாலை நேரக் கல்லூரியில் பயின்று வரும் 45 வயது மாணவர்கள். தாங்கள் இருவரும் சம்பந்தம் செய்துகொள்ளும் முயற்சியின் காரணமாக அவர்கள் அடிக்கடி சந்தித்துப் பேசுவதை ஏனைய மாணவர்கள் தவறாக எண்ணிக் கொண்டால், அதற்கு சாரங்கனும் வத்சலாவும் எப்படிப் பொறுப்பாளர்களாக முடியும்?



# நீலச் சிற்றுடைக்கு நேர்!

மாமன்னர்களும் வணங்கிப் போற்றும் புலமை மிக்க பெண் கவியான ஒளவையார் ஒருநாள் மாலை காட்டு வழியே சென்று கொண்டிருந்தார். அந்தி வானம் திடீரென்று இருண்டது; பெருமழை கொட்டத் தொடங்கியது. அம் மழையில் தெப்பமாக நனைந்து விட்ட ஒளவையார், மழைக்கு ஒதுங்க எண்ணி, சிறிது தூரத்தில் தெரிந்த ஒரு ஓலைக் குடிசைக்கு விரைந்து சென்று கதவைத் தட்டினார். கதவு திறந்தது. இரு அழகிய இளம் பெண்கள் தோன்றி, மழையில் நனைந்து, குளிரால் வருந்திக் கொண்டிருந்த ஒளவையாரைக் கண்டு வணங்கி, குடிசையினுள் அழைத்துச் சென்றனர்.

தங்களுடைய நீலச் சிற்றுடை ஒன்றை ஒளவையாரிடம் கொடுத்து, ஈரத் துணிகளைக் களைந்து, அதனை உடுத்திக் கொள்ளச் செய்து உபசரித்தனர். அவர்களுடைய அன்பான உபசரிப்பால் மனம் நெகிழ்ந்த ஒளவைப் பிராட்டி, அவர்கள் இருவரும் தன் அரிய நண்பரான வள்ளல் பாரியின் மக்களான அங்கவை, சங்கவை என்பதை அறிந்து, அவர்களது நிலை கண்டு வருந்தினர்.

அவர்களுடைய நாட்டை மீட்டுத் தந்து, அப் பெண்களை அவர்கள் விரும்பியவர்க்கே மணம் முடித்துத் தர சபதம் பூண்டு, அவ்வாறே பின்னர் நடத்தியும் காட்டினர்.

அன்பின் மிகுதியால் பாரியின் மக்கள் செய்த உபசரிப்பையும், தக்க சமயத்தில் உதவிய பண்பையும் கண்டு மகிழ்ந்து, வியந்த ஒளவையார் அச்சிறு உதவியையும் பெரிதும் பாராட்டிக் கூறினர்:

"பாரி பரித்த பறியும் பழையனூர்க்
காரியன் நீந்த களைக் கொட்டும்—சேரமான்
வாராயோ வென்றழைத்த வார்த்தையும்
இம்மூன்றும் நீலச் சிற்றுடைக்கு நேர்"

—தனிப் பாடல்

நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம் காலம் காலமாக வந்த இந்தியப் பண்பாட்டைப் பின்பற்றுகிறது. நேர்மையே இந்த ஸ்தாபனத்தின் அடிப்படை. "செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் செயல்பட்டு மக்களுக்குச் சேவை புரிவதையே தலையாய கடமையாகக் கொண்டுள்ளது நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம்.



**லக்ஷ்மி மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**

## பூர்வ கதை

பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டுகளில் அரபிக் கடல் பிராந்தியம் வெள்ளைக்காரர்களின் கொள்ளைக் களமாயிருந்தது. சரித்திரப் பிரசித்தி பெற்ற பிரிட்டிஷ் கொள்ளைக் காரர்களான டெய்லர், இங்க்லண்ட், லீவர், பிரெஞ்சுக் கொள்ளைக்காரனான லிவாஸியர் இவர்கள் அரபிக் கடலில் இஷ்டப்படி சஞ்சரிக்கலாயினர். அவர்களை அடக்க ஏற்பட்ட மகாராஷ்டிர ஸார்கேல் கனோஜி ஆங்கரேயும் பிரிட்டிஷ்காரர்களால் கொள்ளைக்காரர் என அழைக்கப்பட்டார். இந்த சுதேசக்கடல் பாதுகாப்புப் போரில் மால்வானிய கொள்ளைக்காரர்களும் கலந்து கொண்டார்கள். மால்வான் கவர்னரான சங்கர் பந்தும் அவர்களில் ஒருவர். சங்கர் பந்த் சமயத்துக்குத் தகுந்தபடி கவர்னராகவும் கொள்ளைக்காரராகவும் மாறி மாறிப் பணி புரிந்து வந்தார். அவர் மகள் ரத்னாவும் கடற் கொள்ளையில் பிரசித்தி பெற்று கடல் ராணி என்று புகழுடன் உலாவி வந்தாள். சிவாஜி மகாராஜா கட்டிய கடற் கோட்டையான சிந்து துர்க்கத்தின் தலைவியாக பிரிட்டிஷாருக்குப் பெரும் தலைவலியாக இருந்த கடல் ராணியைப் பிடித்துச் செல்ல பிரிட்டிஷார் முற்பட்டார்கள்.

இந்த முயற்சியில் ஈடுபட்ட இரண்டு பிரிட்டிஷ் மாலுமிகள் காப்டன் ஸ்டாண்டன் லெப்டினண்ட் ஸ்மித் இருவரும் கடல் ராணி நீந்திக் கரை சேர்ந்த ஒரு காலையில் அவளை மடக்கவே, அங்கு தோன்றிய மகாராஷ்டிர வீரனான இந்திரஜித் அனந்த் அவளைக் காப்பாற்றுகிறான். இரு வெள்ளையரையும் அவன் சிறைப் பிடித்து கடல் ராணியுடன் படகில் செல்லும் போது காஸண்ட்ரா என்னும் பெரிய கப்பலின் காப்டனும் பெரிய கொள்ளைக் காரனுமான இங்லண்ட் என்பவனால் மடக்கப்பட்டாலும் அவனையும் தந்திரமாக அழைத்து வந்து லீவர் என்ற ஒற்றைக்கால் கொள்ளைக் காரனுக்கு அறிமுகப் படுத்துகிறான் அனந்த்.

இடையே காதலில் சிக்குண்ட அனந்தும் ராணியும் காஸண்ட்ராவின் இன்னொரு காப்டனான டெய்லரால் சிறை செய்யப் படவே இங்லண்ட், டெய்லர், லீவர், கவர்னர் சங்கர் பந்த், அனந்த், ராணி எல்லோருமே காஸண்ட்ராவை அடைகிறார்கள். அங்கு கனோஜி ஆங்கரேயின் புதல்வன் துலாஜி ஆங்கரே, அனந்தைச் சந்திக்கிறான். அனந்த், துலாஜி, ராணி இவர்களால் பெரும் கொள்ளை கிடைக்கும் என்ற நம்பிக்கையில் டெய்லரும் இங்லண்டும் அவர்களை மீண்டும் சிந்து துர்க்கம் சேர்க்கின்றனர்.

சிந்து துர்க்கத்தில் அனந்த், ராணி காதல் முற்றுகிறது. காஸண்ட்ராவை டெய்லரிடமும் இங்லண்டிடமும் முன்னர் பறிகொடுத்த பிரிட்டிஷ் காப்டன் மாக்ரே, மீண்டும் தனது கப்பலைப் பெறவும் இங்க்லண்டையும் டெய்லரையும் அழிக்கவும் பிரிட்டிஷ் கவர்னர் பூனின் அனுமதி பெற்றுப் போர்க்கப்பல்களுடன் வரப்போகிறானென்ற செய்தி கிடைக்கவே, அதைப் பற்றி அறிந்து வர அனந்த் ரகசியமாக சிந்து துர்க்கத்திலிருந்து புறப்பட்டு ஸஹ்யாத்ரி மலைத் தொடரிலிருந்த ஒரு குகைக்கு வருகிறான். அங்கு அவனுக்காகக் காத்திருந்த சாரு என்ற அழகியும் அங்கு வந்த பேஷ்வா பாஜிராவும் கனோஜியுடன் ஆலோசனை செய்கின்றனர். அதற்காக விஜய துர்க்கம் வந்த மாக்ரே காஸண்ட்ராவைப் பிடிக்க ஓர் ஒப்பந்தமும் செய்து கொள்கிறான்.

அனந்தின் திடீர் மறைவால் ஏற்பட்ட சந்தேகத்தால் அவன் திரும்பியதும் இங்லண்டும் டெய்லரும் அவன் மீது ஒரு கண்ணை வைத்திருக்கிறார்கள். இருப்பினும் சிந்துதுர்க்கத்துக்கும் பாண்டவர் கோட்டைக்குமிருந்த சுரங்கப் பாதையின் ரகசியம் அவர்களுக்குத் தெரியாததால் குழப்பங்கள் ஏற்படுகின்றன.

# கடல் ராணி

### சாண்டில்யன்



ஒரு நாளிரவு கடல் ராணி சுரங்க வழியாக பாண்டவ கட் சென்ற சமயம் சுரங்கத்தின் மர்மத்தை அனந்த் சங்கர் பந்துக்குக் காட்ட, அதை வில்வர் கதவிடுக்கு மூலம் பார்த்து விடுகிறான். படகொன்றை எடுத்துக் கொண்டு பாண்டவகட்டுக்கு விரைகின்றான்.

அங்குள்ள தென்னஞ் சோலையில் ராணி சோக கீதமொன்றை இசைத்துக் கொண்டிருக்கிறாள். அதைக் கேட்ட வில்வர் தனது கிளீப்புடன் அதில் லயித்து உட்கார்ந்து விடுகிறான். சோலையின் ஒரு திசையிலிருந்து வந்த இரு வித்தி வீரர்களும், இன்னொரு திசையிலிருந்து வந்த அனந்தும் சாருவும் இருந்த இடத்தில் அசை வற்று நிற்கிறார்கள். இசை இன்பத்தால் ஈர்க்கப்பட்டு.

அதே சமயத்தில் வித்தி அதாமத் என்பவனும் தனிப் படகில் வந்து, கடல் ராணி லாத் வித்தியின் கப்பல்களில் இரண்டைக் கொளுத்தி அவற்றிலிருந்த பொருளைக் கொள்ளையடித்து விட்டதாக வில்வரிடம் கூறுகிறான். அந்தக் கொள்ளையை அடிக்க ராணியின் தலைவன் ஒருவன் வந்திருந்தானென்றும் தங்கள் கப்பல் எரிந்தபோது அவன் நகைத்துக் கொண்டிருந் தானென்றும் புகார் செய்கிறான். அவன் யாரென் பதை ஊகித்த வில்வர் அதாமதை ராணியிருந்த இடத்துக்கு அழைத்து வருகிறான். அவன் கதை யைக் கேட்டதும் மூன்றாவது சக்தி ஏதோ துர்க்க நாட கத்தில் புகுந்திருப்பதை உணர்ந்த அனந்த் கப்பல் களைக் கொளுத்தியவன் பெயரை உச்சரிக்கிறான்.

## அத்தியாயம் 53

## லா பூஷே

“ஆலிவர் லா பூஷே!” என்ற அனந்தின் குரல் மிக நிதானமாகவும் அதே சமயத்தில் மிகவும் கடுமையுட னும் வந்ததும், அதுவரை ராணியின் சோக கீதத்தால் பரிமளித்த தென்னஞ் சோலையில் பெருத்த அபஸ்வரமொன்று குறுக்கிட்டு விட்டது போன்ற பிரமையும் எரிச்சலும் அனைவருக்கும் ஏற்பட்டது.

“ஆலிவர் லிவாஸியர் அவனது இன்னொரு பெயர்” என்று வில்வர் எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளியதன்றி, “உனக்கு எப்படித் தெரியும் அவன் கடலில் நடமாடுவது?” என்று கேட்டதும், பதிலுக்கு ராணியிடமிருந்த முத்திரைக் கடிதத்தை அனந்த் எடுத்துக்கொடுத்ததும், எல்லோருக்கும் வியப்பாயிருந்ததென்றாலும் அதைப் படித்த வில்வ



ரின் முகத்தில் சொல்லவொண்ணுச் சினமே படர்ந்தது.

“கோபித்துப் பயனில்லை. இரைந்து படி. எல்லோரும் கேட்கட்டும்” என்று அனந்த் மிகுந்த அமைதியுடன் கூறினன்.

அனந்தை ஒரு முறை முறைத்துப் பார்த்த வில்வர் பிறகு படிக்கலானன். “ஸார்கேல் அவர்களுக்குத் தலை வணங்கி எழுதுவது. இப்பொழுது இன்னெரு பயங்கரக் கொள்ளைக்காரன் மகாராஷ்டிரக் கடலில் உலாவுகிறன். அவன் பெயர் ஆலிவர் லா பூஷே. ஆலிவர் லிவாஸியர் என்றும் பிரசித்தமானவன். கடற் போரில் நிகரற்றவன். பிரெஞ்சுக்காரன். அவனைத் தாங்கள் எப்படியாவது மடக்க வேண்டும். காரணம் தாங்கள் அறிவீர்கள் — அனந்த்.”

அந்த ஓலையைப் படித்து முடித்ததும், அனந்தை நோக்கி வில்வர் கேட்டான்: “லிவாஸியர் அரபிக் கடலில் உலாவுவது உனக்கு எத்தனை நாளாகத் தெரியும்?” என்று.

“சில நாட்களாகத் தெரியும்” என்ருன் அனந்த்.

“தெரிந்தும் எங்களிடம் ஏன் சொல்லவில்லை?” — வில்வரின் இந்தக் கேள்வியில் உஷ்ணம் பெரிதும் ஒலித்தது.

இந்த சமயத்தில் உரையாடலில் உட்புகுந்தான் வீத்தி அஹமத். “இவன் அவனது நண்பன். எங்களைச் சூறையாட அனுப்பியிருக்கிறன்” என்று தெரிவித்தான், தனது உதடுகளையும் பெரிய மீசையையும் பயங்கரமாக அசைத்து.

“நான்ஸென்ஸ். உளருதே” என்று அஹமதைக் கடிந்து கொண்ட வில்வர் “நான் படித்த கடிதத்தைக் கேட்டாய் அல்லவா?” என்று வினவினன். “கடிதத்தில் லா பூஷேயை மடக்கும்படி சொல்லியிருக்கிறன் அனந்த்” என்று சுட்டிக் காட்டவும் செய்தான் வில்வர் எரிச்சலும் சலிப்பும் இணைந்த குரலில்.

அஹமதின் பெருவிழிகள் வில்வரை நோக்கி உருண்டன. “இது போலிக் கடிதமாயிருக்கலாம். உன் கண்ணிலும் அந்த இரு முட்டாள்கள், டெய்லர், இங்லண்ட் கண்களிலும் மண்ணைத் தூவச் செய்யும் தந்திரமாயிருக்கலாம். இல்லாவிட்டால் கடல் ராணியின் கப்பல் எப்படி லா பூஷேயிடம் கிடைத்தது? சமீபத்தில் அரபிக் கடலில் கப்பல் போர் எதுவும் நடைபெறவில்லை ராணியின் கப்பலைப்பிரெஞ்சுக்காரன் பிடிக்க” என்று கரகரத்த குரலில் சொன்னன் அஹமத்.

அவன் விளக்கத்திலோ கேள்வியிலோ எந்த வித முரண்பாடும் இல்லாததைக் கவனித்த வில்வர் அனந்தை நோக்கினன் சந்தேகக் கண்களுடன். “இவன் கேட்பதில் நியாயமிருக்கிறது” என்றும் கூறினன் சந்தேகத்தின் சாயல் குரலில் தெரிய.

அனந்தின் இதழ்களில் இகழ்ச்சிப் புன்னகை படர்ந்தது. “வில்வர்! உன் கூரிய அறிவும் வர வர மழுங்கி வருகிறது. கடல் ராணி தனது கப்பலின் பெயரைப் பகிரங்கமாக எல்லோரும் பார்க்க எழுதி வைத்துப் பாய்மரச் சீலையிலும் அதைத் தீட்டி விளம்பரப்படுத்தி லா பூஷேயிடம் கொடுத்து ‘நீ போய் என் பெயரால் எதிரி மோஹராக்களைத் திருடி வா’ என்று சொல்வாளென்று எதிர்பார்க்கிறயா? ராணியைப் பிடிக்க சதா முயன்று கொண்டிருக்கும் பிரிட்டிஷ், போர்ச்சுகீஸ், டச்சுக்காரர்கள் அவள் கப்பலின் நடமாட்டத்தைச் சுதந்திரமாக அரபிக் கடலில் விட்டுத் தங்கள் பொருள்களை இழக்க ஆசைப்படுவார்களென்று நினைக்கிறயா? எப்படியாவது ராணியைத் தீர்த்துக் கட்ட இரண்டு பிரிட்டிஷ்காரர்கள் லெப்டினண்ட் ஸ்மித்தும் காப்டன் ஸ்டாண்டனும் இங்கு வந்தது உனக்குத் தெரியாதா?” என்று வெகு வேகமாகக் கேள்விகளை உணர்ச்சியற்ற வறண்ட குரலில் தொடுத்தான் அனந்த். இதைச் சொல்லி முடித்தபோது அவன் இதழ்களில் ஆரம்பத்தில் விரிந்திருந்த புன்முறுவல் மறைந்துவிட்டது.

அனந்தின் விளக்கத்தில் உண்மை பூராவாகப் புதைந்து கிடப்பதைக் கண்ட வில்வர் அஹமதை நோக்கித் திரும்பி “அனந்த் சொன்னதைக் கேட்டாயல்லவா?” என்ருன்.

“கேட்டேன். இன்னும் எனக்குத் திருப்தி இல்லை” என்ருன் அஹமத்.

“உன்னைத் திருப்திப்படுத்த என்ன செய்ய வேண்டும்?” என்று எரிந்து விழுந்தான் வில்வர்.

அஹமத் தனது மூளை மிகக் கட்டை என்பதை நிரூபித்தான். “ராணியை என்னிடம் ஒப்படைக்க வேண்டும்” என்ருன் திட்டமாக.

“ஒப்படைத்தால்?” சர்வசகஜமாக எழுந்தது அனந்தின் கேள்வி.

“எங்கள் தலைவர் ஸாத் வீத்தியிடம் ஒப்படைப்பேன்” என்ருன் அஹமத்.

“அவர் ராணியை அஞ்சன்வேல் கோட்டைப் பாறையிலிருந்து பாதாளத்தில் தள்ளிக் கழுகுக்கு இரையாக்குவார்” என்ருன் அனந்த் நிதானமாக.

அஹமதின் கண்களில் வியப்பு பெரிதும் விரிந்தது. “உனக்குச் சோதிடம் தெரியுமா?” என்று வினவினன் அஹமத் வியப்பு குரலிலும் விரிய.

“தெரியாது.”

“அப்படியானல் அஞ்சன்வேல் தண்டனை முறை எப்படித் தெரியும் உனக்கு?”

“சோதிடம் தெரியாதே தவிர சரித்திரம் தெரியும்.”

---

டெய்லர்: “அதோ போகிருரே ராமசாமி... அவர் இப்ப லஞ்சம் வாங்கறதை பாதியாகக் குறைச்சுக்கிட்டார்!”

அவன்: “எப்படித் தெரியும் உனக்கு..?”

டெய்லர்: “வழக்கமாக என்னிடம் புது சர்ட் தைக்கக் கொடுக்கும் போது இரண்டு பாக்கெட் வைக்கச் சொல்லுவார்... இன்று ஒரு பாக்கெட்டே போதும்னு சொல்லிட்டுப் போருரே..!”

—உ. ராஜாஜி



''என்ன சரித்திரம்?''

''பூர்வ கதை.''

''என்ன கதை அது?''

*.''இதயசந்திரன் கதை. அவனை அப்படித்தான் தீர்த்துவிடப் பார்த்தார் ஸாத் ஸித்தி. ஆனால் அந்தத் தமிழன் ஸாத் ஸித்தியின் கண்களிலும் மண்ணைத் தூவினான். உதவிக்கு கனோஜியின் மகள் மஞ்சுவும் இருந்தாள்.''

புரிந்துகொண்டதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் ஸில்வர். அஹமதின் முகம் மிகவும் குழம்பிக் கிடந்தது. ''என் மூளை குழம்பிக் கிடக்கிறது'' என்று வெளிப்படையாகவே சொன்னான்.

ஸில்வர் கட கடவென நகைத்தான். ''எதற்கு நகைக்கிறாய்?'' என்று தனது பெரு விழிகளை உருட்டினான் ஸித்தி அஹமத் ஸில்வரை நோக்கி.

ஸில்வர் தனது நகைச் சுவையைக் காட்டினான். ''உனக்கு மூளை இருக்கிறது என்று அறிவித்ததைப் பற்றி'' என்றான் ஸில்வர் மீண்டும் நகைத்து.

''அப்படி அறிவிக்கவில்லை. மூளை குழம்பியிருக்கிறது என்றுதான் சொன்னேன்'' என்று திருத்திய அஹமதின் பேச்சில் அபாயச் சாயை ஒலித்தது.

ஸில்வர் அஹமதின் குரலிலிருந்த அபாயத்தை சிறிதும் லட்சியம்செய்யவில்லை.''மூளை இருந்தால்தான் குழம்பும். குழம்பியதாக அறிவித்ததால் இருப்பதாக அறிவித்த மாதிரிதான்'' என்று சொன்ன ஸில்வர், ''இனி நீ வந்த காரியத்தைக் கவனிக்கலாம்'' என்றும் கூறினான்.

ஸித்தி அஹமதின் இதழ்களில் புன்சிரிப்பு பயங்கரமாக விரிந்தது. அவன் நெற்றி சிறிது சுருங்கியது ஏதோ சிந்திப்பதற்கு அறிகுறியாக. பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனைப் போல் இருமுறை பெரிதாகக் கனைத்தான். அதை அடுத்துத் தடதடவெனப் பலர் சோலைக்கு அப்பாலிருந்து ஓடிவரும் சத்தம் கேட்டது. இரண்டே விநாடிகளில் நெட்டையான கறுத்த அபிஸீனியர்கள் பதின்மர், ராணி, அனந்த், சாரு, ஸில்வர் ஆகிய நால்வரையுமே வளைத்துக்கொண்டார்கள். ஒவ்வொருவர் கையிலும் நீண்ட துப்பாக்கிகள் இருந்தன. அந்தத் துப்பாக்கிகள் அனைத்தும் சிறைப்பட்டவர்களை நோக்கி விபரீதமாக வாய்களைப் பிளந்தன. ''ஸித்தி அஹமத் அத்தனை முட்டாளல்ல என்பதைப் புரிந்து கொண்டிருப்பீர்கள் இப்பொழுது'' என்ற அஹமத், ''இங்கு வர எங்கள் தலைவர் ஸாத் ஸித்தி ஆணையிட்டதும் இவர்களை முன்பே இங்கு அனுப்பிவிட்டேன். இவர்கள் சாதாரணப் பயணிகளைப் போல் மாலுமிகளின் விடுதிகளில் தங்கியிருந்தார்கள். நான் வரும் நாள், நேரம் இத்தனையையும் முன்னதாக அறிவித்திருந்தேன். என்னைச் சந்திப்பது எப்பொழுது என்றும் சொல்லி யிருந்தேன். ராணியை நாங்கள் சமயம் பார்த்துக் கடத்திச் செல்லத் தீர்மானித்திருந்தோம். மேற்கொண்டு செய்வதை ஆலோசிக்கவே இங்கு அவர்களை வரச்சொல்லியிருந்தேன். ஆனால் ராணி



சினிமா டைரக்டரின் பையன்: ''இந்த உலகத்தைப் புரிஞ்சுக்கவே முடியலேடா''

மற்றவன்: ''ஏன்?''

சி. டை. பையன்: ''அப்பா காப்பி அடிச்சு படமெடுத்தால் யாரும் ஒண்ணும் சொல்வதில்லே. நான் பரீட்சையில் காப்பி அடிச்சால் மட்டும் புடிச்சு அடிக்கறாங்க'' -எஸ். சந்திரசேகர்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

இங்கு வந்தாள் எங்களுக்கு முன்பாக. அவள் அப்படி வந்ததும் தவறு. வந்து சும்மா இராமல் பாடியதும் அவள் செய்த தவறு. ஸில்வர்! யூ ராஸ்கல்! யூ திங் யூ ஆர் வெரி க்ளெவர். பட் அஹமத் ஈஸ் நோ பூல்'' என்றும் விளக்கினான்.

அப்பொழுது கேட்டான் அனந்த். ''எங்களைப் பிடித்து என்ன பயன்? உன்னைக் கொள்ளையடித்த விவாஜியரை எப்படிப் பிடிப்பதாக உத்தேசம்?'' என்று.

இதைக் கேட்ட அஹமத் சிறிது சிந்தனையில் ஆழ்ந்தான். பிறகு கேட்டான் அனந்தை நோக்கி, ''அதைச் செய்து முடிக்க உனக்கு ஏதாவது வழி தெரியுமா?'' என்று.

அனந்தின் கண்கள் அஹமதின் பெரு விழிகளை சார்ந்து நின்றன பல விநாடிகள். பிறகு அஹமதிடமிருந்து நீங்கி ராணியையும் சாருவையும் நோக்கின. அனந்த் நீண்ட நேரம் சிந்தனை வசப்பட்டான். முடிவில் அஹமதை நோக்கி ''ஒரு வழி இருக்கிறது'' என்றான்.

அஹமதின் கண்கள் பளிச்சிட்டன. ''என்ன வழி?'' என்ற அவன் கேள்வியில் ஆவல் இருந்தது.

அனந்த் உடனடியாகவோ நேரடியாகவோ பதில் சொல்லவில்லை. சுற்றி வளைத்துப் பேசத் தொடங்கி ''விவாஜியர் மிகவும் தந்திரசாலி. மிகச் சிறந்த உலக மாலுமிகளில் ஒருவன். நம் கையில் அகப்பட இஷ்டமில்லாவிட்டால் அகப்பட மாட்டான். எப்பொழுது தாக்குவான், எப்பொழுது பாய் விரித்து ஓடுவான் என்று சொல்ல முடியாது'' என்று விவாஜியரின் பிரதாபத்தை எடுத்துச் சொன்னான்.

''இதெல்லாம் எங்களுக்கே தெரியும்'' என்று இடைபுகுந்து பேசினான் ஸில்வர்.

---

* இந்த விவரங்களை ''ஜலதீபம்'' என்ற நூலில் படிக்கலாம்.



லக்ஷ்மியின் முழு உருவத்தையும் சரியான படி ஒட்டி அனுப்பியவர் மூவர் மட்டுமே.

(1) எம். பானு, சிவகாமு கிளினிக்,
2309, வடக்கு ராஜ வீதி,
புதுக்கோட்டை.

(2) ஆர். ரமணி,
C/o. பா. ஏ. துரைராஜ்,
87, சுப்பராய செட்டி தெரு,
கடலூர் 607002.

(3) ஸ்ரீமதி கீதா எஸ். நாயர்
3/18, ஸி.பி.டபிள்யூ.டி. குவார்ட்டர்ஸ்
இந்திரா நகர், சென்னை-20

மிஞ்சும் தொகை ரூ. 175.

ஜாக்பாட்டுக்கு (11வது போட்டி) சேர்ந்துள்ள தொகை ரூ. 1875.

ஜாக்பாட்டுக்குச் சேர்ந்துள்ள புகைப் படங்கள் 75.

புகைப்படம்: மோனலிஸா

## நட்சத்திர வடிவம்
## பரிசுத்திட்டம்-10
## போட்டி முடிவு

''உங்களுக்கே என்றும்?'' அனந்தின் கேள்வியில் இகழ்ச்சி ஒலி இருந்தது.

''எனக்கு, டெய்லருக்கு, இங்க்லண்டுக்கு'' என்றான் வில்வர்.

''அப்படியானால் அவனைப் பிடிப்பதற்கு என்ன?'' என்று கேட்டான் அனந்த்.

''மாக்ரேயைப் பிடித்த பிறகு அவனை நோக்கிச் செல்ல இருக்கிறோம்'' என்று வில்வர் பதில் சொன்னான்.

''அவனைப் பிடிப்பதற்கும் அருகிலிருக்கும் வா பூஷேயைப் பிடிப்பதற்கும் என்ன சம்பந்தம்?'' என்று வினவினான் அனந்த்.

''அருகிலிருக்கிறானா! யார் சொன்னது?'' என்று சீறினான் வில்வர்.

''அறமத் சொல்லவில்லையா வித்தியின் கப்பல்களைப் பிடித்ததாக? அந்தச் சண்டை அருகில் தானே நடந்திருக்க வேண்டும்? காஸண்ட்ராவுடன் போய் வா பூஷேயைப் பிடித்து விடுவதுதானே?'' என்று வினவினான் அனந்த்.

''இத்தனை நாள் அவன் ஓடியிருப்பான். தி வெரி ஐடியா ஆப் த எக்ஸிஸ்டன்ஸ் ஆப் காஸண்ட்ரா இன் திஸ் ரீஜன் வுட் ஹாவ் ஃப்ரைடன்ட் ஹிம் (இந்தப் பிராந்தியத்தில் காஸண்ட்ரா இருப்பதே அவனை நடுங்கச் செய்திருக்கும்)'' என்று வில்வர் சமாதானம் கூறினான். ''யூ ஸீ அனந்த்! காஸண்ட்ரா ஈஸ் எ பிக் மான் ஆப் வார். ஹாஸ் த்ரீ மெனி கன்ஸ் அண்ட் த்ரீ வெடரன் ஸீ காப்டன்ஸ் லைக் டெய்லர் அண்ட் இங்க்லண்ட் டு நாவிகேட் ஹர் அண்ட் பைட். த பெட் லிவாஸியர் ஈஸ் பார் அவே பை தென் (இதோ பார் அனந்த்! காஸண்ட்ரா பெரிய போர்க் கப்பல். ஏராளமான பீரங்கிகளை உடையது. டெய்லரையும் இங்க்லண்டையும் போன்ற இரண்டு பெரிய கடல் காப்டன்களை உடையது. ஆகவே லிவாஸியர் இப்பொழுது வெகு தூரத்தில் இருப்பான்)'' என்று கூறினான். கூறி இகழ்ச்சியாக நகைக்கவும் செய்தான்.

அதே சமயத்தில் அந்தத் தோப்பின் மர மொன்றின் மறைவிலிருந்து இன்னொருவன் நகைப்பும் கேட்டது. அதில் குரூரமில்லை, பயங்கரமில்லை, மிக இன்பமாக இருந்தது. அந்தச் சிரிப்பைத் தொடர்ந்து வெளியே வந்தவன் யாரையும் கவனிக்காமல் நேராக ராணியிடம் வந்து தன் ஹாட்டைக் கையி லேந்தி நன்றாக உடலை வளைத்துத் தலைவணங்கி ''ஐ ஹாவ் ஹேர்ட் அபௌட் யுவர் ப்யூடி. தென் ஐ ஹாவ் ஹேர்ட் யுவர் ம்யூஸிக். ஹுமர்ஸ் டு நாட் லை வெடி (உங்கள் அழகைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். இப்பொழுது சங்கீதத்தையும் கேட்டேன். வதந்திகள் பொய் சொல்லவில்லை)'' என்ற அவன் சுற்று முற்றும் பார்த்துவிட்டு ''லெட் மீ இன்ட்ரட்யூஸ் மை ஸெல்ஃப் வின்ஸ் நோ ஒன் எல்ஸ் வுட். லேடி! லிவாஸியர் அட் யுவர் ஸர்விஸ்'' (வேறு யாரும் அறிமுகப் படுத்தாததால் என்னை நானே அறிமுகப் படுத்திக் கொள்கிறேன். அம்மணி! நான் லிவாஸியர், வணங்குகிறேன்)'' என்று தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொண்டான்.

(தொடரும்)

# The Illustrated Weekly of India

August 24-30, 1980

presents
the most spectacular
show on earth

# INDIA'S WILDLIFE

### Highlights:

Indiscriminate slaughter has pushed much of our wildlife to the brink of extinction. Is it too late to save it?

**National Parks & Sanctuaries —**
How effective is the conservation effort?

Consequences of large-scale deforestation.

**The pleasures of bird-watching in India:**

• The giant griffons and and bearded vultures of the Himalayan ranges • The gaudy pittas and sunbirds of our tropical forests • The flora and fauna of the great Rann of Kutch and the shaded hills of the South.

A treasure-house of knowledge. A must for school-going children.

*Forthcoming issue. Order your copy today.*

### The catalogue of India's wildlife riches is second to none in the world.

**Fiery tigers, armour-plated rhinos, ponderous elephants, endangered lions, mercurial monkeys, nimble antelopes, vainglorious peacocks, aromatic musk deer, chattering parakeets and babbling mynahs, pigs, porcupines, wolves, wild dogs, foxes, bats, cobras, kraits, jewel like beetles, gaudy butterflies...**



# சஞ்சய்: 4
# மாருதி கார்

**ந**வம்பர் 13, 1968.

லோக் சபையில் தொழில் வளர்ச்சி மந்திரி ரகுநாத ரெட்டி ஓர் அறிக்கையை மூச்சு விடாமல் வாசித்து முடித்தார். இடையே எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் குறுக்கீடுகளையும், ஆட்சேபணைகளையும் அவர் பொருட்படுத்தவில்லை.

'சில காலமாகவே சிறிய கார் உற்பத்தி செய்வது குறித்து அரசு ஆலோசனை நடத்தி வந்தது. தனியார் துறையிலிருந்து பல விண்ணப்பங்கள் வந்துள்ளன. அவற்றில் சஞ்சய் காந்தியின் உற்பத்தித் திட்டம் ஏற்றதாக இருக்கும் என்று அரசு கருதி அவருக்கே லைசென்சு அளிக்கத் தீர்மானித்திருக்கிறது!

'சஞ்சயின் உற்பத்தித் திட்டப்படி ஆண்டுக்கு 50,000 கார்களை உருவாக்க முடியும். அன்னிய உதவி தேவையில்லை. கார் விலை ரூ. 6000க்கு மேலே போகாது. மணிக்கு 53 மைல் ஓடக் கூடியது. காலனுக்கு 56 மைல்கள் தரும்' என்று அவர் விளக்கினார்.

ஏற்கப்படாத விண்ணப்பங்களில் இந்திய நிறுவனங்கள் தவிர, ரெனால்ட், சிட்ரியான், மாரீஸ், மஜ்டா, டயோட்டா போக்ஸ் வேகன் முதலான அயல் நாட்டு கம்பெனிகளிடமிருந்தும் வந்திருந்தன. ஒரு காருக்கு ரூ 6700 முதல் ரூ. 12000 வரை அவற்றின் அடக்க விலை கூறியிருந்தார்கள். சஞ்சய் காந்தியினுடையது மிகவும் மலிவானதாகவும், முற்றிலும்உள்நாட்டுச் சரக்காகவும் இருக்கும் என்பதால் அவருக்கு லைசென்ஸ் வழங்கப்பட்டது. எதிர்க் கட்சிகளோ இந்திரா காந்தி மகன் என்பதால் இந்தச் சலுகை என்று குற்றம் கூறின.

சிறு கார் உற்பத்தி குறித்துப் பல மட்டங்களில் 10 ஆண்டுகளாக விவாதம் நடைபெற்று வந்தது. கடைசியாக திட்டக் கமிஷன் நாட்டின் தேவைக்கு சிறு கார் அவ்வளவு முக்கியமில்லை என்று தீர்மானித்திருந்தது. அப்படி உற்பத்தி செய்வதாக இருந்தாலும் பொதுத் துறையிலேயே செய்ய வேண்டும், தனியார் துறைக்கு அனுமதி தரலாகாது என்றும் முடிவாகி யிருந்தது.

திடீரென்று சஞ்சய் காந்திக்கு லைசென்ஸ் தந்தது குறித்துப் பெரிய சர்ச்சை ஆரம்பமானதில் வியப்பில்லை.

மாருதி என்று பெயர் சூட்டி அதன் உற்பத்திக்கான முயற்சிகளில் ஈடுபட்ட சஞ்சய் காந்தி எதிர்ப்புக்களையும் கண்டனங்



களையும் லட்சியம் செய்யவே யில்லை. அரசியல் வாதிகளும் அரசாங்க உத்தியோகஸ்தர்களும் வளர்ச்சித் திட்டங்களுக்குக் குறுக்காக நிற்பவர்கள் என்ற கருத்து அவருக்கு உண்டு.

அவருடைய வாழ்க்கையின் லட்சியமாக அமைந்துவிட்ட மாருதி கார் பின்னும் அவருடைய அரசியல் பிரவேசத்துக்கும் காரணமாக இருந்தது. தவிர, மாருதி காரைச் சூழ்ந்த ஊழல்கள் அவருக்கும் இந்திரா காந்திக்கும் கெட்ட பெயரைச் சம்பாதித்துத் தந்தன. இந்திரா காந்தியை மகிழ்விக்க நினைத்தவர்கள் சஞ்சய் காந்தியின் மாருதி கார் முயற்சிக்கு ஆதரவு தந்து அவரை மகிழ்வித்துப் பலன் கண்டார்கள். பிரதமரைத் தாக்கிப் பேசியவர்கள் சஞ்சய் காந்தியின் மாருதி நிறுவனத்தைப் பற்றி ஊழல்களைக் கண்டுபிடித்து அம்பலமாக்க முன் வந்தார்கள். ஆறு மாதத்துக்கு ஒரு முறை மாருதி கார் சம்பந்தப்பட்ட விவாதம் பார்லிமெண்டில் நடந்து வந்தது.

கி. கஸ்தூரிரங்கன்



ஒருத்தி: ஏன் உன் வேலைக்காரி ''டான்ஸ்'' ஆடிகிட்டே பெருக்கறா?
மற்றவள்: இன்னிக்கு ''ஆடிப்பெருக்கு''ன்னேன்! அவ தப்பா புரிஞ்சிக்கிட்டா!

- வெ. சீதாராமன்

மகனைப் பழிப்பவர்களுக்குப் பதில் கூறும் வகையில் இந்திரா காந்தி சொன்னார்: ''என்னுடைய மகன் சஞ்சய் காந்தி என்பதாலேயே அவனைப் பழிக்கிறீர்கள். அவன் இளைஞன். மென்மையான மனம் அவனுக்கு. கார் உற்பத்தியில் தன் சக்தி, முயற்சி அத்தனையும் செலவிட்டு வருகிறான். நம் நாட்டுக்கு ஏற்றதாக ஒரு மாடலையும் தயாரித்து அளித்திருக்கிறான். என் மகனின் முயற்சிகளைத் தடுத்தால் அவன் ஊக்கத்தைக் கெடுப்பதாகும். பிறகு மற்ற இளைஞர்களை தொழில் உற்பத்தி முயற்சிகளில் தைரியமாக ஊக்கமாக ஈடுபடுங்கள் என்று நான் பேசுவதற்கு வாய் இருக்காது.''

சஞ்சய் காந்திக்கு லைசென்ஸ் வழங்கப்பட்டது பெரிய குற்றமல்ல. ஆனால் மற்றவர்களுக்கு மறுக்கப்படும் சலுகைகள் அவருக்குத் தரப்பட்டது பெரிய குற்றமாகப் பட்டது.

சஞ்சய் காந்தியை ஊக்குவிப்பதில் முன்நின்றவர்கள் இருவர். இந்திரா காந்தியின் வணிக மந்திரியாக இருந்த (பின் வெடிகுண்டு வீச்சால் கொல்லப்பட்ட) எல். என். மிச்ரா தன் செல்வாக்கைப் பயன்படுத்தி மாருதி கார்கம்பெனிக்குத் தொழில் முதலாளிகளிடமிருந்து பெரும் முதலீடு வாங்கித் தந்தார். ஹரியானாவில் முதல்வராக இருந்த பன்ஸிலால் பிரதமரின் தயவைப் பலமுறை நாடியும் அவரை யாரும் நெருங்க விடவில்லை. சஞ்சய் காந்தி மூலம் தன் செல்வாக்கை வளர்த்துக் கொள்ளலாம் என்று எண்ணி மாருதி கார் தொழிற் சாலைக்கு டில்லியின் எல்லைப்புறத்தில் 300 ஏக்கருக்கு மேல் நிலம் ஆர்ஜிதம் செய்து தந்தார். சஞ்சய் அம்மாவுடனேயே இருந்து கொண்டு பாக்டரிக்கும் தினம் சென்று வர வசதியாக இருக்கும் என்பதால் இந்த ஏற்பாடு அவருக்குப் பிடித்தது.

இது வெறும் புறம்போக்கு நிலமாக இருந்திருந்தால் பிரச்னை இல்லை. நூற்றுக் கணக்கான விவசாயிகள் வியர்வை சிந்த உழைத்து வளர்த்த பயிர் நிலமாக இருந்தது. இவர்களை யெல்லாம் ஒரே நாளில் விரட்டி விட்டு ஒன்றுக்கு கால் விலை என்று அடாவடியாக சட்டுப் பணம் தந்துவிட்டு மாருதி கார் நிறுவனத்தைப் பிரதிஷ்டை செய்து தந்தார் பன்ஸிலால். அருகே விமான தளம் இருப்பதும், பாதுகாப்பு அமைச்சகத்தைச் சேர்ந்த வெடி மருந்துத் தளம் இருப்பதும் பாக்டரி எழுப்புவதற்குத் தடையாக இருந்தன. அதிகாரிகள் ஆட்சேபித்தார்கள். ஆனால் மந்திரிகளின் செல்வாக்கினால் இவற்றையும் மீற முடிந்தது. வெடி மருந்து தளத்தை வேறு இடத்துக்கு மாற்ற உத்தரவு போட்டார் பாதுகாப்புத் துணை அமைச்சர் வி. ஸி. சுக்லா.

கார் தயாரிப்பில் முழு மூச்சுடன் ஈடுபட்ட சஞ்சய் இதை யெல்லாம் சில்லறைத் தொந்தரவுகள் என்றே கருதி அலட்சியமாக இருந்துவிட்டார். இதன் பிறகு மாருதி கார் நிறுவனம் சம்பந்தப்பட்ட ஒவ்வொரு நடவடிக்கையும் மரபுகள், சட்டங்கள் இவற்றை மீறியதாக இருந்தது. ஒரு பெரிய ஊழல் சாம்ராஜ்யமே உருவாகியது.

கார் தயாரிப்பது குறித்து சஞ்சய் காந்தி ஒருபோதும் ஏமாற்றும் எண்ணத்தில் இருக்கவில்லை என்பதைக் குறிப்பிட வேண்டும்.

இங்கிலாந்தில் மூன்று ஆண்டுகளுக்கு ரோல்ஸ் ராய்ஸ் கம்பெனியில் பயிற்சியாளராகச் சேர்ந்த சஞ்சய் இரண்டாண்டு முடிந்ததும் பயிற்சியை முடிக்காமலே திரும்பி வந்துவிட்டார். இந்திரா காந்தி பிரதமராக இருந்ததும், கார் தயாரிப்புக்கு இதுதான் தருணம் என்ற கருத்தும் அவரை ஊர் திரும்ப வைத்தது.

பழைய டில்லியில் பஞ்சர் ஷாப் வைத்திருந்தவர் அர்ஜுன் தாஸ். ஒரு முறை ராஜீவ் காந்தியின் கார் இவருடைய கடைக்கு முன் பஞ்சராகி விட்டது. அர்ஜுன் தாஸ் நொடியில் செப்பனிட்டுத் தந்தார். அர்ஜுன் தாஸை ராஜீவ் தம்பிக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். தோற்றத்தில் ஒரு கில்லாடி மாதிரி இருந்த அர்ஜுன் தாஸை சஞ்சய் காந்திக்கு ரொம்பப் பிடித்துப் போய்விட்டது. தாஸின் யதார்த்தமான பேச்சும் சுறுசுறுப்பும் அவரைக் கவர்ந்து விட்டன.

அர்ஜுன் தாஸின் கடையிலேயே சஞ்சய் தன் கார் மாடலைத் தயாரிக்க முற்பட்டார். பழைய டில்லியில் காயலான் கடைகளுக்கென்றே இடம் உண்டு. அங்கே சகலவித சாமான்களும் கிடைக்கும். சஞ்சயும் அர்ஜுன் தாஸும் துருவித் துருவி ஒரு காருக்கு வேண்டியதான உருப்புக்கள் அத்தனையும் சேகரித்தனர்.

சஞ்சய் காந்தி மாருதி கார் மாடலை வரைந்து வைத்திருந்தார். அர்ஜுன்தாஸ் வொர்க் ஷாப்பில் தினம் 13 மணி நேரம் உழைத்தார்.

ஓராண்டுக்குப் பின்னர் குள்ளமாய், ஸ்கூட்டர் சக்கரங்களின் மேல் நாலு பேர் உட்காரக் கூடிய மாருதி கார் உருவாகியது. மோட்டார் சைக்கிள் இன்ஜினை மாட்டி ஓட்டினபோது ஓடவும் செய்தது.

சஞ்சய் காந்திக்குத் தான் இந்தியாவின் ஃபோர்ட் என்ற தன்னம்பிக்கை வந்துவிட்டது.

1971ல் நிறுவப்பட்ட மாருதி லிமிடெட் கம்பெனியில் சஞ்சய் காந்தி ரூ. 100 மட்டும் முதலீடு செய்து மானேஜிங் டைரக்டரானார். மாதச் சம்பளம் ரூ. 4000.

இது போதாதென்று மாருதி டெக்னிகல் சர்வீஸ் என்று உள் நிறுவனம் ஏற்படுத்தி அதில் ராஜீவின் மனைவி சோனியா, குழந்தைகள் இரண்டு பேர் பங்குதாரராக்கினார். தானே மானேஜிங் டைரக்டராக இருந்து கொண்டு தாய் ஸ்தாபனத்திடமிருந்து ஆலோசனை ஃபீஸ் என்று ஆயிரக் கணக்கில் கறந்தார். இந்தப் 'பணம் பண்ணும்' உத்தி சஞ்சய் காந்திக்கு சுபாவமாகத் தோன்றியிருக்க நியாயமில்லை. அவருடைய வியாபார நண்பர்கள் யோசனை தந்திருக்க வேண்டும்.

மாருதி கார் வளர்ச்சிக்குக் கோடிக் கணக்கில் முதலீடு தேவைப்பட்டது. அரசாங்கத் தயவு நாடி நின்ற தொழிலதிபர்கள் சிலர் பெரும் முதலீடு செய்தனர். நாடெங்கிலும் மாருதி கார் விற்பனை உரிமை கோரி வந்தவர்களிடமிருந்து லட்சக் கணக்கில் டிபாசிட் தொகை கிடைத்தது.

அப்படியும் போதவில்லை. 50,000 கார் உற்பத்தி செய்ய 60 கோடியாவது மூலதனம் வேண்டும். ரூ. 6 கோடிவரைதான் கிடைத்திருந்தது. மேற்கொண்டு தேவைகளுக்கு எல். ஐ. ஸி., தேசிய பாங்குகள் இவற்றிடம் பலத்த சிபாரிசுடன் கடன் கோரப்பட்டது. ஆனால் மாருதி கார் கம்பெனிக்குப்பெருமளவு கடன் பெறுவதற்கான தகுதி இல்லை என்று நிர்வாகிகள் கருதினர். அரசாங்கத்துக் குள்ளேயும் மாருதி தொழில் நிறுவனம் பற்றி நேர்முகமாகவும் மறைமுகமாகவும் எதிர்ப்புக்கள் எழுந்தன. பிரதமரின் காரியதரிசி பி. என். ஹக்ஸர் சஞ்சய் செயல்முறை குறித்து ஆட்சேபித்தார்.

அடிக்கடி பார்லிமெண்டில் மாருதி விவகாரம் குறித்துப் பதில் சொல்ல வேண்டிய இக்கட்டில் மந்திரிகள் டி. ஏ. பாய், சி. சுப்ரமணியம் முதலானோர் மாட்டிக் கொண்டனர். அதற்காக மாருதி கார் பற்றிய உண்மைகளை அதிகாரிகள் சேகரிக்கத் தொடங்கினர்.

கம்பெனி நிறுவனமாகி நான்காண்டுகளுக்குப் பின்னர் ஒரு கார் கூட உருப்படியாக உருவாகவில்லை. மோட்டார் சைக்கிள் என்ஜின் பொருந்தவில்லை. அதன் பின்னர் இரண்டு பிஸ்டன் என்ஜினுக்குப் பதில் நான்கு பிஸ்டன் என்ஜினாக மாற்றினார். அப்படியும் வெள்ளோட்டம் விட்டபோது பலவித சப்தங்கள் வந்தன. சஞ்சய் காந்தி தோல்வியைச் சந்திக்க விரும்பவில்லை. மாருதி கார் உருப்படாமற் போவதற்குக் காரணம் அரசியல் எதிரிகளும் அதிகாரிகளுமே என்று பொங்கினார்.

இவர்களுக்கெல்லாம் பாடம் கற்பிக்கும் வாய்ப்பு விரைவிலேயே வந்து சேர்ந்தது.

(தொடரும்)





## விஞ்ஞானம் கற்ற நல்லோர்!

அஞ்ஞானம் என்னும் இமை
அகற்றியே வைப்ப தற்கு
மெய்ஞ்ஞானத் தீபம் வீசும்
மேலான பார தத்தில்
விஞ்ஞானம் கற்ற நல்லோர்
விண்கலம் அமைத்துத் தந்தார்.
எஞ்ஞான்றும் புகழைச் சேர்த்தார்
என்றுமவர் வாழி வாழி!

பாகங்கள் இரண்டு லட்சம்
பயனுற இணைத்தார்; தங்கள்
ஊக்கங்க ளாலே ஏதும்
ஊறுகள் இல்லா வாறு
'ரோகிணி' கலத்தைக் கண்டார்.
ருஷ்யர்கள் உதவி இன்றி!
'ஆகுமோ?' என்று கேட்டோர்
அதிர்ச்சியால் திகைத்து நின்றார்!

—ரஜியா கல்தானு

# சிந்தனைச் சிதறல்கள்

# "ஸ்டைல் மன்னன்" — ஸ்ரீவித்யா

தமிழக அரசின் திரைப் படப் பரிசளிப்புவிழாவில் ரஜினி காந்தை நான் சென்ற வருடம் சந்தித்தேன். ரொம்ப நாளைக்குப்பிறகு பார்த்ததால், பரிசளிப்பு விழா முடிந்தவுடன் அவரிடம், "நீங்கள் இன்று 'நம்பர் ஒன்' நடிகராக இருப்பது குறித்து மிக்க மகிழ்ச்சி" என்றேன். அவர் சிரித்தார். மற்றவர்களைப் போல நான் அவரிடம் ஒப்புக்காகச் சொன்னவளல்ல. உண்மையாகவே மனம் நெகிழ்ந்து கூறினேன். எனக்குப் பழைய சம்பவங்கள் நினைவுக்கு வந்தன. அன்று நாங்கள் கலாகேந்திரா அலுவலகத்துக்குச் சென்றோம் — கமல், நான், ரஜினி மூன்று பேரும். கமலும் ரஜினியும் அன்று அவ்வளவாகப் பழகவில்லை. என்னுடன் ரஜினி நடிக்கும் இரண்டு மூன்று காட்சிகளை எடுத்தபோதுதான் ரஜினியை உன்னிப்பாகக் கவனித்தேன். அப்பொழுதுதான் அவர் ஸ்டைல் நடிப்பில் தன்னைச் சிறுகச் சிறுக இணைத்துக் கொண்டு வருகிறார் என்று தெரிந்தது.

சிகரெட்டை ஒரு மாதிரியான ஸ்டைலில் தூக்கிப் போட்டுப் பிடிப்பதை டைரக்டர் பாலசந்தர் சொல்லிக் கொடுக்க, "இப்படிப் பண்ணு எப்படி சார்" என்று ரஜினி வேறு ஒரு மாதிரியைக் காண்பிக்க நான் மிகவும் சுவாரஸ்யமாகக் கவனித்து வந்தேன். ஏனெனில் அந்தச் சமயத்தில் அந்த விதமான நடிப்பு தமிழ்த் திரைப் பட உலகுக்கு மிக மிகப் புதிது. அந்தப் பெருமைக்குக் காரண கர்த்தா பாலசந்தர்தான்.

படத்தின் ரஷ்களைப் பார்த்துவிட்டு வந்த பாலசந்தர், "ரஜினி காந்த் ஓஹோ என்று புகழ் பெறப் போகிறார்!" என்று கூறினார். "இவ்வளவு சிறிய ஷாட்டிலிருந்து நீங்கள் இதை எப்படிக் கூறுகிறீர்கள்?" என்று நான் கேட்டேன். "அவருடைய கண் எவ்வ பிரமாதமாக இருக்கு தெரியுமா? ஃபென்டாஸ்டிக்! நாம சொல்லிக் கொடுப்பதை அப்படியே ஈயடிச்சான் காப்பியாகச் செய்யாமல் தானும் ஏதாவது செய்து தன் நடிப்பை உயர்த்திக் கொள்ளணும் என்கிற எண்ணம் ரஜினிக்கு இருக்கு. ஒரு சிறந்த நடிகராவதற்கு இது ஒரு முக்கியமான தகுதி. இதைக் கண்டிப்பாய் வரவேற்பது மட்டுமல்ல; ஊக்கமளிக்கவும் வேண்டும்" என்றார்.

கலா கேந்திராவில் நடிக நடிகைகளுக்கு ரஷஷ் போட்டுக் காட்ட மாட்டார்கள். ரஜினி காந்த் தாம் நடித்தது எப்படி வருமோ என்று பயம் கலந்த எதிர்பார்ப்புடனேயே இருந்தார். கமலுக்கு கலா கேந்திராவோ, நடிப்போ அப்பொழுது புதிதில்லை. எனவே நாங்கள் நடித்து வந்த படத்தைப் பற்றி முழுமையான நம்பிக்கை இருந்தது அவருக்கு. இன்னும் சொல்லப் போனால் அந்தப் படத்தைப் பற்றிக் கமல் அவ்வளவாகக் கவலைப் படவில்லை என்று கூடச் சொல்லலாம். ஏனெனில் அப்பொழுதே கமல் தமிழ், தெலுங்கு, மலையாளம் என்று பல மொழிகளில் நடித்துக் கொண்டிருந்தார். படப் பிடிப்புக்கு வந்தவுடன் டைரக்டரின் உதவியாளர் அனைத்துவுடன் காட்சியைப் பற்றியும் படத்தைப் பற்றியும் கமல் விவாதிக்கக் கிளம்பி விடுவார். நானும் ரஜினி காந்தும் ஓர் ஓரத்தில் அம்போ என்று உட்கார்ந்திருப்போம். அப்பொழுது ரஜினி கேட்பார்: "மேடம்! உங்களுக்கு நேர்வஸா இல்லையா? இந்தப் படத்தை ஜனங்கள் ஏற்பாங்களா?"

அப்பொழுது நான் சொன்னேன்: "படத்தைப் பார்க்கிற மக்களுக்கு நான் ஏற்றுள்ள காரெக்டர் மீது அனுதாபம் பிறந்தால் படம் 100 நாள் ஓடும். அப்படி இல்லாமல் இவ என்ன பெரிய தியாகம் பண்ணிட்டா அப்படின்னு ஒரு அபிப்பிராயம் வந்தது என்றால் நேர் மாறாக இருக்கும். அதே போல் மக்கள் நீங்கள் செய்வது சரி என்று ஒப்புக்கொண்டால் நீங்கள் நட்சத்திர மாகிவிடுவீர்கள். இல்லையென்

ரொம்ப கஷ்டம் தான். ஆனால் தமிழ் மட்டுமா உங்களுக்குத் தெரியும்? தெலுங்கு, கன்னடம் இருக்கு. அதிலும் முயற்சி செய்தால் முன்னுக்கு வர முடியாமலா போகும்?''

டைரக்டர் ரஜினியின் கண்களைப் பற்றிச் சொன்னதையும் சொன்னேன். ''அப்படியா சொன்னார்! ரொம்ப சந்தோஷம்.! ஆக, நல்லதுதான் நடக்கும்'' என்று ஆசையோடு கூறிக்கொண்டார்.

நான் பிறகு அவரை அதிகம் பார்த்துப் பேசவில்லை என்றாலும் அவரிடம் அதிகமான மாற்றங்கள் தெரியவில்லை. பல வருடங்களுக்குப் பிறகு இன்று அவர் திரைப்பட வரலாற்றில் மிகப் பெரிய சாதனை நிகழ்த்தி வருகிறார். தமிழ் நாட்டில் முன்பு எப்படி எம். ஜி. ஆர். சிவாஜி என்று இருந்ததோ, அதைப் போல ரஜினி, கமல் என்ற ஜோடி சமீபத்தில் உருவாயிற்று. இது ஒரு ஆரோக்கியமான போட்டி என்றுதான் நான் சொல்வேன். ஆனால் ரஜினி ஓரளவுக்கு மாறுபட்ட கதாபாத்திரங்களாகச் செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். உதாரணத்துக்கு ஆறிலிருந்து அறுபது வரை.

இடையில் ரஜினிக்கு மனநிலை சரியில்லை என்று பேச்சு அடிபட்டது. இது நடக்கக் கூடியதுதான். எனக்கே கூட சில சமயம் 'டென்ஷன்' தாளமுடியாமல்தான் போகிறது. நான் இந்த அளவுக்கு என்றுமே பிஸியாக இருந்ததில்லை. முன்பு ஆறு படங்களில் நடித்துக்கொண்டிருந்தேன். அவை அனைத்தும் படப்பிடிப்பிலிருந்தன. இப்பொழுது 22 படங்களில் நடிக்கிறேன். அவற்றில் 14 படப்பிடிப்பில் உள்ளன. இந்த நிலையில் சில சமயம் எனக்கே என்மீது கோபம் வரும். யாரைப் பார்த்தாலும் எரிந்து விழுவேன்.

டென்ஷனைக் குறைத்துக் கொள்வதற்காகத்தான் 22ல் 14 படங்களுக்கு மட்டும் கால்ஷீட் கொடுத்துவிட்டு மற்றவற்றை அப்படியே அடுத்த வருடத்துக்கு வைத்திருக்கிறேன். இப்படிச் செய்யாமல் எல்லாவற்றையும் இழுத்துப் போட்டுக் கொண்டால் யாருக்கும் நியாயம் செய்ததாகாது. ஆனால் இந்த மாதிரி செய்வது நடிகர்களுக்கு ரொம்ப கஷ்டம். பல பேருடைய மனஸ்தாபத்தைச் சம்பாதித்துக் கொள்ள நேரும்.

இன்று ரஜினிதான் படஉலகில் நெ. 1 நடிகராக இருக்கிறார். எனவே எல்லோருமே அவரை நடிக்க வைத்துப் பணம் பண்ண விரும்புகிறார்கள். பணம் பண்ணுவதைப் பொருத்த மட்டில் இது சரியான வழிதான். இதில் ஆர்டிஸ்ட்கள்தான் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். தெரிந்தோ தெரியாமலோ அவர்கள் பலியாடாகி விடக் கூடாது. இதை ரஜினி தெரிந்து வைத்திருக்கிறார். கால்ஷீட்களைத் திறம்பட நிர்வகிக்கிறார். இந்த வருடம் இவ்வளவு படத்தில் நடிக்கணும்; அதற்கு இவ்வளவு நாள் கால்ஷீட் என்று வைத்துக் கொண்டிருக்கிறார். அதைத் தளர்த்தாமல் அப்படியே பின்பற்றுகிறார் என்று நான் கேள்விப்பட்டேன். நேரம் தவறாமை, உண்மையாக உழைத்தல் இவை யெல்லாம் ஒரு நட்சத்திரத்துக்கு அவசியம்.

கல்யாணம் நடந்தால் ரஜினியுடைய மார்க்கெட் போய்விடும் என்று நினைக்கிறீர்களா? நான் அப்படி நினைக்கவில்லை. ஏனெனில் படாதிபதிகளுக்கு அவர் நல்ல ஒத்துழைப்பைத் தருகிறார். ''எனக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்துவிடுங்கள். நான் நடிக்க வருகிறேன்.'' அவர் இதைத் தவிர வேறு எந்த நிபந்தனையும் போடுவதாகத் தெரியவில்லை.

ஒரு படப் பிடிப்புக்கு அவரை அழைத்துப் போக ப்ரொடக்ஷன் கார் வரச் சிறிது தாமதமாகவே இவர் ஒரு மோட்டார் சைக்கிளில் சென்று படப் பிடிப்பில் கலந்துகொண்டு விட்டு வந்தாராம். ஒரு நடிகர், அல்லது நடிகை இந்த அளவுக்கு சிம்பிளாக இருக்க வேண்டும்.

ஓரிடத்தில் தாமதமானால் அது நாள் முழுவதும் தொடர்ந்து கொண்டே இருக்கும். அடுத்த படத்தின் ஷூட்டிங்குக்குச் செல்லும்பொழுது அதன் தயாரிப்பாளர் ரஜினியைத்தான் ஏன் தாமதமாக வருகிறீர்கள் என்று கேட்பாரே யொழிய காரைத் தாமதமாக எடுத்து வந்த—வேறு படப்பிடிப்பு யூனிட்டைச் சேர்ந்த டிரைவரையல்ல.

நடிகர் என்ற முறையில் ரஜினிக்குச் சில எல்லைகள் இருக்கத்தான் இருக்கின்றன. அது அவருக்கே தெரியும். அவரை எல்லையில்லாத சிவாஜி என்று கற்பனை செய்து கொள்ள முடியாவிட்டாலும் ஆறிலிருந்து அறுபதுவரை போன்ற சில நல்ல மாறுபட்ட வேடங்களை அவர் ஏற்று நடிக்கலாமில்லையா? ஒரே ஒரு படத்தில் ரஜினியுடைய ஸ்டைல் ரசிகர்களுக்கு அலுத்துப் போனாலும் கூட அதைப் பெரிதுபடுத்தச் சுயநலத்தோடு நிறையப்பேர் காத்திருக்கிறார்கள். இதற்காகவாவது மாறுபட்ட வேடங்கள் அவருக்குத் தேவை.

மேலட்டை வண்ணப் படம் எடுத்தவர்:
**சரஸ்வதி சத்தியமூர்த்தி**
**பேட்டி: சலன்**

---

அவள்: ''கமலதா ராமசாமினு எழுதறீங்களே கமலதாங்கிறது உங்க மனைவியா...?''

இவர்: ஊஹூம்! மனைவிகள்! கமா, மல்லிகா, லலிதா, தாரா ஆகிய என் நாலு மனைவிகளின் முதலெழுத்துச் சுருக்கம் தான் கமலதா!''

—உ. ராஜாஜி



அன்னம்

லலிதாவின் பார்வையில் அந்தத் திருமண அழைப்பு எத்தனையோ சம்பவங்களை நினைவூட்டியது. மணமகனின் இடத்தில் அவள் மகன் இருந்திருக்க வேண்டும்.

பக்கத்துப் பக்கத்து வீட்டில் அவர்கள் இருந்தபோது எப்படிப் பழகினார்கள்? தன் மகன் பாஸ்கருக்கு அந்த வீட்டுப் பெண் வாணி தான் மனைவி என்று அவர்கள் மட்டுமா நினைத்துக் கொண்டிருந்தார்கள்? அந்தச் சின்னஞ் சிறுசுகள் இரண்டும் எப்படிஆசையை ஆலமரமாக வளர்த்துக் கொண்டிருந்தார்கள்? பருவத் துடிப்பில் அந்தப் பெண் தன் ஆசையெல்லாம் கொட்டி எழுதிய கடிதங்கள் இன்னும் அவள் பீரோவில் தூங்குகின்றன. அவள் கடிதங்களும் அவன் பதிலுக்கு எழுதியவைகளும் ஒரு நாள் வெளியே தெரிய வந்து அத்தனை பேர் எதிரிலேயும் படிக்கப்பட்டு இரண்டு பேரும் எப்படி வெட்கிப் போனார்கள்?

அவ்வளவும் பழைய கதை. இன்று பாஸ்கர் இல்லை. வரும் மே மாதத்தில் கல்யாணம் என்று அவர்களாகத் தீர்மானித்த சமயம் அவன் கம்பெனியில் அவனை ஆபீஸ் விஷயமாக பம்பாய்க்கு விமானத்தில் அனுப்பினார்கள். அந்தப் பயணத்தின் முடிவு மறு உலகம்தான் என்பது யாருக்கும் தெரியவில்லை. பாஸ்கரனின் உடல்கூட முழுவதாக அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

வாணியின் வீட்டில் எப்படி அழுது தீர்த்தார்கள்? தன் பெண்ணின்



வாழ்க்கையே இருண்டுவிட்டதாக கமலா— வாணியின் அம்மா கதறினாள். இன்று ஐந்து வருஷங்களுக்குப் பிறகு — வாணிக்குத் திருமணம். —வேறு ஒரு பையனுடன்! நாளைக்கு இந்நேரம் அவள் திருமணம் நடந்து முடிந்திருக்கும்.

லலிதா பெருமூச்செறிந்தாள். தன் மகளின் தலைவிதி அப்படி! அதற்காகத் திருமணம் செய்து கொள்ளாமல் வாணி வாழ்க்கை முழுவதும் துக்கம் கொண்டாட முடியுமா?

ஆனால் லலிதாவின் கணவர் சாம்பசிவம் அப்படி நினைக்கவில்லை. தன் மகளின் மேல் அவர்களுக்கு — முக்கியமாக வாணிக்கு உண்மையான அன்பு இருந்திருக்குமானால் இந்தக் கல்யாணத்தை நிச்சயம் செய்திருக்கக் கூடாது. வாணி தன் கடிதங்களில் கொட்டியிருந்ததெல்லாம் அவள் நெஞ்சத்திலிருந்து வந்தவையாக இருந்தால் இந்த மணமேடைக்கு அவள் போகச் சம்மதித்திருக்க மாட்டாள்.

அதுமட்டுமல்ல; பாஸ்கரனின் மறைவுக்கு முன்பு இருந்த நெருக்கம் இப்போது இல்லை. இரண்டு குடும்பங்களும் ஒரே வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தன. சிறியதாக ஏற்பட்ட மனக் கசப்பு பூதாகாரமாக வளர்ந்திருந்தது. தன்னை வாணியின் தகப்பனார் பல விஷயங்களில் ஏமாற்றிவிட்டதாக சாம்பசிவம் இப்போது நினைத்தார்.

அதுவும் —அந்தக் கல்யாணத்துக்கு அவரை நேரில் வந்துகூட அழைக்காமல்—தபாலில் மட்டும் அழைப்பிதழ் அனுப்பிய காரணத்தால் — அவர் ஆத்திரம் பலமடங்காகியது.

தன் மகன் வாழவில்லை. வாணியையும் வாழ விடக் கூடாது. அந்தக் கடிதங்களை— ஏதோ வேகத்தில் அவள் அன்று தம் மகனுக்கு எழுதியவைகளை ஒன்றாக அடுக்கினார். ரிப்பன் கொண்டு கட்டினார். மேலே பழுப்பு நிறக் காகிதம் கொண்டு அழகாக ஒட்டினார். அதுதான் அவர் மணமகனுக்கு அளிக்கப் போகும் பரிசு.

முதலிரவுக்காக — அப்படி ஒன்று நடக்குமேயானால் — தன் கணவன் அறையில் வாணி நுழையும்போதே அவர்கள் வாழ்க்கையில் விரிசல் ஏற்பட்டுவிடும். சந்தேகத்தின் வித்து அவளைக் கரம் பிடிப்பவனின் நெஞ்சத்தில் ஊன்றப்பட்டுவிடும். இனி அவள் வாழ்க்கை என்றும் நரகம்தான்.

அவர்செய்வதையெல்லாம் லலிதா பார்த்துக் கொண்டிருந்தாள். ''இதெல்லாம் எதற்கு?'' என்று தடுத்துப் பார்த்தாள். சாம்பசிவம் உறுமினார். ''எனக்குத் தெரியும்... நீ பேசாமல் இரு... இந்தத் தண்டனை அவர்களுக்கு வேண்டியதுதான்'' என்று அவள் வாயை அடக்கினார்.

லலிதா அந்தக் கல்யாணத்துக்குப் போகவே விரும்பவில்லை. ஆனால் சாம்பசிவம் அவளைக் கட்டாயப்படுத்தி அழைத்துப் போனார். தனக்கு யாரோ கொடுத்திருந்த குங்குமச்சிமிழை வாணிக்குத் தருவதற்காக லலிதா ஞாபகமாக எடுத்துச் சென்றாள்.

திருமணம் முடிந்தது. வாணியின் பெற்றோர் சாம்பசிவத்தையும் லலிதாவையும் அன்புடன் வரவேற்று மணவறையில் முதல் வரிசையில் அமரச் செய்தார்கள். லலிதாவைப் பார்த்த வாணியின் தாயாருக்குக் கண்கள் ஓரத்தில் நீர் முத்துக்கள் அரும்பின. எத்தனை ஆண்டுகள் பழக்கம்?

ஒவ்வொருவராகப் பரிசுகள் கொடுத்தனர். சாம்பசிவம் பொறுமையாகக் காத்திருந்தார். கூட்டத்துடன் கூட்டமாகக் கொடுத்தால் பிரித்துப் பார்க்காமல் கூட இருந்து விடலாம்.

திருமண விருந்து முடிந்தது. வாணிக்கு லலிதா குங்குமச் சிமிழை அளித்தாள். ''தொங்கத் தொங்கத் தாலியுடன் சுமங்கலியாக வாழவேண்டும்'' என்று மனமார வாழ்த்தினாள்.

சாம்பசிவம் கொடுத்த பாக்கெட்டை மணமகன் வாங்கிக் கொண்டான்.

''பிரியுங்கள், மாப்பிள்ளை!'' என்று வற்புறுத்தினார் சாம்பசிவம்.

அவன் மெதுவாகப் பிரித்தான்.

அங்கு நடக்கப் போகும் விபரீதத்தை ரசிக்கத் தன்னைத் தயார்ப்படுத்திக்கொண்டார் சாம்பசிவம்.

பழுப்பு நிற உறை தனியாக விழுந்தது. உள்ளே காகிதத்தைச் சுற்றியிருந்த ரிப்பனும் அவிழ்க்கப்பட்டது. ஆனால் உள்ளே கடிதங்கள் இல்லை.

அவைகளுக்குப் பதிலாக ஆறு அழகிய கைக்குட்டைகள் இருந்தன. ஒவ்வொன்றின் மூலையிலும் 'வாணி' என்ற பெயர் வண்ண வண்ண நூல்களில் எழுதப்பட்டிருந்தன.

வாணி படபடக்கும் விழிகளால் அவற்றைப் பார்த்தாள். அவை பாஸ்கருக்காக அவளால் தைக்கப்பட்டுத் தரப்பட்டவை. யாரிடம் அவை இருக்க வேண்டுமோ அங்கே சேர்த்துவிட்ட சாம்பசிவத்தின் பெருந்தன்மையை அவள் மனமாரப் பாராட்டினாள்.

சாம்பசிவம் மென்று விழுங்கினார். பஸ்ஸில் திரும்பும்போது ''இதெல்லாம் உன் வேலை தானே?'' என்று லலிதாவைக் கேட்டார். அதற்கு மௌனமாகத் தலையசைத்தாள் அவள்.

''அந்தக் கடிதங்களைத் தபாலில் அனுப்பி வைக்கிறேன். உன்னால் என்ன செய்ய முடியும்?'' எனச் சவால் விடுவது போல் கேட்டார் சாம்பசிவம்.

''அப்படி நீங்கள் செய்யக் கூடாது என்பதற்காக அவைகளை இன்று காலையே எரித்து விட்டேன்!'' என்றாள் லலிதா மெதுவாக.

''நீ ஒரு தாய்தானா? உனக்குப் பாஸ்கர் மேல் பாசமே இல்லையா?'' என்று கேட்டார் சாம்பசிவம் ஆத்திரத்துடன்.

''நான் முதலில் ஒரு பெண். அப்புறம் தான் தாய்!'' என்றாள் லலிதா உறுதியாக.

---



மனைவி: ''இந்தாங்க அத்தான்' என் முதல் மாதச் சம்பளம்! இதை உங்கள் கையால் வாங்கிவிட்டுத் திரும்ப என்னிடமே கொடுத்து ஆசீர்வாதம் பண்ணுங்க...'' —சு. ராஜாஜி



செய்தாலே இயல்பாக இல்லை. அதுவே வயது வரம்பு மீறி ஒரு நடிகர் செய்தால் விகாரமாகி விடுகிறது.

பொதுவாக நடிக நடிகையர் தங்கள் வயதுக்கு ஏற்றாற்போல் பாத்திரங்கள் ஏற்கவேண்டும். நான் என் இருபதாவது வயதில் ஹீரோயின் வேஷம் போடும் காலத்திலேயே காரெக்டர் ரோல்களும் போட ஆரம்பித்து விட்டேன். அது ரசிகர்கள் மத்தியில் எனக்குக் கண்ணியத்தையும், மதிப்பையும் வளர்த்துக் தந்தது.

சிறு வயதிலிருந்தே அசோக்குமாரின் விசிறி நான். அவர் எப்போதும் தம் வயதுக்குத் தக்கபடியான பாத்திரங்களை ஏற்கிறார். இன்றும் எல்லா ரசிகர்கள் மனத்திலும் முக்கிய இடம் வகிக்க இதுவே காரணம். அவரே தம் வயதுக்குப் பொருந்தாத கதா பாத்திரம் ஏற்று, காதல் செய்திருந்தால் ''பண்பட்ட நடிகர்'' என்ற பட்டம் அவரை விட்டு எப்போதோ போயிருக்கும்!

தற்போதுள்ள சினிமா ரசிகர்கள் இளம் தலைமுறை நடிகர்களையே அதிகம் விரும்புகிறார்கள். இதனால்தான் ரஜனிகாந்த் கமலஹாஸன் போன்றவர்கள் வெற்றிபெற முடிகிறது.

இளைப்பட நடிக நடிகையர்களுக்கு ரொம்பவும் முக்கியம் உடல் அமைப்பு.

# சிவாஜி சகாப்தம் முடிந்து விட்டதா?

**சௌகார் ஜானகி கூறுகிறார்:**

சிவாஜியுடன் சேர்ந்து பல படங்களில் நடிக்கும் அரிய வாய்ப்பைப் பெற்றவள் நான். படிக்காத மேதை, பார் மகளே பார், உயர்ந்த மனிதன், புதிய பறவை, மோட்டார் சுந்தரம் பிள்ளை போன்றவை. ஒவ்வொன்றிலும் வித்தியாசமான பாத்திரங்கள். பாலை விளக்கு படம் எனக்கு 'சிறந்த நடிகை' என்ற விருதைத் தந்தது.

வசனங்களை உச்சரிக்கும்போதும் பேசும் போதும், நடிப்புக் கலையின் உச்சிக்கே சிவாஜி சென்றுவிடுகிறார் என்றுதான் சொல்வேன். நடிப்புக் கலைக்கு அவர் இலக்கணமாகவும் இலக்கியமாகவும் ஒருங்கே திகழ்கிறார். ஆனால் இன்றைய சூழ்நிலையில் சிவாஜி தம்மை ரொம்பவும் இளைஞனாகக் காண்பிக்கும் பாத்திரங்களில் தோன்றுவதைக்காட்டிலும் நடுத்தர வயது காரெக்டர்களில் வருவதே நல்லது. அப்போது அடக்கமான, இயல்பான காதல் காட்சிகளில் நடித்தால் கூட அது, அவரது நடிப்புத் திறமையையும், புகழையும் அதிகரிக்கச் செய்யும். குறைக்காது.

கதாநாயகன், கதாநாயகியுடன் கட்டிப் பிடித்துப் புரளுதல், ஓடுதல் போன்றவை இளம் நடிகர்கள்

இதை மறந்து ஒரு பண்பட்ட நடிகர் தமது இமேஜ் பாதிக்கப்படும், குறையும் என்பதால் வயதுக்கும் தோற்றத்துக்கும் ஒவ்வாத பாத்திரங்களை ஏற்பது நல்லதல்ல. உண்மையில் இதுதான் இமேஜ் பாழாகக் காரணமாகிறது.

இரட்டை வேடம் அல்லது மூன்று வேடங்களை ஒருவரே ஏற்று நடிப்பது இன்று சகஜமாகி விட்டது. இப்படிச் செய்தால், எந்தப் பாத்திரத்திலும் சோபிக்க முடியாது. ஒரே பாத்திரத்தை நன்றாக 'ஸ்டடி' செய்து நடித்தால், கதா பாத்திரமும் பெருமை அடையும். அதைச் செய்யும் நடிகரும் பெருமை அடைவார்.



பார்க்கப்போனால் ஒரு படத்தில் சிறிய வேடமேற்று வருபவர் கூட படத்தில் உள்ள எல்லோரையும் நடிப்பாற்றலால் சாப்பிட்டு விடலாம். உதாரணம் 'கோல் மால்' இந்திப் படத்தில் மாமனாராக வரும் உத்பால்தத்.
ஹாலிவுட் நட்சத்திரங்களான லீ மார்வின், பால் நியூமேன், யூல் புருன்னர், தற்போது பிரபலமாகியுள்ள டஸ்டின் ஹாஃப்மேன் போன்றோரும் என்னை ரொம்பவும் கவர்ந்தவர்கள். அவர்கள் தங்களுடைய வயதுக்கு ஏற்ற பாத்திரத்தை ஏற்று மக்கள் மனத்தில் நிலையான இடத்தைப் பெற்றவர்கள்.
நடிப்பிலே ஒரு சகாப்தம் ஏற்படுத்தியுள்ள சிவாஜி இனி இளம் கலைஞர்களை முன்னேறச் செய்யலாம். தம்மைப் பொறுத்த மட்டில் பார்முலா முறைப்படி இல்லாத வித்தியாசமான பாத்திரங்களை ஏற்று நடிப்புக் கலையை மேலும் உயர்த்தித் தாமும் உயர்வார் என்று எதிர் பார்க்கிறேன்.
நான் அவரது ரசிகை. அவரோடு நடிக்கக் கிடைத்த சந்தர்ப்பங்களைப் பெருமையாக எண்ணுபவள். ஆயினும் அவரது சமீபத்திய சில தமிழ்ப் படங்களையும் அவை பெற்ற வரவேற்பையும் பார்க்கும்போது இந்த விஷயங்களைக் கூறத் தோன்றியது. இவற்றை அலட்சியப்படுத்தினால் கஷ்டம்தான்.

பேட்டி: **சித்தி**

---




● எங்களுக்கு மாஸ்கோ சென்று ஒலிம்பிக் பந்தயத்தைப் பார்க்க வசதியில்லை. ஆனால் ஒலிம்பிக்கில் கலந்துகொண்ட திருப்தியைக் கல்கியின் ஒலிம்பிக் ஸ்பெஷல் தந்துவிட்டது.
சென்னை 32 — என். தேவகி நடராஜன்

● முன்னறிவிப்பு இல்லாமல் 'ஒலிம்பிக்' ஸ்பெஷல் மலரை வெளியிட்டு என்னை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்திவிட்டீர்கள். மாஸ்கோ ஒலிம்பிக்கின் மொத்தச் செலவு 1560 கோடி ரூபாய் என்பதையும் குறிப்பிட்டிருக்கலாமே.
தடுத்தலாங்கோட்டை — எல். வாசுகி

● ஒலிம்பிக் பந்தயப் பகிஷ்கரிப்பு ஒரு கேலிக்கூத்து. அதைச் செம்மையாகச் சாடும் வாசகர் சிலரது அபிப்பிராயத்தைப் பிரசுரித்திருக்கலாம்.
மைசூர் — சி. நாச்சிமுத்து

● கல்கி 'ஒலிம்பிக் சிறப்பிதழ் எதிர்பார்த்ததைவிடச் சிறப்பாக இருந்தது. ஆனால் ஒரு பெருங் குறை. இந்திய ஹாக்கி பற்றி விரிவாகக் குறிப்பிட மறந்தது ஏனோ?
விருத்தாசலம் — 'கபில்தாசன்'

● அட்டைப் படச் சித்திரங்கள் வரைந்துள்ள ஓவியர் நடனத்துக்கு எமது பாராட்டுக்கள். உமாபதி ஜோக்ஸ்களுக்கும் பஸ்ட் மார்க்.
அருப்புக்கோட்டை — எம். தங்கவேல்

● இந்த வாரம் அட்டைப் படத்தை மிகவும் ரசித்தேன். ஒவ்வொரு வாரமுமே ஏன் ஜோக்குகளை நீங்கள் அட்டைப் படத்தில் வெளியிடக் கூடாது?
சென்னை 1 — ஆர். விநாயகம்

● ஒரே ஒரு நிமிஷம் என்ற தலைப்பில் தொழுநோய் பற்றிய தலையங்கம் எங்களைப் பல நிமிஷங்கள் சிந்திக்க வைத்துவிட்டது. தொழு நோயை அகற்ற கல்கி எடுத்துக் கொண்ட இந்தச் சீரிய முயற்சி பாராட்டத் தக்கது.
மதுரை — ஆர். சுமதி

● 'செய்திகள் வாசிப்பது செம்பியன்' என்பதை விடத் தலைப்பு 'செய்திகள் விமரிசிப்பது செம்பியன்' என இருந்தால் பொருத்தமாக இருக்கும்.
சென்னை 33 — வெ. சந்தானம்

● சென்ற இதழில் 'செக்ஸ் செய்திகள் வாசிப்பது செம்பியன்' என்று தலைப்புக் கொடுத்திருக்கலாம்.
சிவகாசி — இரா. பாஸ்கரராஜ்

● சமீபத்தில் எங்கள் ஊரில் திருடனைப் பிடிக்கச் சென்ற போலீஸ்காரர் திருடனால் கத்தியால் குத்தப்பட்டு மரணமடைந்த செய்தியைக் குறிப்பிட்டு செம்பியன் எழுதியது அனைவரது நெஞ்சத்தையும் நெகிழ்விப்பதாக இருந்தது. நன்றி.
சிவகாசி — வ. ரெங்கசாமி

● நேரில் சென்று பார்த்துப் பேசி எழுதியிருக்கும் ''ஒரு கிராமம் வழிகாட்டுகிறது'' கட்டுரை படித்ததும் பெரிதும் மகிழ்ந்தேன். கிராம மக்களுக்கு டி. எஸ். பி. மனோகரன் அளித்த ஒத்துழைப்பு வெகுவாக என் மனத்தை நெகிழச் செய்தது.
உத்திரமேரூர் — தாமஸ்

● இவ்வார இதழில் இரா. கந்தையா எழுதிய துணுக்குக்கு விளக்கம்:
அழைப்பிதழில் அச்சிடப்படும் வரவேற்பு புது மணமக்களுக்குத் தரப்போகும் வரவேற்புதானே தவிர வருபவர்களை வரவேற்கும் நிகழ்ச்சி அல்ல.
வேலூர் — சண்முகம்

# கற்பழிப்பு: சட்டமும் சமுதாயமும்!

போலீஸ் நிலையத்தில் மதுரா என்ற அரிசனப் பெண்ணை இரண்டு காவல் துறையினர் கற்பழித்தனர் என்று ஒரு செய்தி.

உத்திரப் பிரதேசத்தில் மாயா என்ற பெண்ணைக் காவல் துறையினர் நிர்வாணமாகத் தெருவில் நடத்திச் சென்று போலீஸ் நிலையத்தில் கற்பழித்தனர் என்று மற்றொரு செய்தி. நாடு முழுவதும் இவை பற்றி அதிர்ச்சியுற்றவர்களின் பேச்சு, பாராளுமன்றத்தில் ஏகப்பட்ட கேள்விகள்.

தொடர்ந்து 'கற்பழிப்பு'பற்றிய பல செய்திகள் ஒன்றன் பின் ஒன்றாகப் பத்திரிகைகளில் பிரசுரமாகிக் கொண்டே இருக்கின்றன.

வேதனையால் மனம் குமுறுகிறது.

திடீரென நம் நாட்டில் காமுகர்கள் பெருகி விட்டார்களா? காவல் துறையினரே தவறுகள் செய்யும்போது நமது பெண்கள் பாதுகாப்புக்கு யாரை நாட முடியும்? சட்டம் என்ன சொல்கிறது? இந்த அநீதிக்கு எப்படி முடிவு கட்டலாம்? — போன்று பலவிதமான கேள்விகள் பிறக்கின்றன.

சிறந்த வழக்கறிஞரும், பெண் வழக்கறிஞர்கள் சங்கக் காரியதரிசியும், லயன்ஸ் கிளப் (மேற்கு) தலைவருமான திருமதி அம்மு பாலசந்திரனைச் சந்தித்துக் கேட்டபோது:

"நாம் பல துறைகளில் எவ்வளவோ வளர்ச்சியடைந்தாலும் நமது சமுதாயத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சம உரிமை அளிக்கும் மனப்பாங்கு இன்னும் வளரவில்லை. பெண்களைவிட தாங்கள் உயர்ந்தவர்கள் என்கிற 'male ego' இன்னும் நமது சமுதாயத்தில் ஆழப் பதிந்து கிடக்கிறது. அதன் அடிப்படையால் பெண்களுக்கும் உள்ளம் உண்டு, அவர்களுக்கும் விருப்பு வெறுப்புகள், எதிர்பார்ப்புகள் எல்லாம் உண்டு என்று பெரும்பாலான ஆண்கள் எண்ணுவதே இல்லை. பெண்ணை ஒரு போகப் பொருளாக மட்டுமே நினைக்கும் ஆண்களின் மனப்பாங்கு இத்தகைய குற்றங்களுக்கு வழி வகுக்கிறது. அதோடு காம வெறியும் இணையும்போது இத்தகைய அநீதிகளுக்குப் பெண்கள் ஆளாகிறார்கள்.

கொலைக் குற்றத்தை விடக் கொடுமையானது கற்பழிப்புக் குற்றம். 'பெண்கள் தங்களுடைய கற்புக்குப் பங்கம் வராமல் தைரியமாக நடமாட முடியாது' என்ற நிலையை விடக் கேடுகெட்ட நிலைக்கு ஒரு நாடும் சமுதாயமும் தாழவே முடியாது. சட்ட ரீதியாகவும் சமுதாய ரீதியாகவும் சில முக்கியமான நடவடிக்கைகளை நாம் உடனடியாக மேற்கொண்டாலொழிய இக்கொடுமைக்கு முடிவுகாண முடியாது!

சட்ட ரீதியாகப் பார்ப்போம்:

பெரும்பாலான கற்பழிப்பு வழக்குகளில் பெண்ணின் அனுமதியுடன்தான் குற்றம் சாட்டப்பட்டவன் அவளுடன் உறவு கொண்டான் என்று தீர்ப்பு ஆகிவிடுகிறது. பெண்ணின் உடலில் சிறாய்ப்புகள், காயங்கள் போன்றவை இல்லாததால் அவள் எதிர்த்துப் போராடவில்லை என்று முடிவு கட்டி விடுகின்றனர். அதுவே அவள் சம்மதித்தாள் என்பதற்கும் ஆதாரமாகக் கொள்ளப்படுகிறது. 'உயிருக்கோ உடலுக்கோ ஆபத்து என்ற பயமுறுத்தலுக்குப் பயந்து அளிக்கப்படும் சம்மதம் சம்மதமாகாது' என்று சட்டம் கூறினாலும் நடைமுறையில் இது கவனிக்கப்படுவதில்லை. புற சாட்சிகளுக்கே முக்கியத்துவம் தரப்படுகிறது.

'உனது கணவனைக் கொன்றுவிடுவோம், குழந்தையைக் கொன்றுவிடுவோம்' என்று பயமுறுத்தி ஒரு பெண்ணைப் பணியச் செய்துவிட முடியும். இது எப்படிச் சம்மதமாகும்?

இவ்விஷயத்தில் நமது சட்டத்தில் சில முக்கிய திருத்தங்கள் செய்தாக வேண்டும்.

நமது சட்டப்படி ஒருவன் மீது ஏதேனும் குற்றம் சாட்டப்பட்டால் அவன் குற்றவாளி என்று நிரூபிக்க வேண்டியது குற்றம் சாட்டுபவரது கடமையாகும். இது மற்ற பல குற்றங்களுக்குச் சரி. ஆனால் கற்பழிப்புக் குற்றத்துக்கு நமது நாட்டில் பொருந்தாது. தான் ஒருவனால் கற்பழிக்கப்பட்டதாக ஒரு பெண் வழக்குப் போட்டால் தான் கற்பழிக்கப்பட்டதாக அவளே நிரூபிக்க வேண்டும் எனில் அது அவளுக்கு எவ்வளவு துன்பமளிக்கும் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

'கற்பழிக்கப் பட்டவள்' என்ற அடைமொழி நமது சமுதாயத்தில் ஒரு சாபக்



✖ திருமதி அம்மு பாலசந்திரன்

கேடாகக் கருதப்படுவது நாம் அறிந்ததே. எனக்குத்தெரிந்த ஓர் இடத்தில் ஒரு பெண் கற்பழிக்கப்பட்டாள். அவள் வசதியான குடும்பத்துப் பெண்ணுன போதிலும் கூட அவளை மணக்க எவருமே முன் வரவில்லை. பலரும் அவளுடன் நெருங்கிப் பழகக்கூடக் கூசி ஒதுங்கினர்.

ஹைதராபாத்தில் ஒரு நிகழ்ச்சி. கல்லூரித் தேர்வின் மத்தியில் 'டாய்லெட்'டுக்கு வந்த ஒரு பெண்ணை மறித்து நான்கு மாணவர்கள் கற்பழித்து விட்டனர். அபகீர்த்திக்குப் பயந்து பெற்றோர் வழக்குத் தொடுக்க வில்லை. ஆனும் செய்தி கல்லூரியில் பரவி அப் பெண்ணைப் பலரும் கேலி செய்யத் தொடங்கினர். படிப்பை நிறுத்திவிட்டுப் பெற்றோர் சென்னைக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு வரும் நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது.

இம்மாதிரியான சமுதாயச்சூழலில் எந்தப் பெண்ணும் அனுவசியமாகக் கோர்ட்டுக்குப் போய்த் தான் கற்பழிக்கப்பட்டதாக வழக்குத்தொடுக்க மாட்டாள்.

இதனை மனத்தில் கொண்டு ஒரு பெண் தான் குறிப்பிட்டவனுல் கற்பழிக்கப்பட்டதாக வழக்குத் தொடுத்தால், அதற்கு மருத்துவப் பரிசோதனை போன்றவற்றில் போதிய ஆதாரங்கள் கிடைக்குமாளுல் அவளது கூற்றை நீதி மன்றம் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஏற்று, தான் குற்றம் செய்யவில்லை என்று நிரூபிக்கும் பொறுப்பை, குற்றம் சாட்டப்பட்டவன் மேல் சுமத்த வேண்டும்.

கற்பழிப்புக் குற்ற வழக்குகள் மிக மிக ரகசியமான முறையில் நடத்தப்பட வேண்டும். அந்திக்கு ஆளான பெண்ணைப் பற்றிய விவரங்களை வெளியிடவே கூடாது. குற்றவாளி தண்டிக்கப்படும்போது 'குறிப்பிட்ட குற்றத்துக்காகக் குற்றவாளிக்கு இன்ன தண்டனை வழங்கப்பட்டது' என்று மட்டும் செய்தி வெளியிட வேண்டும்.

மனைவி : "வரவர உங்களுக்குக் காது ரொம்ப மந்தமாய்போச்சு!"
கணவன் : "ஏன்...?"
மனைவி : "உளுத்தம் பருப்பு வாங்கிவரச் சொன்னு உளுத்துப் போன பருப்பு வாங்கிவந்திருக்கிறீங்களே!"
- உ. ராஜாஜி

கற்பழிப்புக் குற்றத்துக்கு விதிக்கப்படும் குறைந்தபட்ச அதிகபட்சத் தண்டனைகளை மேலும் கடுமையாக்க வேண்டும். தற்போதைய சட்டப்படி அதிகபட்சம் ஆயுள் தண்டனை என்று உள்ளது. ஆயுள் தண்டனை சுமார் 12 வருட காலத்திலேயே முடிந்து விடுகிறது. இது போதவே போதாது. குரூரமான சில கற்பழிப்புக் குற்றங்களுக்கு மரண தண்டனை கூட விதிக்கலாம். இத்தகைய குற்றங்களில் காவல் துறையினரே ஈடுபடுவார்களேயானுல் தண்டனை மிகக் கடுமையாக இருக்க வேண்டும். எந்தப் பெண்ணுவது பொய்யாக வழக்குத் தொடுத்து அது நிரூபணமானுல் அவளுக்கும் கடுமையான தண்டனை விதிக்க வேண்டும்.

பத்திரிகைகள், தினசரிகள் பற்றி இத் தருணம் ஒன்று கூற ஆசைப்படுகிறேன்.

'கற்பழிப்பு' சம்பந்தமான செய்திகளை வெளியிடும்போது பெரும்பாலான பத்திரிகைகள் ஒரு சமுதாயக் கொடுமையை எதிர்க்க வேண்டும் என்கிற நோக்கில் செய்தியை வெளியிடாமல், பத்திரிகை படிப்பவர்களின் உள்ளத்தில் விரசத்தைத் தூண்டி, பத்திரிகை விற்பனையை உயர்த்த வேண்டும் என்ற நோக்கில் ஏதோ கதை போல் செய்தியை வெளியிடுகின்றனர். இம்மாதிரி இவர்கள் செய்தியை வெளியிடும் விதத்துக்குப் பயந்து, கற்பழிப்புக்கு ஆளாகும் சில பெண்கள் வழக்கை நீதி மன்றத்துக்கு எடுத்து வரவே தயங்குவார்கள் என்று பத்திரிகைக்காரர்கள் நினைத்துப் பார்ப்பதே இல்லை!

கற்பழிப்பு என்பது பெண்களைப் பொறுத்த சமுதாயப் பிரச்னை மட்டுமல்ல. சுய கௌரவம் உள்ள ஒவ்வொரு ஆணும் கூனிக் குறுகி வெட்கப்பட வேண்டிய ஓர் அம்சம்."

பேட்டி: நாயகன்

புகைப்படம்: மன்னை மூர்த்தி

## கன்னத்தில் ஓர் அறை!

குஜராத்திகளிடையே அண்ணியைக் கன்னத்தில் அறையும் அதிசயப் பழக்கம் இருக்கிறது. திருமணத்தைப் போலவே சீமந்தத்தையும் மிகச் சிறப்பாக நடத்துகின்றனர் குஜராத்தியர். சீமந்தத்தின் போதுதான் இந்தக் கன்னத்தில் அறையும் சடங்கைச் செய்கிறார்கள்.

அண்ணி முதலில் கணவனின் தம்பியின் கன்னத்தில் அறைய வேண்டும். பின்னர் அண்ணியின் கன்னத்தில் கொழுந்தன் அறைய வேண்டும்.

இந்தப் பழக்கத்திற்கு விசேஷ காரணம் இல்லா விட்டாலும் வீட்டிற்கு வந்த மணப்பெண் ஒரு குழந்தைக்குத் தாய் என்பதோடு முதிர்ந்த இடத்தும் பெண் என்ற உரிமையில் இதைச் செய்வதாகச் சொல்லப் படுகிறது.

- குஜராத்தி நண்பர் கூறக் கேட்டவர்

- பிரியா பாநு

# சொர்க்கம் திரும்பினேன்

ரமாமணி சுந்தர்

தில்லியில் வஸந்த விஹார், டிஃபன்ஸ் காலனி, கைலாஷ் காலனி போன்ற ''பாஷ்'' காலனிகளில் இரண்டு மூன்று படுக்கை அறைகள் கொண்ட வீடுகளில் ஆயிரம் ரூபாய்க்கு மேல் வாடகை கொடுத்துக் கொண்டு குடியிருக்கிறோம் என்று சொல்லிக் கொள்வது பெருமைக்குரிய விஷயம். சமூகத்தில் அவர்களுடைய அந்தஸ்தை நிர்ணயிக்கும் அளவுகோல். சாதாரண மக்கள், அதாவது நடுத்தர வகுப்பினர் வசிக்கும் தேவ நகரில், அதுவும் இரண்டே அறைகள் கொண்ட பார்சாத்தில் குடியிருக்கும் எனக்கு, இப்படிப்பட்ட நாகரிகக் காலனிகளில் சிறிது காலமாவது வசித்துப் பார்க்க வேண்டும் என்று கொள்ளை ஆசை. முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டால் முடியுமா?

ஆனால் என்ன ஆச்சரியம் பாருங்கள்! அதிர்ஷ்ட தேவதை ஒரு நாள் எங்கள் வீடு தேடி வந்தாள். ஒரு நாள் மாலை அலுவலகத்திலிருந்து வீட்டுக்கு வரும்போது உற்சாகமாக விசில் அடித்தபடி நான்கு படிகளை ஒன்றாகத் தாவி மூச்சிரைக்க மாடி ஏறி வந்த என் கணவர், ''ஒரு குட் நியூஸ்'' என்று அறிவித்தார்.

''என்ன, சம்பள உயர்வு ஏதாவது கிடைத்திருக்கிறதா?'' என்று அலட்சியமாகக் கேட்டேன்.

''போமே பைத்தியம்! பிச்சைக் காசு இருபது ரூபாய் சம்பள உயர்வுக்காக இவ்வளவு சந்தோஷப்படுவேனா?''

''ஒருவேளை தப்பித் தவறிப் பிரமோஷன் ஏதாவது கிடைத்து விட்டதா?''

''அதுவும் இல்லை. நாம் அடுத்த மாதம் கைலாஷ் காலனியில் மூன்று பெட்ரூம் வீடு ஒன்றுக்குக் குடிபோகிறோம்! வாடகை ஆயிரம் ரூபாய்.''

''என்னது? ஆயிரம் ரூபாய் வாடகையா? அப்போ, சம்பளத்தை யெல்லாம் வாடகையாகக் கொடுத்துவிட்டுக் காற்றைக் குடித்துக் கொண்டு இருக்கப் போகிறோமா?'' என்று என் கணவரை அதட்டினேன்! (வழக்கம் போல்!)

''விஷயத்தை முழுவதும் கேள். அந்த வீட்டுக்கு ஆயிரம் ரூபாய் என்ன, ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் கூடக் கொடுக்கலாம். ஆனால் நாம் வாடகை ஒன்றும் கொடுக்க வேண்டாம். என் மானேஜரின் சொந்த வீடு அது. அவர் அமெரிக்காவில் இருக்கும் தம் குழந்தைகளுடன் ஒரு வருட காலம் இருந்துவிட்டு வரப் போகிறார். அவர் திரும்பி வரும்வரை நம்மை வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி யிருக்கிறார்.''



எனக்குச் சந்தோஷம் தாளவில்லை. முதல் வேலையாக அக்கம் பக்கத்தில் உள்ள எல்லோரிடமும் நாங்கள் கைலாஷ் காலனி மூன்று பெட் ரூம் வீட்டுக்குக் குடி போகிறோம் என்று தம்பட்டம் அடித்துவிட்டு வந்தேன்.

**வீ**டு மாற்றுவதற்காக மூட்டை கட்டும் படலம் ஆரம்பித்தது. அப்படி என்ன பிரமாதமான சாமான்கள் எங்கள் வீட்டில்! கொஞ்சம் கனத்த சரீரம் உள்ள யாராவது உட்கார்ந்தால் குடைசாயும் ஒரு சோபா கம் பெட், என்றைக்கோ பென்ஷன் வாங்கியிருக்க வேண்டிய மோடாக்கள், சார்ப்பாய் என்று சொல்லப்படும் ஏழைக் கோலம் பூண்ட கட்டில்கள் — இவற்றையெல்லாம் தூக்கிக் கொண்டு பாஷ் வீட்டுக்குப் போவதாவது! சே! சே! கொஞ்சம் கூட நன்றாக இருக்காது. அதனால் முக்கியமாகச் சமைத்துச் சாப்பிடுவதற்கு வேண்டிய சாமான்களை மாத்திரம் எடுத்துக் கொண்டு மற்றவைகளைத் தவிட்டுக்கு விற்றுவிட்டுக் கைலாஷ் காலனிக்குப் போய்ச் சேர்ந்தோம்.

நான் வீட்டில் இருக்கும் ஷோகேஸ்களையும் ஃபர்னிச்சர்களையும் பார்த்து மயங்கியே போய்விட்டேன். என் மூன்று வயதுப் பெண் உமாவோ ஒவ்வொரு படுக்கை அறையுடனும் இணைக்கப்பட்டிருக்கும் பல நிறங்களில் உள்ள பாத் ரூம்களைக் கூடத் திறந்து பார்த்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டாள்.

மறு நாள் காலை புடவையைத் தூக்கிச் செருகிக்கொண்டு வாசல் வராந்தாவைப் பெருக்கிக் கொண்டிருந்தேன். எதிர் வீட்டு கேட்டைத் திறந்து கொண்டு பணக்காரக் களை சொட்டும் ஓர் அம்மாள், இடுப்பில் சாவிக் கொத்தும், காதுகளில் பிளேட்டினத்தில் பொதித்த வைரத் தோடும், கைகளில் ஒரு டஜன் தங்க வளையல்களுமாக எங்கள் வீட்டை நோக்கி வந்தாள்.

''மேம் சாஹிப்பை (எஜமானி அம்மாள்) கூப்பிடு'' என்று என்னைப் பார்த்து அதிகாரத் தோரணையில் கட்டளையிட்டாள்.

எனக்கோ அவமானம் தாங்க முடியவில்லை. மென்று விழுங்கிக் கொண்டு ''உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று நடுங்கும் குரலில் கேட்டேன்.

''சுத்த அதிகப்பிரசங்கியாக இருக்கிறாயே! மேம் சாஹிப்பைக் கூப்பிடச் சொன்னால்? உடனே கூப்பிட வேண்டியதுதானே உன் வேலை'' என்று கூச்சல் போட்டாள்.

பொங்கி வரும் கண்ணீரைச் சிரமப்பட்டு அடக்கிக்கொண்டு, நான் அந்தவீட்டு எஜமானி என்பதை ஒரு வழியாகச் சொல்லி முடித்தேன். ஏதோ அற்பப் புழுவைப் பார்ப்பது போல், துடைப்பக்கட்டையும் கையுமாக நின்ற என்னை அலட்சியமாகப் பார்த்தாள்.

''எங்கள் ஃபோன் ரிப்பேராகி யிருக்கிறது. உங்கள் ஃபோனை உபயோகிக்கலாமா?'' என்று அதிகாரம் கொஞ்சமும் குறையாத குரலில் கேட்டாள்.

''எங்கள் வீட்டில் ஃபோன் கிடையாது'' என்று நான் சொன்னவுடன் ''ஃபோன் கூட வைத்துக்கொள்ள வகையில்லாதவர்களோடு என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது!'' என்பது போல், விருட்டென்று கேட்டைத் திறந்து கொண்டு திரும்பிப் போய்விட்டாள் அந்த அம்மாள்.

மாலை நான்கு மணிக்கெல்லாம் வீட்டில் உடுத்திக் கொண்டிருந்த பழைய புடவையுடன் பால் டிப்போவுக்குப் போனேன். கியூவில் பொதுவாக ஆயாக்களும், மூண்டு என்று சொல்லப்படும் மலை தேசத்து வேலைக்காரப் பையன்களும்தான் நின்று கொண்டிருந்தார்கள். க்யூவில் எனக்கு முன்பு நின்று கொண்டிருந்த ஆயா என்னைப் பார்த்து அறிமுகப் புன்னகை ஒன்றை உதிர்த்துக் கொண்டே, ''எந்த வீட்டில் வேலைக்குச் சேர்ந்திருக்கிறீங்க?'' என்று விசாரித்தாள். எனக்குக் கெட்ட கோபம் வந்தது.

''ஒரு வீட்டிலும் வேலைக்கு வரவில்லை. இங்கு குடிவந்திருக்கிறேன்'' என்று பட்டென்று பதில் சொன்னேன்.

''எந்த வீட்டு ஸர்வென்ட்ஸ் குவாட்டர்ஸில் குடியிருக்கிறீங்க?'' என்று அவள் கேட்டவுடன் நான் என்னை ஒரு முறை நன்றாகப் பார்த்துக் கொண்டேன். நிச்சயமாக என் புடவையைப் பார்த்தால், நான் தலையில் அடித்துச் சத்தியம் செய்தால் கூட, நான் கைலாஷ் காலனி மூன்று பெட்ரூம் வீட்டில் குடியிருக்கிறேன் என்பதை யாரும் நம்ப மாட்டார்கள்.

அன்று இரவு என் கணவர் ஆபீஸிலிருந்து வந்தவுடன் ஒரே ரகளை பண்ணிவிட்டேன். குறைந்தபட்சம் நான்கு அமெரிக்கன் ஜார்ஜெட் புடவைகளாவது உடனடியாக வாங்கித் தரவேண்டும் என்று அடம் பிடித்தேன். தற்பொழுது நான் வீட்டில் உபயோகிக்கும் சேலைகளை உடுத்திக் கொண்டு பால் டிப்போவுக்கோ, கடைத் தெருவுக்கோ போக முடியாது என்பதை ஒரு வழியாக என் கணவரை உணர வைத்து மறுநாளே கடைக்குப்போய் ஐந்நூறு ரூபாய்க்குப் புடவைகள் வாங்கிக் கொண்டு வந்தேன்.

மூன்று வயது நிரம்பிய என் பெண் உமாவின் விஷமம் பொறுக்க முடியாது. ஏதாவது நர்ஸரிப் பள்ளியில் அவளைச் சேர்க்கலாம் என்று முடிவெடுத்தேன். அருகில் உள்ள நர்ஸரிப் பள்ளியில் போய் விசாரித்தால்

---

கிளார்க்: ''எதுக்கு ஸார் நம் கம்பெனி ரகசியங்களைப் போட்டி கம்பெனிக்கு உளவு சொல்லச் சொல்றீங்க...?''

மானேஜர்: ''அவர்களையும் போண்டியாக்கத் தான்!''

உ. ராஜாஜி



கூசாமல் நர்சரி வகுப்புக்கு மாதம் நூறு ரூபாய் பீஸ் கேட்டார்கள். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. தேவநகர் போன்ற இடங்களில் உள்ள பள்ளிகளில் முப்பது ரூபாய்தான் பீஸ். அதற்காக மூன்று வயதுக் குழந்தையைத் தொலைவில் உள்ள பள்ளிக்கு அனுப்ப முடியுமா? வேறு வழியின்றி நூறு ரூபாய் பீஸ் கட்டி அடுத்த தெருவில் உள்ள நர்ஸரிப் பள்ளியில் சேர்த்தேன்.

இப்படியே ஒவ்வொரு செலவும் அதிகரித்துக்கொண்டே போயிற்று. கைலாஷ் மார்க்கெட்டுக்குப் போனால் சாமான்கள் எல்லாம் யானை விலை, குதிரை விலையாகத்தான் இருந்தன. மறந்து போய்க்கூடக் கடைகளில் பேரம் பேச முடியாது.

எனக்குப் பேச்சுத் துணைக்குக் கூட அக்கம் பக்கத்தில் ஒருவரும் கிடையாது. எல்லோருமே தன்னை விட்டால் கிடையாது என்பது போல் கர்வமாக இருந்தார்கள். ஆனால் என்ன இருந்தாலும், குழந்தைகளுக்கு அவ்வளவு தூரம் ஏற்றத் தாழ்வுகள் எல்லாம் புரியாததால், என் பெண் உமா பக்கத்தில் உள்ள குழந்தைகளைச் சிநேகம் பண்ணிக் கொண்டு அவர்களுடன் விளையாட ஆரம்பித்தாள். மற்ற குழந்தைகள் எல்லாம் பிரமாதமாக உடைகள் போட்டுக் கொண்டிருக்கும்பொழுது, உமா மட்டும் நான் கரோல்பாக் ஃபுட்பாத்தில் வாங்கிய கவுன்களைப் போட்டுக் கொள்வது எனக்கு ரொம்ப அவமானமாக இருந்தது.

கைலாஷ் மார்க்கெட்டில் உள்ள நாகரிகக் கடை ஒன்றுக்குப் போய், நான்கைந்து உடைகளை வாங்கிக் கொண்டு வந்தேன். மூன்று வயதுக் குழந்தையின் உடை ஒவ்வொன்றும் கிட்டத்தட்ட நூறு ரூபாய்.

என் பெண்ணின் பிறந்த நாள் வந்தது. தேவநகரில் குடியிருக்கையில் அவள் பிறந்த தினத்தன்று அக்கம் பக்கத்தில் உள்ள குழந்தைகளுக்கு மிட்டாய்கள் வாங்கிக் கொடுப்போம். ஆனால் இந்த வருடம் மற்றக் குழந்தைகள் வீட்டில் கொண்டாடுவது போல் நாமும் பிறந்த நாளைக் கொண்டாட வேண்டும் என்று என் பெண் ஆசைப்படவே, கேக் எல்லாம் வாங்கித் தடபுடலாகக் கொண்டும்படி ஆயிற்று. பார்ட்டிக்குச் செலவு இருநூறு ரூபாய். அதைத் தவிர பிறந்த நாள் உடை வேறு நூறு ரூபாய்க்கு வாங்கினேம்.

இப்படியாக நாங்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் குருவி சேர்க்கிறாற்போல் பாங்கில் சேமித்து வைத்திருந்த பணமெல்லாம் கரைந்து போயிற்று. நல்ல வேளை வீட்டின் சொந்தக்காரர் வெளி ஊரிலிருந்து திரும்பி வந்தாரோ, பிழைத்தோமோ!

தேவநகரிலேயே திரும்பவும் வீடு பார்த்துக்கொண்டு குடிபோய்விட்டோம். ஏதோ தேவலோகத்துக்கே வந்துவிட்டாற்போல் இருந்தது எனக்கு. இங்கு இருக்கும் சுதந்திரமும் சந்தோஷமும் எனக்கு அந்த பாஷ் காலனியில் இருந்ததா? பழைய புடவையைக் கட்டிக்கொண்டு பால் டிப்போவுக்குப் போகலாம், கடைத் தெருவுக்குப் போகலாம். புடவையைத் தூக்கிச் செருகிக்கொண்டு வீடு பெருக்கலாம். இது அல்லவோ வாழ்க்கை!




வெண்மேகம் வானத்தைத் தழுவல் போலும்
விழியிரண்டை நல்லிமைகள் காத்தல் போலும்
பண்களையே பாடல்களை ஏற்றல் போலும்
பாவையுன்றன் கரத்தாலே என்னை யேற்றுக்
கண்ணொளியின் கதகதப்பில் கவிதை சொல்க...
கவலையெல்லாம் எனைவிட்டுப் போகச் செய்யப்
பெண்மணியே! பேரழகே...! உன்றன் கண்கள்
பெய்யட்டும் அன்புமழை என்றன் மேலே...!

கண்ணசைந்தால் அவ்வசைவில் என்றன் நெஞ்சில்
கவியசையும்...! கற்பனைகள் இதழ்விரிக்கும்!
உன்னங்கம் ஒவ்வொன்றும் அசைந்தால் பாடல்
உற்பத்தி யாகிவரும்! துன்பம் சாகும்...!

புன்னகைப்பூ விரிந்தால்என் மனத்து வண்டு
பூரிப்பாய்த்தேன் குடிக்கும்! இன்பங் காணும்
என்னன்பே! பேரழகே! என்னைப் பார்நீ...!
ஏக்கங்கள் தீர்வதற்கே என்னுள் சேர் நீ!

பருவத்தின் ஊர்வலமாய் அமைந்த மேனி...!
பன்னீர்ப்பூப் பெண்ணேநீ இன்பக் கேணி!
இருவுருவப் பொற்சிற்பே தங்கத் தோணி!
நீநின்ற நானுடன் முகப்பூத் தேனீ!
உருவாகும் கற்பனைகள் கவிதை யாக
உன்பேச்சே எழுத்தாணி...! நீஎன் நெஞ்சில்
வருகைதந்த கலைவாணி என்ப தாலே
வரலாற்றைப் படைப்பதற்கே இங்கே வாநீ...!







# குழந்தைகள் ஜாக்கிரதை!










Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone : 431543) Editor: K. Rajendran



அருள்மிகு

# சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

## திருத்தணிகை

செங்கை மாவட்டம் — தமிழ்நாடு

# ஆடிக் கிருத்திகை பெருவிழா

## 4-8-80 முதல் 6-8-80 வரை

**(4-8-80 திங்கட்கிழமை ஆடிக்கிருத்திகை)**

திருமுருகன் ஆறுபடை வீடுகளில் ஐந்தாம்படை வீடான இத்தணிகையம்பதியிலே எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான் இத்தலத்தை நாடிவரும் பக்தர்களுக்கும், நினைப்பவர்களுக்கும் நினைத்ததை அளிக்கும் வல்லமை உடையவராகவும், வேண்டியவர்க்கு வேண்டியாங்கு அருள் வல்லவராகவும் பவரோக "வைத்தியநாதராகவும்" இருந்து அருள்மாரி வழங்குகிறார்.

இத்தகு சிறப்பு வாய்ந்த இத்தலத்தில் சிறப்புப் பெருவிழாவான ஆடிக் கிருத்திகை தெப்பத் திருவிழா 4-8-80 முதல் 6-8-80 வரை சீரும் சிறப்புடன் விசேஷ நாதஸ்வர இன்னிசைக் கச்சேரிகளுடன் நடைபெற உள்ளது. மேற்படி பெருவிழாவில் பக்தர்கள் மலர்க் காவடிகள் செலுத்துதல் தனிச்சிறப்பாகும்.

**விசேஷ நிகழ்ச்சிகள் :**

**4-8-80** கலைமாமணி நாமகிரிப்பேட்டை திரு. கே. கிருஷ்ணன் குழுவினர் — நாதசுரம்

**5-8-80** சென்னை ராதா, ஜெயலெக்ஷ்மி குழுவினர் — இன்னிசை

**6-8-80** மங்கள வாத்திய விஷாரத் கலைமாமணி திரு. ஷேக் சின்னமௌலானா குழுவினர் — நாதசுரம்

---

குறிப்பு: பக்தர்கள் சௌகரியத்தை முன்னிட்டு சகல ஏற்பாடுகளும் நல்ல முறையில் செய்யப்பட்டு உள்ளன. பக்தர்கள் தலைமுடி காணிக்கைகளை கொடுக்க திருக்கோயிலாரால் பல இடங்களில் தலைமுடி நிலையங்கள் நிறுவப்பட்டுள்ளன. மேற்படி திருக்கோயில் தலைமுடி நிலையங்களில் தங்கள் தலைமுடி காணிக்கைகளை கொடுக்க கேட்டுக் கொள்ளப்படுகிறது.

"நினைத்ததை அளித்திடும் மனத்தினை உருக்கிடும் வழித்துணை வந்திடும் திருத்தணி முருகனின் தண்ணருள் பெற்றிட வாரீர்! வாரீர்!" என அழைக்கின்றோம்.

**ஆலய நிர்வாகிகள்**

